

# குலோத்துங்கனின் கவிதைவளம்




முனைவர் செ.ரவிசங்கர்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF THAMIL STUDIES

# குலோத்துங்கனின் கவிதை வளம்

முனைவர் செ. ரவிசங்கர்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

[redacted]ச.குழந்தைசாமி அறக்கட்டளைச் சொற்பொழிவு
[redacted]றக்கட்டளை நிறுவியவர் : இராம்.ப.சாமி அவர்கள்)

[redacted]வரிசை எண் : 4 | நாள்: 20.12.2013

---

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | **குலோத்துங்கனின் கவிதை வளம்** |
| ஆசிரியர் | : | **முனைவர் செ. ரவிசங்கர்**<br>உதவிப் பேராசிரியர்<br>ஒப்பிலக்கியத்துறை<br>தமிழியற்புலம்<br>மதுரை காமராசர் பல்கலைக் கழகம்<br>மதுரை-625 021 |
| பொதுப்பதிப்பாசிரியர் | : | **முனைவர் நா. சுலோசனா**<br>உதவிப் பேராசிரியர்<br>தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில் நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை-600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில் நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை-600 113<br>தொலை பேசி எண். 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : | 759 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2013 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டிஎன்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 அளவு |
| பக்க எண்ணிக்கை | : | x + 126 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 60/- (ரூபாய் அறுபது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம்<br>144, தம்பு செட்டித் தெரு<br>சென்னை-600 001<br>தொ.பேசி. 044-25356166 |
| பாடம் | : | **கவிதை ஆய்வு** |


---

அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று.

*முனைவர் கோ. விசயராகவன், எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.*
*இயக்குநர்*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை 600 113*

## அணிந்துரை

உள்ளத்து உணர்வுகளை எடுத்துரைப்பது கவிதை ஆகும். சிறுகதை, புதினம் போன்ற இலக்கிய வடிவங்களை விடக் குறைந்த வரிகளில் ஆழமான கருத்தைப் பதியவைக்கும் திறன் வாய்ந்தது கவிதை. அத்தகைய வளம் வாய்ந்த கவிதையானது இளம் படைப்பாளர்களை ஊக்குவிக்கிறது எனலாம். ‘குலோத்துங்கனின் கவிதைவளம்’ எனும் இந்த நூலில் கவிஞர் குலோத்துங்கனால் பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு சூழல்களில் எழுதப்பட்ட கவிதைகள் அனைத்தும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. அறிவியலாய்ந்த அறிஞர் ஒருவர் தமிழாய்ந்த அறிஞராகத் தமிழ்கூறும் நல்லுலகில் அடையாளப்படுத்தப்படுகிறார் என்பதற்கு அவர் படைத்த நூல்களும், நூல்களின் மீது அமைந்த திறனாய்வுமே சான்றாக அமைகின்றன.

ஏழ்மை, வறுமை, சாதிய ஏற்றத்தாழ்வு, ஏற்றத்தாழ்வைக் களைவதற்கான வழிகள், காதல், மனிதநேயம், தமிழ்மொழி, இனம் மீது கொண்ட பற்று, ஈழத்தின் அவலம் எனக் கடந்த காலச் சமுதாயம், சமகாலச் சமுதாயம் என எண்ணிப் பார்க்கத் தவறாமல் அனைத்தையும் பாடுபொருள்களாகக் கொண்டு கவிதை படைப்பதில் வல்லவர் எனும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

சமநீதிப் பாற்கடலை மீண்டும் மீண்டும்
சாதி எனும் கயிறிட்டுக் கடைந்தீர்; மேலும்
அமுதேதும் காணவில்லை; சாதி நஞ்சு
அனல்போலப் பரவுதடா! அணைப்பாரில்லை

இக்கவிதை வரிகள் ‘இருட்டறையில் உள்ளதடா உலகம்’! எனும் புரட்சிக் கவிஞரின் கவிதைவரிகளை நினைவூட்டுவனவாக அமைகின்றன.

கவிஞரின் கவிதை வளத்தைப் பல தளங்களில் நின்று இந்நூல் ஆசிரியர் முனைவர் செ.ரவிசங்கர் ஆய்வு செய்து இந்நூலைப் படைத்துள்ளார்.

கவிஞர் பகுத்தறிவு நோக்கோடு சிந்தித்து மனித ஆற்றலை முன்னிறுத்திக் கவிதைகள் பல படைத்துள்ளார் என்பதை அவரது கவிதைகள் புலப்படுத்துகின்றன.

அறிவியல் நோக்கோடு சிந்தித்துப் படைக்கப்பட்ட கவிதையாக்கத்தினைப் பல நிலைகளில் விமரிசித்தும் பகுத்தும் தொகுத்தும் ஆய்ந்தும் எழுதப்பட்டது இந்நூல் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

இந்த அறக்கட்டளை நிறுவியவருக்கும், இச்சொற்பொழிவு நூலை எழுதியவருக்கும் எனது நன்றி கலந்த பாராட்டுகள்.

அறக்கட்டளையின் நான்காவது நூலாக இந்நூல் வெளிவருகிறது. எழுத்துருவைச் செப்பம் செய்து, சிறந்த முறையில் நூலாக்கம் செய்த அறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் நா. சுலோசனா அவர்களுக்கு எனது பாராட்டுகள்.

**தமிழும், தமிழ்நாடும் வாழ்ந்திட, அல்லும் பகலும் அயராது உழைத்து வரும் தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா** அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்துவரும் மாண்புமிகு பள்ளிக் கல்வி மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவர் **அமைச்சர் கே.சி.வீரமணி** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் **முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்

இந்த அறக்கட்டளை நூலினை மெய்ப்புத்திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், அறக்கட்டளை நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் ஒளியச்சுக் கோர்வை செய்த இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ சரவணா அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# முன்னுரை

'குலோத்துங்கன் கவிதைகள்' குறித்து அவரது அறக்கட்டளைச் சொற்பொழிவுக்காக என்னை அழைத்த போது நான் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன். காரணம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இருந்து அழைப்பு ஒன்று. மற்றொன்று வா.செ. குழந்தைசாமி அறக்கட்டளைப் பொழிவு. குலோத்துங்கன் என்னும் வா.செ. குழந்தைசாமி சாதாரண மனிதரல்லர். மனிதர்களில் உயர்ந்தவர், எண்ணங்களால் சிறந்தவர்.

வா.செ.குழந்தைசாமி என்ற உயர்ந்த பண்பாளரின் படைப்பினைப் படிக்க எனக்கு வாய்ப்பை நல்கியதற்காக இந்த அறக்கட்டளையின் பொறுப்பாளர் முனைவர் நா.சுலோசனா அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். நான் கவிதையில் ஆய்வு செய்தவன். மணிக்கொடியில் இருந்து இன்று வரையில் கவிதைகளை வாசித்திருக்கிறேன். அவைகளில் இல்லாத ஏதோ ஒன்று குலோத்துங்கன் கவிதையில் இருந்ததை உணர்ந்தேன். அதனைக் கண்டு பிடிக்க அவரது 'குலோத்துங்கன் கவிதைகள்' எனும் நூலின் 704 பக்கங்களையும் புரட்டி, புரட்டிப் படித்துப் பார்த்தேன், கண்டுபிடித்தேன். 'இவரது கவிதைகள் கவிதை எழுதுபவர்களுக்கான அடிப்படை இலக்கண நூல் என்பது வெறும் புகழ்ச்சியில்லை, பொதுவாகக் கவிதை நூல்கள் சமுதாயத்தின் அவலத்தையும், சீர்கேடுகளையும், அழகியலையும், காதலையும் வெளிப்படுத்துகின்றன. ஆனால், இவரது கவிதைகள், எதிர்காலச் சமுதாயம் எப்படி உயர வேண்டும் என்பதை காட்டுகின்றன. கவிஞராகக் குலோத்துங்கன், தம் பணியையும், கடமையையும் இத்தொகுப்பில் செவ்வனே படைத்துள்ளார்.

கவிஞரின் சிந்தனையெல்லாமே வேறுபட்ட அதே சமயத்தில் ஆக்கப் பூர்வமான சிந்தனையாக வெளிப்பட்டுள்ளன. எனவேதான் 'கவிதை வளம்' என்னும் தலைப்பில் இப்பொழிவு நூல் அமைகிறது.

அதாவது வளமையான இடங்களில் பயிர்கள் பசுமையாகக் கண்ணுக்குக் குளிர்ச்சியாக, மனத்திற்கு இதமாகக் காட்சி தருவது போல இத்தொகுப்பில் உள்ள கவிதைகள் சமுதாய வெளிப்பாடு, மொழி, இனம், மானுடம் பற்றிய சிந்தனை கருத்துக்களை தெளிவாகப் புலப்படுத்துகின்றன. பசுமையான வளம் நிறைந்த பகுதியை எப்படி ஒரு தடவைக்கு இரு தடவை பார்த்து இரசிக்கிறோமோ? அது போல இத்தொகுதியில் உள்ள கவிதைகளை மறுபடியும், மறுபடியும் படிக்கத் தோன்றுகிறது.

குலோத்துங்கனின் எண்ணமும், மனமும் வெம்பி, பெருத்து, வெடித்துள்ளதைக் கவிதைகள் காட்டுகின்றன. குறிப்பாக மறக்க முடியாத வரிகளைச் சுட்டிக் காட்டலாம்.

ஆற்று வளம் நிறை
பொன்வயல்கள்-மணி
அள்ளிக் கொடுத்திடும்
வையத்திலே-அட
சோற்றுக்கு மானிடர்
வாடுவதா-மனம்
சொல்லக் கொதிப்பதை
யாருணர்வார்?

இக்கவிதை வரி உயிர்ப்புத் தன்மையோடு படைக்கப்பட்டுள்ள கவிதை. எத்தனை தலைமுறைகள் கடந்தாலும் கவிதை வாழும் என்பது உண்மை.

காலமெல்லாம் மனிதன் ஓடிக் கொண்டுதான் இருக்கிறான் என்பதை,

நேரமொன் றறியோம்; சற்றும்
நின்றிடோம்; பயண மொன்றே
சாரம் என் றுறுதி கொண்ட
தன்மை போல் ஓடு கின்றோம்

என்று உண்மையைக் கவிதையாக்கியுள்ளார். மேலும் இவரது கவிதைகளில் நான் அசைபோட்ட கவிதைகள் சில:

* அலை சூழும் கடல்வானம்
யாவும் - எங்கள்
அறிவுக்கு வணக்கஞ்செய்
பணியாட்கள் அன்றோ?

* பிறப்பின் முன்னரும், பிறந்து வாழுநம்
இறப்பின் பின்னரும், எதுவும் காண்கிலம்

* இறைவனே நின்படைப்பில்
இருக்கின்ற எண்ணிறந்த
குறையெலாம் நீக்கிக்
குவலயத்தை யான் விழையும்
வடிவிலமைக்கின்ற
வாய்ப்பெனக்குத் தாராய்

* மானிடர் எண்சாண் மெய்யின்
  வடிவினர்

* வளர்த்த கடா மார்பில் பாயும்; இது
  வையகம் கண்ட அனுபவம்

* வெயர்வு சிந்தி வெற்றிப் பாதையில்
  முயன்று சென்று நீ முடியும் சூடினால்
  உலகம் உனக்கு வைத்திருக்கும் பரிசுகள்
  ஒன்றல்ல; இரண்டல்ல; மூன்று
  உதட்டளவில் பாராட்டு; உள்ளத்தில் பொறாமை
  ஒரு சிலர் பகைமை

* பயிற்சி, கல்வி, எம் படைஎனக் கொண்டோம்;
  முயற்சி யுண்டெனின் முழுமை காணுவம்

இக்கவிதைகள் எல்லாம் குலோத்துங்கனை தமிழ் உலகில் பல்லாண்டு காலம் நிலைபெற வைத்திருக்கும். கவிஞர் தமது எண்ணங்களை எல்லா நிலைகளிலும் ஓடவிட்டு கவிதையாக்கியுள்ளார். இந்நூல் எழுத எனக்கு வாய்ப்பளித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் மற்றும் முனைவர் சு. தாமரைப்பாண்டியன் அவர்களுக்கும் அறக்கட்டளை நண்பர்களுக்கும் எனது பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். வா.செ.குழந்தைசாமி அறக்கட்டளை நண்பர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை நூல்கள் பல எழுத அடித்தளமிட்டுக் கொடுத்த எனது குருநாதர் பேராசிரியர் இரா.மோகன் அவர்களுக்கும், பேராசிரியை நிர்மலா மோகன் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

நூல் எழுதும் அளவிற்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்துக் கொண்டிருக்கும் எனது பெற்றோர் செ.செல்லப்பா, அழகுமணி மற்றும் துணைவியார் டாக்டர் லிடியா பிரியதர்சினி, மகன் ர.அகில் ஆகியோர்க்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

செ. ரவிசங்கர்

# ஆசிரியர் குறிப்பு



முனைவர் செ. ரவிசங்கர் தேனி மாவட்டம், பெரிய குளத்திற்கு அருகேயுள்ள கைலாசபட்டியில் பிறந்தவர். பெற்றோர்: திரு. செ. செல்லப்பா, திருமதி அழகுமணி. பள்ளிக் கல்வியைச் சிவகாமி உதவி பெறும் துவக்கப்பள்ளி (கைலாசப்பட்டி)யிலும், பெரியகுளம் விக்டோரியா நினைவு அரசினர் மேல்நிலைப் பள்ளியிலும் படித்தவர். கல்லூரிக் கல்வியை, அரசு கலைக் கல்லூரி (மேலூர்)யில் முடித்தவர். முதுகலைத் தமிழ் இலக்கியத்தை மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற் புலத்தில் பயின்றவர். பல்கலைக்கழக மானியக் குழு நடத்திய தகுதித் தேர்வில் தேர்ச்சிபெற்று 2004இல் இருந்து 2009 வரையில் 'புதுக்கவிதைகளில் உவமைகள்' என்னும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் இரா.மோகன் அவர்களின் மேற்பார்வையில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவர்.

18.3.2010 முதல் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தமிழியற்புலத்தில் உள்ள ஒப்பிலக்கியத் துறையில் உதவிப் பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார்.

இவர் தம் நெறிகாட்டுதலில் 8 பேர் முனைவர்பட்ட ஆய்வு செய்து வருகின்றனர். ஒருவர் ஆய்வேட்டைப் பல்கலைக்கழகத்திற்குச் சமர்ப்பித்திருக்கிறார். 28 பேர் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்.

முனைவர் ரவிசங்கர் இதுவரையில் 8 நூல்களைப் பல்வேறு பதிப்பகங்களில் இருந்து வெளியிட்டுள்ளார். அவை, 1. உவமை உலா, 2. தமிழிலக்கியத்தில் உவமை, 3. தமிழாய்வுச் சிந்தனை, 4. கவிஞர் தங்கம் மூர்த்தியின் கவிதையாக்கத்திறன், 5.செம்மொழித் தமிழிலக்கியத்திறன், 6. புதுக்கவிதையில் உவமைகள், 7. புதுமை இலக்கியப் பெட்டகம், 8. தமிழ் இலக்கியப் போக்கு (தொகுதி 1,2)

மேலும் 'செவ்விலக்கிய மதிப்புகள' என்னும் நூல் விரைவில் வெளிவர இருக்கிறது.

இவர் காவ்யா காலாண்டிதழ், தமிழ் மாருதம், இ.ப.தா. ஆய்வுக் கோவை, பெங்களூர் தமிழ்ச் சங்க ஆண்டு மலர், ச.வே. சுப்பிரமணியனின் உலகத் தமிழ்க் கல்வி இயக்கம் ஆண்டுக் கருத்தரங்க நூல் போன்றவைகளில் தொடர்ந்து ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வருகிறார். இதுவரையில் 115 ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

இவர் இக்கால இலக்கியம், ஒப்பிலக்கியம், சங்க இலக்கியம், இலக்கணம் போன்ற துறைகளில் மிகுந்த ஆர்வம் கொண்டவர். இவருக்கு நாமக்கல் கலையரசர் தமிழ்ச்சங்கம் 'ஒப்பியல் கலைமணி' என்னும் விருதினையும் மற்றும் அனைத்துலகத் தமிழ் மாமன்றம் திண்டுக்கல் இவருக்குத் 'தமிழாய்வுச்சுடர்' விருதினையும் வழங்கியுள்ளன.

# பொருளடக்கம்

# 1. கவிதையும் கவிஞனும்

கவிதை தமிழ் இலக்கியப் பரப்பில் முக்கியமான இலக்கியமாகும். சங்க கால இலக்கியம் முதல் இன்றுவரையில் கவிதை தொடர்ந்து தனது இடத்தைத் தக்க வைத்துக் கொண்டுள்ளது. கவிதை இப்படி இருக்கும் எனச் சுட்டிக் காட்டுவது மிகவும் கடினமானதாகும். நல்ல கவிதையைப்படிக்கும் போது உணர்ச்சிவசப்பட்டு நாம் ஆகா இது கவிதை எனக் கூறுகிறோம்.

'அது எப்படிக் கவிதையாகியுள்ளது?'' என்பதைப் பற்றிப் பேசத் தொடங்கினால் பலவாறு சொல்லிக் கொண்டு போகலாம். ''கவிதையில் பொருள் கொண்ட சொற்கள் அமைந்துள்ளன. தெளிவு அமைந்துள்ளது. உணர்ச்சி வெளிப்படும் பாவம் அமைந்துள்ளது. கற்பனை உள்ளது. சரியான கட்டுக்கோப்பு இருக்கிறது. மனத்தில் அப்படியே பதிந்துவிடும் ஆற்றலைக் கொண்டிருக்கிறது''. இவ்வாறெல்லாம் சொல்லிக் கொள்வோம் ஆனால் இன்னும் என்னவெல்லாமோ அதில் அமைந்துள்ளன. அவற்றையெல்லாம் நாம் மிகக் கவனமாகக் கவனிக்க வேண்டியுள்ளது.

கவிதையுலகில் பல்வேறான கவிஞர்கள் கவிதையைப் படைத்துள்ளனர். கவிதை கற்பனை வடிவமாகும். உரைநடை அறிவின் உருவமாகும். அந்த வகையில் கவிதையில் பழைய உருவத்தை விட்டுப் புதிய உருவத்தை உருவாக்கியவர் தேசியக் கவிஞர் பாரதியார். 'பழைய பாக்களையும் பாவினங்களையும் புதுமுறையில் பயன்படுத்திக் கவிதையில் எளிமையையும் புத்துணர்ச்சியையும் புதுமையையும் புகுத்தினார்.

கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை பழைமைப் பாக்களைப் பின்பற்றியதோடு புதிய முறைக் கீர்த்தனைகளையும் பாடினார். பாரதியாரால் சிந்துவகைப் பாடலுக்குப் புத்துயிர் அளிக்கப்பட்டது. புரட்சிக்கவிஞர் பாரதிதாசனும் புதுவகைப் பாக்களை இயற்றி அவற்றை மக்களிடம் பரப்பினார். அவரைத் தொடர்ந்து வந்தவர்தாம் குலோத்துங்கன் என்று அழைக்கப்படும் வா.செ.குழந்தைசாமி ஆவார்.

குலோத்துங்கனின் கவிதைகள் புதுமையையும் பழமையையும் ஒருங்கே பெற்றுள்ளன. குலோத்துங்கன் கவிதை எழுதுவது பற்றியும் அவரது கவிதைகளைப் பற்றியும் பல்வேறான தளங்களில் இயங்கிக் கொண்டிருக்கும் அறிஞர்கள் திறனுரை வழங்கியுள்ளனர்.

தமிழண்ணல் குலோத்துங்கனைப் பற்றிக் குறிப்பிடும் போது 'கவிதை எழுத வேண்டும் என்பதற்காகவே கவிதைகளை எழுதிக் குவிப்பது ஒருவகை. தம்முள் எழும் உச்சரிப்பு வேதனை, குமுறல் அல்லது இன்ப எழுச்சி, ஊக்கவுணர்வு போன்றவற்றால் கவிதை புனைவது பிரிதொருவகை'.

'எழுதிக் குவித்தவற்றை எடைபோட்டுக் காவியத்தைப் பளுவின் அடிப்படையில் பழந்தமிழர் பார்த்ததில்லை' என்று குலோத்துங்கன் பாடல் இசைக்கின்றது. அம்மட்டோ!

''தவமிருந்தும் காண்பதிலை தமிழ்க்கவிதை
பெற்றநிலை''

என்பதும் அவர்தம் முடிபாகும். இத்தகைய அழுந்திய உணர்வினில் விதைத்த சிந்தனைகளாதலின், அவர்தம் பாடல்களும் காலத்திற் கேற்ற கவிமணிகளாகித் தரத்தில் உயர்ந்து நிற்கின்றன, என்கிறார்.

மேலும் தமிழண்ணல், குலோத்துங்கன் கவிதை எழுதுவதற்கான காரணங்களையும் பிறிதோரிடத்தில் நன்கு தெளிவு படுத்தியுள்ளார் என்று கூறுகிறார்.

**நாடெனைப் போற்றும் என்னும்**
**நல்லிசைப் புலவர் செய்யும்**
**ஏடெனைப் புகழும் என்றும்**
**இலக்கண இலக்கியத்தின்**
**பீடெனக் குள்ள தென்றும்**
**பிழைசெயேன்; பெருகும் நெஞ்சம்**
**பாடெனப் பணித்த போது**
**பணிந்தவன் பாடுகின்றேன்.**
**கவலுமென் நெஞ்சின் பாரம்**
**கவிமகள் தணிப்பாள்; மிஞ்சும்**
**அவலம் நின்(று) அழுத்தும் காலை**
**ஆறுதல் தருவாள்; இந்தப்**

புவனமும் கடந்த கோடிப்
பொலிவினள்; புலன்கள் யாவும்
கவரும்என் கவிதை நங்கை
காதலாற் பாடு கின்றேன் (வளர்ந்த தமிழ்)

நெஞ்சம் பாடு என்று பணித்தபோது, அந்த நெஞ்சத்தின் கட்டளைக்குப் பணிய நேர்வதால் பாட்டு பிறக்கிறதாம். அவலம் நின்று அழுத்தும் காலை ஆறுதல் தருவாள்' எனப் பாடுபவர் பாடல்களே. இவர் தம் இக்கூற்று முகமன் என்று மெய்ப்பிக்கின்றன என்று தமிழண்ணல் கூறுவது சாலப் பொருத்தமுடையது.

கவிஞர் குலோத்துங்கன் இளமையில் பாரதிதாசன் பரம்பரை எனும் பகுதியில் 'பொன்னி' என்ற சிறந்த இலக்கியத் திங்களிதழ் வழி நாட்டுக்கு அறிமுகமானவர். அவரிடம் பாரதி பரம்பரை எனக் குறிக்கத்தக்க இயல்புகளும் நிரம்பவே கணப்படுகின்றன. ஆயினும் அவர்கள் இருவரினும் மேற்பட வளர்ந்துவிட்ட இன்றைய காலப்பகுதியை அவர் எதிரொலிப்பதால் அவர்களின் மறுபதிப்பாக மாறி விடாமல் வளர்ச்சி நிலை காட்டுகிறார். நாட்டுக்கும் மொழிக்கும் மானுடத்திற்கும் இன்றியமையாத, தேவைப்படுகிற, தவிர்க்க வியலாத தமிழ்க்கவிஞராகிவிடுகிறார் என்று தமிழண்ணல் கூறுவது அவரது கவிதைகளைப் புரட்டும்போது உண்மையெனப் படுகிறது.

### பாரதியின் நோக்கும் வாக்கும்

பாரதியின் தளத்தில் இருந்து புறப்பட்ட கவிஞர் குலோத்துங்கன் என்பதால் அவருடைய கவிதையின் போக்கும் பாரதியாரின் போக்கினைச் சார்ந்துள்ளது என்பது சில இடங்களில் அறியமுடிகிறது.

பெரிதெனப் படுவ வற்றுள்
பெரிதினைத் தாங்கும் தோள்கள்

அரிதெனும் யாவி வெள்ளும்
அரிதினைத் தேடும் நெஞ்சம்

பூரணம், பூரணத்தின்
பொலிவினை விழையும் ஞானம்;

வாரணம் நடந்த தன்ன
மலையெழுந் தசைந்த தன்னப்

பெருமிதம் கலந்த பண்பின்
பீடுடை வாழ்வு; வையம்

தருவன அனைத்தி வெள்ளும்
தரத்தினை உயர்த்தும் ஆசை

வேண்டுவ படைக்கும் ஆற்றல்
விதிக்கொடு விதிசெய் திண்மை

ஈண்டெமைக் கருள்வை அன்னாய்
ஈன்றவன் மறுப்ப துண்டோ? (கு.க., ப.67)

என்று குலோத்துங்கன் பிரபஞ்சச் சக்தியை இறைஞ்சும் போது பாரதியின் நோக்கும் போக்கும் அவருக்குத் தளமாகின்றன. மேலும் பாரதியார் விநாயகரிடத்தில்

எனக்கு வேண்டும் வரங்களை
யிசைப்பேன் கேளாய் கணபதி

என்று ஆரம்பித்த விநாயகர் நான்மணி மாலையில்

வான்மறைத் தலைவா
தனைத்தா னாளுந் தன்மைநான் பெற்றிடில்
எல்லாப் பயன்களுந் தாமே யெய்தும்;
அசையா நெஞ்ச மருள்வாய்; உயிரெலாம்
இன்புற் றிருக்க வேண்டி நின் னிருதாள்
பணிவதே தொழிலெனக் கொண்டு
கணபதி தேவா! வாழ்வேன் களித்தே!

என்று எல்லா உயிர்களின் குறை நீங்க வேண்டுகிறார். ஆனால் குலோத்துங்கன் தமது கவிதையில்

என்ன வரம் வேண்டும்
என்றென்னை முன்னழைத்துச்
சொன்ன மொழிகேட்டேன்
தொழுதிட்டேன்; எந்நாளும்
சின்ன வரங்கேட்கத்
தெரியாத என்நெஞ்சின்
பன்னெடுநா ளாசை
பகர்கின்றேன்; பார் வணங்கும்
இறைவனே நின் படைப்பில்

**இருக்கின்ற எண்ணிறந்த**
**குறையெலாம் நீக்கிக்**
**குவலயத்தை யான் விழையும்**
**வடிவிலமைக்கின்ற**
**வாய்ப்பெனக்குத் தாராய்** (கு.க.ப. 215)

என இறைவனிடத்தில் உலகத்தை முழுமையாக்க உரிமையைக் கோருகிறார். இவ்வாறாகப் பாரதியாரின் நோக்கத்தினையும் அவரின் போக்கினையும் தமது கருவாகக் கொண்டு, அவரின் அடியொற்றிக் கவிதையைப் படைத்துள்ளார்.

**கவிஞன் பிரம்மன்**

கவிஞன் படைப்புத் தொழிலைக் கொண்டவன், எனவேதான் கவிதை பிரம்மன் என்று கூறலாம். கவிதை என்பது

**உள்ளத்தில் உள்ளது கவிதை-இன்ப**
**உருவெடுப்பது கவிதை**

என்று தேசிக விநாயகம் குறிப்பிடுகிறார்.

பொதுவாக ஒரு நல்ல கவிதை ஆயிரம், ஆயிரம் ஆண்டுகள் ஜீவத் துடிப்போடு இயங்கிக் கொண்டு தானே இருக்கும்! இதைக் கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை,

**கலைமகள் வாழ்க்கை முகத்தெனினும்**
**மாயரவன் வண்டமிழோர்க் கொவ்வான்**
**மலரவன்செய் வெற்றுடம்பு மாய்வனபோல்**
**மாயா புகழ்கொண்டு மாற்றிவர் செய்யும்**
**உடம்பு**

என்று வேற்றுமையணியில் பொருள் புரிந்து கொள்ளுமாறு கவிதை அமைத்துள்ளார்.

கவிஞர் குலோத்துங்கன் இவ்வளவு சிறப்பு வாய்ந்த கவிதைத் தொழிலை எவ்வாறு பழகினார் என்பதை ஒரு கவிதையில் மிக நேர்த்தியாகப் பதிவு செய்துள்ளார்.

**என்று முழுமைபெறும் என்கவிதை? செய்தவரை**
**நின்று நிதானித்து நினைத்து வரி வரியாய்ப்**
**படித்தேன்; பலவரிகள் பழுதென்று பட்டதனால்**
**அடித்தேன்; மறுபடியும் ஆரம்பக் கட்டத்தில்**

**தொடங்கினேன்; இம்முயற்சி தொடர்ந்து பலவருடம்**
**நடந்து வருகிறது; நாளெனக்குப் போதவில்லை**
**கலையுலகம் இன்றுவரை காணா எழில்உடைய**
**சிலையொன்று செய்தேன்; சிறிததனை மேம்படுத்தச்**
**செதுக்கினேன்;கைஇடறச் செவிட்டியது சிற்றுளி;பின்**
**ஒதுக்கினேன்; வேறொர் உருவம் படைப்பதற்குத்**
**தொடங்கினேன், மீண்டும்; இது தொடர்ந்து பலகாலம்**
**நடந்து**
**வருகிறது; நாளெனக்குப் போதவில்லை** (கு.க., ப.94)

இக்கவிதையில் குலோத்துங்கன் கவிதையைப் படைக்கும் தொழிலை மிகவும் வெளிப்படையாகக் குறிப்பிட்டுள்ளார். கவிதையை ஏனோதானோ என்று எழுதவில்லை. பிரம்மன்போல மிக நேர்த்தியாகப் படைப்பதற்குக் காலம் தேவைப்படுகிறது. மனிதர்களைக் கூடப் பிரம்மன் ஒரே நாளில் படைப்பதுகிடையாது. 10 மாதங்கள் தேவைப்படுகின்றன. எனவேதான் கவிஞன் பிரம்மன் என்பது பொருத்தப்பாடுடையதாக அமைகிறது.

கவிஞர் வால்ட்விட்மன் கவிஞர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது

**மனித ஜாதியில் மகாகவி ஒருவன்தான்**
**நின்று நிலைத்தவன்;**
**தன் நாட்டுக்கும் காலத்துக்கும் அமரத்துவம்**
**அளிப்பவன் அவனே;**
**இல்லாததைத் தந்து இருப்பதைச் சரியானபடி**
**உபயோகிப்பவன் அவனே;**
**தடுக்க வேண்டியதைத் தடுத்து**
**மனித ஜாதியை,**
**மனித குலத்தின் விதியைத் திருத்தி**
**அமைப்பவனும் அவனே**

என்று இயம்பும் மொழிகள் எவ்வளவு பசை கொண்டவை. கவிஞனின் பெருமாண்பை-ஈடு இணையற்ற ஆற்றலை விட்மனின் மொழிகள் நன்கு விளக்குகின்றன என்று பெருமாள் கூறுகிறார்.

'கவிதை சமூகத்திலிருந்து படைக்கப்படுகிறது; சமூகத்திற்காகப் படைக்கப்படுகிறது. ஆனால் சமூகத்திற்கு அது பயன் அளிக்க வேண்டும் என்று விரும்பப்பட்டது. இதனால் கலைகள்

அனைத்தையும் சமூகப் பார்வையில் பார்க்கும் பாங்கு தோன்றியது. தோன்றவே கலையின் நோக்கம் எது என்பது பற்றியும் அதன் கருப்பொருள்-உள்ளடக்கம் என்ன என்பது பற்றியும் கவனம் செலுத்தப்பட்டது.

கவிஞனின் நோக்கம், கவிதையின் உள்ளடக்கம் கவிதையின் பயன் என்பன ஏறத்தாழ ஒன்றை ஒன்று தழுவியன.

| | | |
|---|---|---|
| கவிஞன் | > | நோக்கம் |
| கவிதை | > | உள்ளடக்கம் |
| சமூகம் | > | பயன் |

கவிதைக் கலையை, மகிழ்வுறுத்தும் நோக்கிலிருந்து மாற்றிச் சமூகத்தை நெறிப்படுத்தும் கருவியாக்கச் சமூக வாதிகள் விரும்பினர் என்பார் க.பா. அறவாணன். எனவேதான் குலோத்துங்கன்,

**இளமையைப் பாடுவேன் யான்**
**எதிர்வரும் காலம் தேடும்**
**உளமதைப் பாடுவேன் யான்**
**உயர்வுடை வாழ்வு காணத்**
**துயிலுடன் உணவும் ஓய்வும்**
**துறந்தொரு தவமேற் கொண்டு**
**பயில்வதைப் பாடுவேன் யான்**
**பல்கலைப் பயிற்சி, ஞானப்**
**பெருமையைப் பாடுவேன் யான்**
**பெற்றதாய் மொழியும் நாடும்**
**வறுமைக ளனைத்தும் நீங்க**
**வய்யமே புகழக் காணும்**
**கனவினைப் பாடுவேன் யான்** (க.க., ப.274)

என்று கவிதைக்குரிய உள்ளடக்கப் பொருள்களைப் பட்டியலிட்டுள்ளார். இப்பொருள்கள் எல்லாம் இன்று சமுதாயத்தின் முக்கியமான அங்கம் வகிப்பன. எனவேதான் சமுதாய நலமுடைய பொருள்களை எல்லாம் பாடுவேன் என்று முழக்கம் செய்கிறார் கவிஞர் குலோத்துங்கன்.

கவிஞனுக்கு இந்த உலகமே ஒரு காட்சிச்சாலை. இங்குள்ள பொருள்கள் அனைத்தும் அவன் கவிதைக்குரிய பொருள்கள். இயற்கையின் இனிய பேரெழில் அவன் விழிகளுக்கு அமுதவிருந்து.

ஆனால், சில கவிஞர்களுக்குச் சமுதாயத்தில் நடைபெறுகின்ற சமூக ஏற்றத்தாழ்வு, வறுமை அதற்கான காரணங்கள் போன்றவை முக்கியமானதாகத் தெரிகின்றன. அதனை ஒழிப்பதற்காகக் குரல் கொடுப்பவர்களாகக் கவிதையை அமைக்கின்றனர்.

குலோத்துங்கனும் சமூகத்தின் மீது அக்கறை கொண்டதன் விளைவாகத்தான் தமது கவிதையில் பாடுவேன் என்கிறார்.

**சுவர்களை மதியா நெஞ்சத்**
**தூய்மையைப் பாடுவேன் யான்**
**புவனமும் எழுச்சி கண்டு**
**புத்துயிர் பெற்றுப் பண்டைப்**
**பிணியெலாம் நீங்கி நாளை**
**பீடுடை வாழ்வு காண**
**அணியமாய் நிற்க எங்கும்**
**ஆசையைப் பாடுவேன் யான்** (கு.க., ப.275)

கவிஞன் உலகியல் சார்புடைய கருத்துக்களை மையமாகக் கொண்டு கவிதையை வடித்துள்ளார். குலோத்துங்கனுக்கு இந்த உலகத்தில் உள்ள காட்சிகள் கருப்பொருளாக அமைந்துள்ளன. எனவேதான் நோய் இல்லாத சமுதாயம் அமையப்பாடுவேன் என்கிறார். நோய் என்பது மனிதனுக்குள் இருக்கின்ற மூடப்பழக்க வழக்கங்களையும் சேர்ந்தது என்பதைக் கவிஞர் தெளிவாகக் கவிதையில் உணர்த்தியுள்ளார். ‘பண்டைப் பணியெலாம் நீங்கி நாளை பீடுடை வாழ்வு காணப் பாடுவேன்’ என்பது கவிஞனின் தணியாத ஆசை.

**கவிஞனும் கவிதையும்**

கவிஞன் காட்சியொன்றில் ஒன்றியதும் உடனே கவிதை பாடுவதில்லை. அதே வேளையில் பாடி விட வேண்டியதுமில்லை. ஒரு காட்சி கவிஞனின் இதயக் குகையில் பதிந்து மேலும் மேலும் மெருகேறி, பின்னர் எப்போதோ புத்தொளியுடன் கவிதைகளாக வெளிவரலாம். தான் பெற்ற உணர்ச்சியினை எந்நேரத்திற்கும் தன் இதயத்தில் கொணரும் ஆற்றலைக் கொண்டவன் கவிஞன். எவ்வேளை அவனிடம் கவிதைகள் பிறக்கும் என்பது நிச்சயம் இல்லை. தனிமையில் ஏகாந்த நிலையில் படைப்பின் விந்தைகள் அவன் மனதைத் தாக்கும் போது, அவற்றில் அவன் தன்னை மறந்து இலயிக்கும்போது அல்லது அவன் பெற்ற அனுபவம் மீண்டும் அவன் இதய யாழை முரலும்போது தேவகீதம் போல் அவனிடம் கவிதைகள்

ஒலிக்கின்றன. இந்த அனுபவத்தில்தான் குலோத்துங்கன் பல்வேறான கவிதைகளைப் படைத்துள்ளார்.

**பச்சை போத்த பழனம் தருவதைப்**
**பிச்சையென றொருசிலர் பெருவதும் தருவதும்**
**தன்னலம் படைத்த சதியடா! சமத்துவம்**
**நன்னலம் நமக்கு நடைமுறை யாக்குவம்**
**நாயும் பன்றியும் நானும் கிடக்கையில்**
**தோயும் வாழ்விது, சோம்பலும் சூழ்ச்சியும்**
**தந்தது; மானிடர் தரமெலாம் தாழ்ந்தது;**
**வெந்த எம் நெஞ்சின் வெகுளியின் விசுவம்**
**எழுதவும் இயலேன்; இயம்பவும் இயலேன்**
**மெழுகுஎன உருகினன்; வெளிச்சம் காணேன்** (கு.க., ப.286)

இக்கவிதையைக் குலோத்துங்கன் தம் புறஉலகக் காட்சியின் மூலம் கண்டு உணர்ந்து உணர்ச்சியின் வெளிப்பாட்டினால் உருவாக்கி யுள்ளார்.

கவிஞன் மக்கள் மத்தியில் அவர்களோடு ஒன்றி வாழ்பவன். அவர்களது இன்ப துன்பத்தில் உள்ளத்தால் தோய்வு கொள்பவன். அவர்களது ஆசாபாசங்களையும் உணர்ச்சிக் கொந்தளிப்புகளையும் தமது கவிதைகளிலே படம் பிடித்துக் காட்டுவான். அவர்களுக்கு இலட்சியங்களை எடுத்துக்காட்டி, அந்நெறியில் அவர்கள் செல்ல ஊக்குவிப்பவன். மனித குலத்தைச் செல்லரிக்கின்ற தீமைகளை யெல்லாம் தீர்த்துக் கட்டத் துடியாகத் துடித்துக் கொண்டிருப்பவன். எனவேதான் கவிஞனை-கலைஞனை நாட்டின் கண்கள் என்றும், இதயம் என்றும் அறிஞர்கள் கூறுகிறார்கள். இத்தகைய கவிமகனால் ஒரு நாடே சிறப்படைகிறது. மக்களோ பெருமிதம் கொள்கிறார்கள்.

இத்தகைய கவிஞர்கள் மிக அரிதாகத்தான் பிறப்பார்கள் என்று சான்றோர் உரைக்கின்றனர். அவ்வாறான கவிஞர்களுள் குலோத்துங்கனும் ஒருவர்.

குலோத்துங்கனின் கவிதைகளில் மனிதரூபத்தின் மீதான வன்கொடுமைகளைக் கண்டு இதயம் துடிக்கின்ற வரிகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. குறிப்பாகச் சேரிப்புறத்தைக் கவிதையாக்கும் குலோத்துங்கன்

**மனிதத் தொழுவம்; மானிட சாதியின்**
**புனிதம் முழுமையும் புதைத்த மண்ணில்**

**எடுத்த சின்னம்: இருளும் சகதியும்**
**கொடுத்த சாபக் குவியல்; குப்பையும்**
**சாக்கடை ஏற்கத் தகவிலாக் கழிவும்**
**மாக்களும் இணைந்து வதியும் பொந்துகள்**
**சேறும் எச்சிலும் சிறுவர் கழித்தன**
**நாறும் சூழலும் நடைமுறையாயின**
**இழிநிலை; இழிவெலாம் இயல்பென் றாகிய**
**பழிநிலை; நகரிடைப் பரவிய புற்றுநோய்** (கு.க., ப.284)

என்று நெஞ்சம் குமுறுகிறார். இக்குமுறல்தான் கவிஞனின் உணர்வு வெளிப்பாடாகக் கவிதையாக உருவெடுக்கின்றது. பொதுவாகக் 'கவிதை என்பது காணும் பொருள்களை வருணிப்பதில் இல்லை; அப்பொருள்களைக் காணுங்கால் அவனிடம் எழும் மனநிலையில் தான் அது உள்ளது. அந்த மனநிலைக்கு ஒரு வடிவம் கொடுத்து அழகிய சொற்களால் ஓவியமாக அமைப்பதே கவிதையாகும். அக்கவிதையைப் படிக்கும் நம்மிடத்திலும் அதே மனநிலையை உண்டாக்க வல்லது அக்கவிதை' என்று கவிதை உருவாகும் நிலையைப்பற்றிச் சுப்புரெட்டியார் குறிப்பிடும் கூற்றுக்குக் குலோத்துங்கன் கவிதையும் ஒத்துப் போயுள்ளது.

## குலோத்துங்கன் மரபின் தொடர்ச்சி

புதுமையில் காலூன்றிக் கவிதைகளை எழுதினாலும் குலோத்துங்கனின் கவிதைகளில் மரபின் தொடர்ச்சி வெளிப்படுகிறது. குலோத்துங்கனின் கவிதைகளில் 'கவிதையின் பொருளில் மட்டுமின்றித் தொடரமைப்பிலும் திருவள்ளுவர், இராமலிங்க அடிகளார், பாரதியார், பாரதிதாசன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை போன்ற தமிழ்க்கவிஞர்களின் தாக்கத்தைத் தொடர்களில் காணலாம் என்கிறார் சேதுப்பாண்டியன்.

மேலும் அவர் அதற்கான செய்திகளைத் தரும்போது குலோத்துங்கனின் கவிதைகளில் இடம்பெற்றுள்ள சில வரிகளைத் தொட்டுக் காட்டுகிறார்.

'மேன்மைகள் அனைத்தின் ஆத்மா' என்ற பாடலும் 'இன்பத்தைத் தேடி' என்ற பாடலிலும் பாரதிதாசனின் 'அழகின் சிரிப்பு' தாக்கத்தைக் காணமுடிகிறது.

'எலும்பின் மேல் தோல் போர்த்துள்ளார்'

'அஞ்சத் தகுந்தவற்றை அஞ்சினேன்'

'கசடறக் கற்பது காட்டினர் சான்றோர்'

போன்ற அடிகளில் வள்ளுவரின் தாக்கத்தைக் காணமுடிகிறது.

'வானம் தோற்றதம்மா'

என்ற தொடரில் கம்பரின் தாக்கத்தையும்

'கடையை விரித்தோம் கொள்வாரிலை யெனக்
கட்டுவ மில்லை யடா'

என்ற தொடரில் வள்ளலாரின் தாக்கத்தையும்

'விதியே விதியே தமிழ்ச் சாதியை'

'வயிற்றுக்குச் சோறு'

'தண்ணீர் விட்டோ வளர்த்தோம்'

போன்ற தொடர்களில் பாரதியின் தாக்கத்தையும் காணமுடிகிறது என்று கூறியுள்ளார். அந்த வகையில் குலோத்துங்கன் மரபின் தொடர்ச்சியாகத் தமக்கு முன்பிருந்த கவிஞரின் கவிதைகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு தற்போதுள்ள நடப்பியலையும் கவிதையாக்கியுள்ளார். 'தமிழின் நெடிய பாரம்பரியத்தை மறவாமல் நடப்புக் காலச் சிந்தனைகளைப் பாடுபொருளாக்கிக் கொண்டு, அளவான உணர்ச்சிகளுடன் ஓர் அறிவியலறிஞர் கவிஞராக நின்று தீட்டிய கவிதைகளே குலோத்துங்கன் கவிதைகள்' என்று அறிவுநம்பி குறிப்பிடுகிறார்.

இக்கூற்றிற்கு ஏற்றாற்போல் மரபின் தொடரில் மட்டும் கவிதை இயற்றும் தன்மையை விடுத்துப் புதுமையிலும் மானுடக் கவிதையைப் படைத்துள்ளார்.

**சேற்றுப் புழுக்களும்**
**பூச்சிகளும்-சிறு**
**தேரை யினங்களும்**
**வாழுதடா-குளிர்**
**காற்றுத் தவழ்ந்திடும்**
**வானத்திலே-திரி**
**காகம் பசித்துயிர்**
**விட்டதிலை - பெரும்**

**ஆற்று வளம் நிறை**
**பொன்வயல்கள்-மணி**
**அள்ளிக்கொடுத்திடும்**
**வையத்திலே-அட**
**சோற்றுக்கு மானிடர்**
**வாடுவதா-மனம்**
**சொல்லக் கொதிப்பதை**
**யாருணர்வார்?** (கு.க., ப.281)

இக்கவிதை புதுமையை மையமிட்ட கவிதை. அதன் உள்ளடக்கமும் புதுமை, உருவமும் புதுமை. மரபின் தொடர்ச்சியும் புதுமையின் வளர்ச்சியும் குலோத்துங்கனிடம் காணமுடிகின்றது.

குலோத்துங்கன் சமூக அக்கறையும் சமூகப் பொறுப்பும், செயற் பொறுப்பும் உள்ள இலக்கியவாதியாக இருத்தலினால் இவரது கவிதைத் தன்மை மிகமிக நேரடித் தன்மையுடையது.

மாவட்டத்தின் உயர்வும், வெற்றியுமே கவிஞரது இலக்கிய நோக்கங்கள். அவ்வுயர்வுக்கான வழி ஆக்கப் பூர்வமானது. பண்பாட்டினையும் மரபு வேர்களையும் கொண்ட கவிதையாக இவரது கவிதை பெரும்பாலும் அமைந்துள்ளது.

## கவிதை கவிதைக்காக அல்ல

கவிதை கவிதைக்காகவே என்றும் கவிதை கலைக்காகவே என்றும் வாதிடும் போக்கு இன்றும் உள்ளது. அவற்றுள் ''பொருள் தான் கவிதையாக மலர்கின்றதா அல்லது பொருளிலிருந்து கிரகிக்கப்படும் உட்பொருள்தான் கவிதையாக மலர்கின்றது என்று சொல்ல வேண்டும். ஆனால் உலக வழக்கில் பொருளும் உட்பொருளும் ஒரு பொருளிலேயே மயங்கிய முறையில் வழங்கப்பட்டு வருகின்றன. வழக்கில் எவ்வாறு அமையினும் பொருள் தெரிந்த முறையில் அவைகளைக் கையாள முயல்வதால் இலாபமே தவிர இடர் எதுவும் இல்லை.

கவிதை கவிதைக்காகவே என்ற சித்தாந்தமானது, கவிதையின் வடிவத்தைப் பற்றியதே தவிர, கவிதையினுள் பயின்று வருகின்ற பொருளைப் பற்றியதன்று என்பதாகச் சிலர் வாதாடுகின்றனர். அவர்களை வடிவ வாதிகள் என்று அழைக்கலாம். பாடலானது எதனைப் பற்றி உருவாகியுள்ளதோ அதுவே பொருளென்று வழங்கப்படும். அது பாடலின் உள்ளே உள்ளதன்றிப்

பாடலுக்கு வெளியே உள்ளதன்று. இரசம் வழங்கும் முறையில் அது எவ்வாறு அமைக்கப்படுகின்றதோ அந்த அமைப்பே வடிவம் என்று வழங்கப்படும்'' என்று ஆ. முத்துசிவம் குறிப்பிடுகிறார்.

இதுபோலக் கவிதையைப்பற்றி விமர்சனம் ஒரு போக்காகப் போய்க்கொண்டிருக்கையில் குலோத்துங்கன் இந்த மாதிரியான புயலில் இருந்து தனியாக ஒரு போக்கைக் கையாளுகிறார். அதனைப்பற்றித் தெ. ஞானசுந்தரம் குறிப்பிடும்போது 'இலக்கியம் வாழ்க்கையின் விழுமியங்களைச் சொல்ல வேண்டும் என்பது இந்திய சிந்தனை. 'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே' என்பது இந்திய இலக்கிய வாணர் எல்லாரும் ஒரு மிடறாக ஒப்பும் முடிவு. கவிஞர் வா.செ. குழந்தைச்சாமியும் (குலோத்துங்கன்) கவிதையை மானிடத்தை உயர்த்தும் கருவியாகக் கண்டவர். 'கவிதை கவிதைக்காகவே என்பவர் அல்லர், என்கிறார்.

இக்கூற்றுக்கு ஏற்பக் கவிஞர் அமைத்துள்ள கவிதை மிக நேர்த்தியானது.

'நிதமுமா முழுநிலவு' என்னும் தலைப்பில் அமைந்துள்ள கவிதையில் குலோத்துங்கனின்

**பொருளில்லாக் கற்பனையா புதுமை? ஆயும்**
**புலனோடு பொருந்துவன புனையவேண்டும்**

**வேரற்ற பொருளன்று கவிதை; செய்யும்**
**வினையற்ற இடமன்று கவிஞர் வையம்**
**ஊரற்ற நாடோடி வாழ்க்கை வேறு;**
**உலகத்தின் குடிமகனாய் உயர்தல் வேறு** (கு.க., ப.85)

என்னும் கவிதை வரிகள் தெளிவாகத் தெரிவிக்கின்றன. மேலும் கவிதை என்பதை மானிடத்தை உயர்த்தும் கருவி என்பதனால் அக்கருவியின் மூலமாக மக்களை உயர்த்துவதற்கான கருத்துக்களை வாரி வழங்குகிறார்.

**எரிமலைகள், இடி, மின்னல், பூகம்பம் என்**
**றெழுதுவது புரட்சியல்ல; எழுந்து பொங்கி**
**விரிகின்ற ஆவேசம் நெஞ்சினின்று**
**வெடிக்கின்ற சொல் வேறு; வெறுஞ்சொல் வேறு**

**எரிகின்ற தீயிருக்கும்; நெடிய வெற்பை**
**இடிக்கின்ற வெடியிருக்கும்; விழுதும், வேரும்**

**பறிக்கின்ற புயலிருக்கும்; இன்ப வெள்ளம்**
**பாய்ச்சுகிற ஊற்றிருக்கும் கவிதைச் சொல்லில்** (கு.க., ப.85)

என்று கவிதையின் மேன்மையை மிகவும் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார்.

மேலும் 'இந்தியர்கள் அவர்களுக்குள்ளும் குறிப்பாகத் தமிழர்கள் பழம் பெருமைகளில் மயங்கிக் கிடப்பவர்கள். நேற்று என்பது வரலாறு, நாளை என்பது கனவு; இன்று என்பது வாழ்க்கை. நேற்றில் இல்லை வாழ்வு ஆனால் நேற்று இல்லாமல் வாழ்வு இல்லை. நேற்றிலிருந்து பாடம் மட்டுமே படிக்கலாம். ஆதலால் 'நேற்றினை அவ்வப்பொழுது நினை; இறந்த காலத்திலேயே வாழ்ந்து வீணே இறவாதே. மூத்த தலை முறையைக் காட்டிலும், பின்வரும் தலைமுறை முதிர்ச்சியுடையது என்று அறிவுறுத்துகிறார் குலோத்துங்கன் எனத் தெ.ஞானசுந்தரம் குறிப்பிடுகிறார்.

**நடந்த நம் பாதை எண்ணல்**
**நலம் தரும்; எனினும் நாளும்**

**கடந்தன பேசிக் காலம்**
**கழிப்பவர் உயர்வ துண்டோ?**

**சூழ்கடல் வைய வாழ்வு**
**தொல் பொருள் சாலை யல்ல**
**வாழ்வதும் மனித சாதி**
**வளர்வதும் நேற்றிலல்ல**

**எந்தையர் உயர்ந்தோர் என்ப (து)**
**ஏற்றனம்; எமது மக்கள்**
**தந்தையின் வளர்ந்தோர் என்ற .**
**தத்துவம் ஏற்போம்; நாளை**

**முந்தையின் முதிர்ந்த தன்றோ**
**முதிர்ச்சி என் றெண்ணின், நம்பின்**
**சந்ததி காணும் வையம்**
**தலைமுறை மூத்த தன்றோ?** (கு.க., ப.190)

இவரது பாடுபொருள் மனிதன். அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்பது இந்தியக் கோட்பாடு. மனிதனின் அவலங்களைத் துடைப்பதற்காகவே புத்தர் துறவு கொண்டார். திருக்குறள் மனிதனைப் பற்றிப் பேசும் உயர்ந்த நூல், வையத்துள் வாழ்வாங்கு

வாழும் வகையினைத் தெரிவிப்பது. இவர் திருவள்ளுவரின் மாணாக்கர். 'வாழும் வள்ளுவம்' படைத்த அவரையொட்டிச் 'சாதி மத, நிற, மொழி வேற்றுமை கடந்து மனித மேம்பாட்டைச் சிந்திக்கிறார். மனிதனின் உயர்வைப் பாடி மகிழ்கிறார் என்னும் ஞானசுந்தரத்தின் கூற்று உண்மையே.

அந்த வகையில் இவரது கவிதைகள் கவிதைக்காக அல்ல மனிட இனத்தை உயர்த்துவதற்கான கருவி ஆகும்.

**உள்ளமெனும் கருப்பை**

கருப்பை என்பது புனிதமான ஒன்று. உலக இயக்கங்களுக்கு அடிப்படையான மனிதர்களை உருவாக்கும் உன்னத உறுப்பு. கருவை வளர வைத்துக் குழந்தையாக்கி இச் சமுதாயத்திற்கு வழங்கும் பணியைச் செவ்வனே செய்கிறது. அது போலத் தான் கவிதையும் உள்ளம் என்னும் கருப்பையில் இருந்து உருவாகிறது. இதனை இரா. சுப்பிரமணியன் கூறும் போது ''கவிதை உள்ளம் என்னும் கருப்பையில் உணர்ச்சி கருவாகிக் கவிதைக் குழந்தை உருவாகின்றது. நூற்றுக்கணக்கான ஏன் ஆயிரக்கணக்கிலும் கவிதைக் குழந்தைகளைத் தருகின்ற அற்புதமான கருப்பையாக விளங்குகின்றது கவிதை உள்ளம்.

கவிதைக் குழந்தையானது பத்து நொடியிலும் உருவாகும். பத்து நிமிடத்திலும் பிறக்கும். பத்து நாளிலும் தோன்றும். பத்து மாதங்களிலும் மலர்ச்சி பெறும். ஒரு காவியக் குழந்தை பிறக்கப் பத்து ஆண்டுகள் கூட ஆகலாம்.

எண்ணற்ற கவிதைக் குழந்தைகளைப் பெறும் கவிதை உள்ளத்துக்கு எந்தக் குடும்பக் கட்டுப்பாடும் கிடையாது, கூடாது. நடைபெறாது'' என்பர்.

இக்கூற்றுக்கேற்ற கவிஞராகக் குலோத்துங்கன் பல்வேறான தளங்களையும் கவிதையாக்கியுள்ளார். அவரது உள்ளம் என்னும் கருப்பையில் இருந்து 600 பக்கக் கவிதைகள் பிரசவமாகியுள்ளன. இவரது கவிதைகள் ஒவ்வொன்றும் உலகத்திற்குத் தேவையான அற்புதமான முத்துக்களாகவும், வைரமாகவும், நவரத்தினங்களாகவும் அமைந்துள்ளன. இவ்வாறான சுவையுள்ள கவிதைகள் பிறக்கும் நிலைமையைத் தம் கவிதையில் தெளிவுடுத்துகிறார்.

**செய்யும் தொழிலோடு**
**சேர்ந்துவிட்ட நெஞ்சினுக்கு**

வய்யம் தருமின்பம்
வானம் தருவதில்லை (கு.க. ப.164)

என்று வையத்தில் ஒருவனுக்குக் கிடைக்கும் இன்பத்தைப்பற்றிக் கூறும் கவிஞர் தொடர்ந்து அவரது உள்ளக் கருப்பையில் இருந்து உருவான ஒரு கவிதையைப் புனைகிறார்.

இறவா திருப்பதெனில்
ஏற்பேன் இறந்தால் யான்
பிறவா திருத்தல்
பெறல் வேண்டேன் வையகத்தின்

காட்சிகளிற் கோடியின்பம்
காண்பவன்யான் மானுடர் தம்
ஆட்சியினைப் போற்றுபவன்
அளவிறந்த செல்வமொடு

விண்ணின் வெளியிலென்முன்
வீடுவந்து நின்றாலும்
மண்ணின் கனவுகளில்
மனமிழந்து நிற்பவன் யான்

மீண்டும் பிறப்பேன்; இம்
மேதினியின் யாத்திரையில்
யாண்டும் நடப்பேன்; எம்
யாத்திரைக் காவியமாய்ப் (கு.க., ப.164)

பாடுவதில் யாமடையும்
பரவசத்தை யாரறிவார்
தேடுவதற் கேதுமிலை
செய்தபணி தீரவில்லை

தொட்ட கடமைகளைத்
தொடர்ந்து முடிக்காமல்
விட்டகன்று பாதி வழி
வேறு பயன் தேடோம் யாம் (கு.க., ப. 165)

என்று கவிதையை முடிக்கிறார். இக்கவிதை குலோத்துங்கனின் உள்ளத்தில் உருவான அசைவுகளை நம்முன் காட்சிப்படுத்துகிறது. இன்பத்தில் கவிஞர் இருக்கும் நேரம் என்பது அவர் செய்கின்ற தொழிலோடு நெஞ்சம் இணைந்திருப்பதுதானாம். இந்தத் தன்மை மனநிலை யாருக்கு வரும்.

தாம் செய்கின்ற வேலையைப் பெரும்பாலானவர்கள் விருப்பம் இன்றிக் கட்டாயத்திற்காகச் செய்கிறார்கள். அதனால்தான் வேலை செய்கின்ற போது துன்பம் நிறைந்ததாக மனிதன் நினைக்கிறான். இக்கவிதையை வாசித்துவிட்டு வேலை செய்பவர்கள் இன்பத்தை அனுபவிக்க வாய்ப்பளிக்கும்.

அதே போலக் குலோத்துங்கனின் உள்ளக் கருப்பை துன்பமான பொழுதினிலும் கவிதையை அவருக்குப் பிரசவித்துத் தந்துள்ளது. 'அன்னை இறந்த' நினைவில் 'காலன் செய்த சதி' என்னும் தலைப்பில் உண்மையிலேயே நெஞ்சைக் கசக்கிப் பிறந்த கவிதையைப் படைத்துள்ளார்.

தாயின் அன்பும், பண்பும், பாசமும் ஒருங்கே பெற்ற எவராலும் இக்கவிதையை மறக்க முடியாது.

**எண்ணறியான், எழுத்தறியான், கல்வி வாழ்வின்**
**இயல்பறியான் என்றாலும் தனது செல்வன்**
**நுண்ணறிவு பெறுக என, நூலோர் மன்றில்**
**நுழைக என எவ்வணமோ நோக்கம் கொண்டார்**

(கு.க., ப.644)

என்று இயல்பான தாயின் நிலையைக் கவிதையாக்கியுள்ளார் குலோத்துங்கன். தொடர்ந்து அவர் கவிதையில்,

**கதிரவனை முந்துபவள், காலை தொட்டுக்**
**காடுகளில், மேடுகளில் உழல்வாள். தன் சேய்**
**மதிநலம் பெற்றுயர்கவென நினைத்தாள் அந்த**
**வரத்திற்கு வாழ்நாளைத் தத்தம் செய்தாள்.**

**சிறுகாசு சிறுகாசு சேர்த்துச் சேர்த்துச்**
**சிறுசுருக்குப் பை முடிப்பாள். விடுமுறைக்கு**
**வரும்நாளைப் பார்த்திருப்பாள். திரும்பும்போது**
**வாங்கி எதும் உண்ணென என மடியில் வைப்பாள்**

**சந்தைக்குக் கால் நடையாய்ச் செல்வாள், வாங்கும்**
**சாமான்கள் தலைமீது சுமந்து மீள்வாள்**
**எந்தைக்கும் சொல்லாது சேர்த்த காசில்**
**எனக்கென்று சிலபொருள்கள் எடுத்திருப்பாள்** (கு.க.,ப.644)

என்று தாய் மகன் மீது வைத்துள்ள பாசத்தை உள்ளது உள்ளவாறு படம் பிடித்துக் காட்டுகிறார் கவிஞர் குலோத்துங்கன்.

குலோத்துங்கனை இவ்விடத்தில் பாராட்ட வேண்டும். மனம் நெகிழச் செய்து விட்டார். இன்று கல்வித் துறையில் பல்வேறான பதிவுகளைப் பெற்று உயர்ந்த இடத்தில் இருக்கும் கவிஞர் குலோத்துங்கன் (வா.செ.குழந்தைசாமி) அவர்கள் தம் தாயினைப் பற்றிக் குறிப்பிடும்போது உள்ளது உள்ளவாறு உண்மையைப் புனைந்துள்ளார் என்பது மகிழ்ச்சியளிக்கிறது. எந்த விதமான ஆடம்பரப் பூச்சும் இல்லாமல் ஒரு கிராமத்துத் தாய் எவ்வாறு இருப்பார் என்பதைக் கவிதையில் சித்திரித்துள்ளார்.

மேலும் தாயினைப் பற்றிக் குறிப்பிடும் போது

**கல்வியெதும் அறியாத ஆத்மா; பேசும்**
**கலையுலகம் புரியாத எளிய சீவன்;**
**செல்வமெனும் தனது மகன் கல்வி கற்றுத்**
**தேர்க என எவ்விதமோ சிந்தைகொண்டாள்**

**பசியென்னத் தாகமெனப் பாராள்; ஆறப்**
**பச்சைமர நிழல்தேடாள் துன்பம் கண்டு**
**மசிதலிலாள்; மனம் தளராள், எனது கல்வி**
**வாழ்வொன்றே தவமாக வாழ்ந்திருந்தாள்**

**நீள் பயணம் முடியும் முன், கனவு முற்றும்**
**நீசமென்ன மலரும்முன், தொடர்ந்து செய்த**
**வேள்விநிறை வேறும்முன், விதைத்த மண்ணில்**
**வேளாண்மை காணும்முன் வெண்மை பூத்த**

**தயிர்கொண்ட வெண்ணெய் வளம் திரளும் நேரம்**
**சதிசெய்தான், சதிசெய்தான், காலன்; என் தாய்**
**துயில்கின்ற கல்லறை அவ்வெளியள் நெஞ்சில்**
**சுடர்விட்ட ஆசைகளை அறியப் போமோ?** (கு.க., ப.645)

என்று கவிதையை முடிக்கிறார். இக்கவிதை குலோத்துங்கனின் உள்ளக் கருப்பையில் இருந்து சோகமாக உருவான கவிதை. பழைய நினைவுகளை இன்று யாரும் நினைத்துப் பார்க்காமல், மனைவி, மக்கள் என்று வாழ்ந்து கொண்டிருக்கின்ற சூழலில் தம் அம்மாவை அப்படியே படம்பிடித்துக் காட்டியுள்ள பாங்கு மிகவும் நெகிழ்வுடையதாக அமைந்துள்ளது.

இது போன்ற இடங்களில்தான் கவிஞர்கள் சிறப்படைகின்றனர். பலரால் உயர்வாகக் கருதப்படுகின்றனர். கல்வி, பதவி

போன்றவற்றால் பெருகின்ற மதிப்பினை விடத் தாய், தந்தை மீது வைத்துள்ள பாசத்தை கவிதையாக்கும் போது அப்படைப்பாளன் பலரின் மனங்களில் உயர்ந்த மனிதனாகப் போற்றப்படுகிறான். அந்த வகையில் குலோத்துங்கன் தலை சிறந்த மனிதராக இக்கவிதையின் வாயிலாக அடையாளப்படுகிறார்.

## வெளியீட்டுத் திறன்

கவிஞர்களுக்குத் தாம் எடுத்துக் கொண்ட பொருளைச் செம்மையான முறையில் வாசகர்களுக்கு எடுத்துச் சொல்லும் திறன் இருக்க வேண்டும். குறிப்பாகப் படைப்பாளர்கள் எதிலும் ஆழ்ந்தகன்ற நுண்ணோக்கம் மொழியை வசமாக்கிக் கையாளும் வெளியீட்டுத் திறனும் இருந்தால் நல்ல படைப்பாளராக வெளிப்படுவர். அந்த வகையில் குலோத்துங்கனின் வெளியீட்டுத் திறன் என்பது மிகத் தெளிவானது. எந்த எந்தப் பொருளை எப்படி எப்படிக் கவிதையாக்கி வெளியிடுவது என்பதை நன்கு அறிந்து அதற்கேற்றாற்போலக் கவிதையை வெளியிட்டுள்ளார்.

**தெய்வமுண்டென்பரடா! அதுவும் நின்**
**செம்மை யறிந்திலதோ**
**மெய் வழி நின்றவன் நீ; உனக்குள**
**வேதனை யார் பிழையோ?**

**நெஞ்சமெலாம் நிறைந்தாய்; மனத்தெழும்**
**நினைவை ஆண்டுகொண்டாய்;**
**எஞ்சிய தொன்றுமிலை; நினையலால்**
**என்ன தென் றேதுமிலை**

**சுற்றிலும் தேடுகிறேன் கவிந்துள**
**சூழலை நோக்குகிறேன்**
**வெற்றிடம் என்பதால், பார்வையில்**
**வேறெதும் காணேனடா!**

**மண்ணும் கொடியதடா, இயற்கையும்**
**மாபெரும் பாவியடா;**
**எண்ணும் பொழுதிலெலாம், இதயம்**
**எரிந்து தேம்புதடா!**

**ஆண்டுகள் ஆண்டுகளாய்த் தேடிடும்**
**ஆய்வினில் யாதுணர்ந்தோம்**

**ஈண்டுள வாழ்வறியோம், பின்விண்வெளி**
**எங்கணும் ஏன் பறந்தோம்!**

**தெய்வம்மொன்றில்லையடா! இயற்கையில்**
**சீலமொன்றில்லையடா!**
**மையிருள் ஆட்சியடா; மனிதர் தம்**
**வாழ்வொரு மர்மமடா!** (கு.க., ப.651)

இக்கவிதை உலகியலை வெளிப்படுத்துகிற கவிதை. உலக வாழ்க்கை நிலையில்லாதது, அதில் மனிதன் தெய்வம் என்ற நம்பிக்கையில் வாழ்கிறான், ஆனால் நாம் சொந்தம் என்று சொல்லிக் கொள்கிற, மண்ணும், இயற்கையும் சில நேரங்களில் கொடுமைகளைச் செய்துவிடும், இதனை நினைக்கும் போது என்ன பாடு நெஞ்சம் படுகிறது. ஆனால் மனிதன் எல்லாப் பொருள்கள் குறித்தும் ஆராய்ச்சி செய்கிறான், எதற்கு? அந்த ஆராய்ச்சியின் பயனாக வாழ்வில் என்ன பலன் கிடைத்தது என்று மிகப் பெரிய கேள்வியை மனித குலத்தின் முன் வைக்கிறார். இது தவிரக் குலோத்துங்கன் 'மானுட யாத்திரை' என்னும் நூலில் பாகம் மூன்றில் சமயம் ஆன்மீகம் குறித்து எழுதிவிட்டு, இக்கவிதையில் 'தெய்வம்' என்று ஒன்று இல்லை என்கிறார். இதுதான் அவரின் கவிதை வெளியீட்டுத் திறனைக் காட்டுகிறது.

உலகத்தின் வாழ்வியலை எல்லாம் எடுத்துக் கூறி இறுதியாகத் தெய்வம் இல்லை என்னும் போது அதற்கான காரணமாக இக்கவிதையின் பொருள் அமைகிறது. இதுபோலப் பல கவிதைகளில் நாசுக்காக, 'வாழைப் பழத்தில் ஊசி குத்துவது போல' என்னும் மரபுத்தொடர் போலக் கவிதையில் சில கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளார்.

வாசகர்கள் இது போன்ற கவிதைகளை ஆழமாகச் சிந்திக்கின்ற போதுதான் அக்கவிதையின் பொருள் புரியப்படும். இல்லையென்றால் புரிந்து கொள்வது எளிதானதல்ல.

### முடிவாக

இலக்கண இலக்கிய மரபு அறிந்தவர்களே புதிய போக்கினை உருவாக்க உரிமையுடையவர்கள். பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே' என்ற விதி முற்றிலும் சரியானதுதான். கழித்தலும், புகுத்தலும் என்று விதி ஒற்றுமிகுத்துச்

சொல்லவில்லை என்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். ''இலக்கியம் கடந்த காலத்தின் கன்னி; நிகழ்காலத்தின் மனைவி; எதிர்காலத்தின் தாய்'', எனத் திறனாய்வு அகத்தியர் அ.ச.ஞானசம்பந்தன் குறித்திருப்பது இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது (இலக்கியக் கலை, ப.114). புலமைக்கும் படைப்புக்கும் முக்காலத் தொடர்ச்சி இருக்க வேண்டும். இந்த மும்மை நலம் இடம்பெறும் படைப்புகளே சிறந்தனவனாய் முதலிடம் பெறும் உரிமையுடையவை. பிறவெல்லாம் இரண்டு மூன்று...எனப் பிந்தைய இடங்களுக்கே உரியவை. எந்த நிலையிலும் இடம்பெறத் தகாதனவும் படைக்கப்படுகின்றன.

குலோத்துங்கன் கவிதைகள் மும்மை நலம் உடையவை; எனவே படைப்பரங்கில் முதலிடம் பெறுபவை என்பார் ம.ரா.போ. குருசாமி. அந்த வகையில் குலோத்துங்கன் கவிதைகள் தலைசிறந்த கவிஞருக்கு உரியவையாக அமைந்துள்ளன.

# உ. சமுதாயச் சிந்தனை

கவிஞர் தம் படைப்புகளைச் சமுதாயத்திற்காகப் படைக்கின்றனர். சமுதாய நிகழ்வுகளை மக்களுக்கு உணர்த்தும் கருவியாக இலக்கியம் பயன்படுகிறது. 'இலக்கியமும் சமுதாயமும் ஒன்றை யொன்று சார்ந்தே வளர்ந்து வருகின்றன. இலக்கியம் ஒரு சமுதாய நிலையான, சமுதாயப் படைப்பான, தொழிலைத் தனது இடைத்தளமாகப் பயன்படுத்துகிறது.'' என்பார் **குளோரியா சுந்தரமதி**.

அந்த வகையில் இலக்கியம் என்பது வெறும் பொழுது போக்குக் கருவியாக மட்டும் இல்லை. மாறாகச் சமுதாய உணர்வு கொண்டு அதன் போக்குகளைச் சுட்டியும் காட்டுகிறது. எனவேதான் முருகையன் ''ஒரு இலக்கியத்தின் ஒரு நாயகமாக மிளிரும் பிரதான செய்தி அல்லது அடிக்கருத்து ஒரு சமுதாய விளைபொருளே ஆகும்'' என்கிறார்.

கவிதைத் துறையைப் பொறுத்த வரையில் இது போன்ற கருத்துக்கள் ஏற்புடையன. காரணம் கவிதை யாருக்காக எழுதப்படுகிறது என்றால் சமுதாயத்திற்காக எனலாம். மேலும் கவிதையின் கரு எங்கு இருந்து பெறப்படுகிறது என்றால் பெரும் மக்கள் தொகுதியாகிய சமுதாயத்தில் இருந்துதான்.

எனவே சமுதாயத்தின் இன்பம், துன்பம், துயரம், அவலம், சிறப்பு, வறுமை, சாதி, அரசியல், பெண்ணியம், காதல், நட்பு, குடிப்பழக்கம், கல்வி, விபச்சாரம், பொதுவுடைமை போன்ற அனைத்தையும் இலக்கியம் குறிப்பாகக் கவிதை இலக்கியம் பதிவு செய்து வருகின்றது.

பொதுவாக எழுத்தாளன் வாழ்வதுவும், உணர்வதும் பார்ப்பதும் எல்லாமே சமுதாயத்திலிருந்துதான். ஆகையால் அவனுடைய படைப்புகளும் சமுதாயத்தை அடிப்படையாகக்

கொண்டே நிகழ முடியும். 'உலகில் ஒவ்வொரு எழுத்தாளனும் (கவிஞனும்) தன்னுடைய எழுத்துக்களின் மூலம் சமுதாயத்திற்குச் சொல்லுவதற்கு எதுவும் இல்லையென்றால், பிறகு அவர்கள் இந்தச் சமுதாயத்திடம் எதையும் எதிர்பார்ப்பதற்கும் உரிமை இல்லை' என்று செயப்பிரகாசம் கூறுவார்.

இக்கருத்து படைப்பாளர்களுக்குச் சமுதாயத்தின் மேல் இருக்கின்ற பங்களிப்பையும், பொறுப்புணர்ச்சியையும் காட்டுவதாக அமைகிறது.

கவிதைகளில் பெரும்பாலும் மையங்கொண்டுள்ள சிந்தனைகள் அனைத்தும் அன்றாட நிகழ்வுகளின் பாதிப்பாகவே உள்ளன. கவிஞர்களைச் சுற்றி நடைபெறும் நிகழ்ச்சிகளில் அவர்களைப் பாதித்தவற்றைக் கவிதையாகப் படைக்கின்றனர். இந்த அடிப்படையில்தான் குலோத்துங்கனின் கவிதைகளில் இடம் பெற்றுள்ள சமுதாயத்தின் சிந்தனைகளை இப்பகுதி ஆராய முற்படுகிறது.

### குலோத்துங்கனின் சமுதாயப் பார்வை

குலோத்துங்கன் தம் கவிதையில் பல்வேறான பிரச்சினை களைப் பற்றிப் படைத்துள்ளார். அவற்றில் ஏழ்மை, வறுமை, சாதி, அரசியல், பெண், கல்வி போன்றவை மிகத் தெளிவாகக் கவிதைகளில் வெளிப்படுகின்றன.

### ஏழ்மை

குலோத்துங்கன் கவிதைகளில் ஏழ்மையைப் பற்றிப் பல இடங்களில் விவரித்துள்ளார். இந்தச் சமுதாயம் வளர்வதற்குத் தடையாக இருப்பது ஏழ்மைதான். சுதந்திரம் அடைந்து பல வருடங்கள் கழிந்த பின்பும் இன்னமும் ஏழை மக்கள் இருக்கிறார்கள் என்பதைக் குலோத்துங்கன் கவிதை படம் பிடித்துக் காட்டுகிறது.

**வீடுகட்டி நகரெடுத்தோம்**
**குடிசை யில்லை**
**விளைத்திட்டோம் கூழில்லை**
**வியர்வை சிந்திக்**

**காடுவெட்டி பருத்தி தந்தோம்**
**கந்தை யில்லை;**

கைசலிக்கக் கல்லுடைத்து
மெய்யும் நோவப்

பாடுபட்டுப் பள்ளிசெய்தோம்
எங்கள் மக்கள்
பயின்றதில்லை; வாழ்நாளில்
ஒரு நாளேனும்

ஏடுதொட்டுக் கண்டதில்லை;
எல்லாம் செய்தோம்
ஏதுமற்றோம், வாழ்ந்தறியோம்
ஏழை நாங்கள் (கு.க., ப.279)

என்று கவிதையில் ஏழைகளின் எதார்த்தமான வாழ்க்கையை எழுதியுள்ளார். இன்னமும் இது போன்ற கூட்டம் ஒன்று சமுதாயத்தில் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. சமுதாயம் இவர்களை நன்முறையில் வேலைக்காக மட்டும் பயன்படுத்திக் கொண்டு அவர்களை ஏழையாகவே வைத்துள்ளது என்பதை 'வாழ்ந்தறியோம் ஏழை நாங்கள்' என்ற கவிதையின் வழி விளக்கியுள்ளார்.

மேலும் சமுதாயத்தில் கிடைக்கின்ற பொருள்கள் எல்லாம் ஏழைகளின் உழைப்பினால் உருவானவை. ஆனால் அவ் ஏழைகள் அப்பொருள்களைப் பயன்படுத்துவது இல்லை என்ற கருத்தியலையும் தம் கவிதையில் குலோத்துங்கன் முன் வைக்கின்றார்.

மண்பிளந்து பொன்னெடுத்தோம்
ஆழ்ந்தி ருண்ட
வாரிகளில் முத்தெடுத்தோம்
அணிகளில்லை;

கண்திறக்கக் கூசுகின்ற
வெயிலில் வேர்வைக்
கடல் மிதந்தோம், வாழ்வில் வளம்
கண்டதில்லை

மண்துயின்று மெய்யுழைப்பால்
வையத் துக்கே
வாழ்வளித்தோம், வாழ்ந்தளியோம்
ஏழை நாங்கள்! (கு.கூ.,ப.280)

என்று ஏழைகள் உண்மையாக உழைக்கின்றார்கள் என்பதை மிகவும் அருமையாகப் பதிவு செய்துள்ளார். ஆனால் அவர்கள் வாழ்க்கையில் வளம் மட்டும் கண்டதில்லை என்கிறார். இக்கவிதையில் மறைமுகமான சுரண்டலைக் கவிஞர் பதிவு செய்கிறார், உழைக்கின்ற மக்களுக்கு உழைப்பிற்கு ஏற்ற ஊதியம் தருவதில்லை. அவ்வாறு தந்திருந்தால் ஏழைகள் செல்வந்தர்களாக மாறியிருப்பார்கள் என்பதைக் கூறுகிறார்.

இவ்வாறான ஏழ்மையிலும் உண்மையான அன்பு சமுதாயத்தில் ஏழைகளிடம் தான் கிடைக்கின்றது என்பதையும் தமது கவிதைகளில் குலோத்துங்கன் புனைந்துள்ளார். அதாவது,

**காய்ந்த இதழ், உலர்ந்த முகம்**
**கலங்கும் கண்கள்**
**கலைந்த குழல்; ஆயினும்வற்**
**றாத அன்பில்**

**தோய்ந்த உளத் துணைவியர்கை**
**யணைப்பில், மண்ணில்**
**துவள் குழந்தை இளஞ்சிரிப்பில்**
**கார்வன த்தில்**

**பாய்ந்தமறை மின்னலென**
**மனித வாழ்வுப்**
**பண்புகண்ட உணர்வு வரும்;**
**மறுகணத்தில்**

**தோய்ந்தவுடல், இருள் வறட்சி**
**இறக்க வில்லை;**
**இருக்கின்றோம், வாழவில்லை**
**ஏழை நாங்கள்** (கு.க., ப.280)

ஏழை மக்கள் கடினமான துன்பச் சூழ்நிலையிலும் அன்பாகவும், பண்பாகவும், பாசத்தோடும் வாழ்க்கையை அமைத்துக் கொள்கிறார்கள்.

மேலும் ஏழைமக்கள் ஏழையாக இருந்தாலும் மனத்திட்பத் தோடு வாழ்வில் வருகின்ற சவால்களைச் சந்திக்கின்றார்கள் என்பதைத் 'தோய்ந்தவுடல், இருள் வறட்சி இறக்க்வில்லை இருக்கின்றோம்' என்னும் வரிகளில் மிக அழகாகக் குலோத்துங்கன்

தொட்டுக் காட்டுகிறார். பணக்காரர்கள் ஏதாவது சிறு சறுக்கல்கள் வாழ்வில் ஏற்பட்டாலும் உடனே தம் குடும்பத்தோடு தற்கொலை செய்து கொள்கிறார்கள். ஆனால் ஏழை மக்கள் இச்சமுதாயத்தில் பெரிய வறுமைகளுக்கிடையிலும் இறக்காமல் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை இக்கவிதையில் மிக அருமையாகப் பதிவு செய்துள்ளார்.

**சோற்றுக்கு இல்லா மனிதர்கள்**

சமுதாயத்தில் பலரும் பலவிதமான கதைகளைப் பேசிக்கொண்டு இருக்கிறார்கள். ஆனாலும் இன்னமும் மனிதனின் அடிப்படைத் தேவையான உணவு, உடை, உறைவிடம் கூடப் பூர்த்தி செய்து கொள்ள முடியாத மனிதர்கள் சமுதாயத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைக் குலோத்துங்கன் 'கோடி கலைகள் பிதற்றுகிறாய்' என்னும் தலைப்பில் கவிதை யாத்துள்ளார்.

**சேற்றுப் புழுக்களும்**
**பூச்சிகளும்-சிறு**
**தேரை யினங்களும்**
**வாழுதடா-குளிர்**
**காற்றுத் தவழ்ந்திடும்**
**வானத்திலே-திரி**
**காகம் பசித்துயிர்**
**விட்டதிலை-பெரும்**

**ஆற்று வளம்நிறை**
**பொன்வயல்கள்-மணி**
**அள்ளிக் கொடுத்திடும்**
**வையத்திலே-அட**
**சோற்றுக்கு மானிடர்**
**வாடுவதா-மனம்**
**சொல்லக் கொதிப்பதை**
**யாருணர்வார்?** (கு.க., ப.281)

என்று உணவு இல்லாமல் மக்கள் துன்பப்படுவதைக் கவிஞர் பூச்சியினங்கள், காகம் போன்ற பறவையினங்கள் சாப்பிட உணவு கிடைக்கிறது. ஆனால் மனிதனுக்கு உணவு கிடைக்கவில்லையே என ஆதங்கம் கொள்கிறார்.

மேலும் ஏழை மக்களுக்கு உறைவிடம் இல்லை என்பதைக் கவிதையில் பதிவு செய்கிறார்.

**பச்சை மரக்கிளைக்**
**கூட்டினிலே-சிறு**
**பார்ப்பொடு தூக்கணங்**
**கொஞ்சுதடா-மலைத்**

**துச்சிலில் பல்லுயிர்**
**கண்வளரும்-பெரும்**
**தூற்றில் விலங்கினம்**
**தூங்குதடா-வெயில்**

**உச்சி வெடித்திடும்**
**வேலையிலே-குளிர்**
**ஊனை வருத்திடும்**
**நேரத்திலே-சிறு**

**குச்சுக்கு மானிடம்**
**வாடுவதா-அட**
**கோடிக் கலைகள்**
**பிதற்றுகிறாய்** (கு.க., ப.282)

இக்கவிதையைப் படிக்கும் போது சென்னை போன்ற பெருநகரங்களில் எத்தனையோ கூலித் தொழிலாளிகள் இன்னமும் சாலையோரங்களில் வசித்து வருவதை உணர முடிகிறது. உறைவிடம் சரியாக இல்லாத மக்கள் இன்னமும் சமுதாயத்தில் இருக்கிறார்கள் என்பதை மிக நாசுக்காக நகைச்சுவையாகக் கவிதையில் பதிவு செய்து உள்ளார். இது கவிஞர் ஏழைகளின் மீது பரிதாபப்படுவதைக் காட்டுகிறது. மேலும் கவிஞன் என்னும் நிலையில் இருந்து குலோத்துங்கன் இச்சமுதாயத்தை நன்கு உற்று நோக்குகிறார் என்பதும் புலப்படுகிறது.

## ஏழை மக்களின் வாழ்விடம்

சமுதாயத்தில் ஏழை மக்கள் ஒரு பாதியினர் இருக்க இடம் இல்லாமல் இருக்கிறார்கள். சிலர் தமக்கான இடத்தை அமைத்துக் கொள்கிறார்கள். ஆனால் அவ்வாறாக ஏழைகள் குடியிருக்கும் பகுதிகளைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

**குடிலென்பர்; பதியென்பர்; குடிசை யென்பர்**
**கூரைகளின் கூளம்; இது குடியிருப்பா?**
**பிடியென்று விதி தந்த சாப மல்ல;**
**பிழையான நடைமுறையிற் பிறந்த தம்மா!**

**நாயினமும் அணுகாது; சேற்று வாழ்வின்**
**நலம் விழையும் பன்றியினம் நண்ணி டாது;**
**வாயிலதைப் பேசிடினும் குமட்டும்; அங்கு**
**மானிடமும் வாழுவதோ? வஞ்சம் அம்மா!**

**புழுநெளியும் கழிவிடமும், பாம்பு வாழும்**
**பொந்தும் மேல்; புவிமகளின் பொலன்கொள் மெய்யில்**
**ஒழுகிய சீழ்ப் புண் என்னும் கொடுமை; கண்கள்**
**உற்றதனைப் பார்ப்பதற்கும் ஒப்ப வில்லை** (கு.க., ப.289)

ஏழையின் வாழ்விடத்தை இதைவிடத் தெளிவாக எவராலும் எடுத்துக் கூறிவிட முடியாது. வாழ்க்கையில் ஏழ்மையில் உள்ளவர்கள் உடலளவிலும், உணவு அளவிலும், இருப்பிட அளவிலும் மிக மோசமான வாழ்க்கையை வாழ்ந்து வருகின்றனர் என்பதனை இக்கவிதையில் குலோத்துங்கன் மிகத் தெளிவாகக் காட்டியுள்ளார்.

இவ்வாறாகப் பல நிலைகளில் ஏழைகளின் வாழ்விடத்தைக் காட்டியுள்ள கவிஞர் மானிடத்தில் வளர்ச்சியைப் பற்றி மிகத் தெளிவாக, உணர்வுப் பூர்வமாக ஒரு கேள்வியைக் கேட்கிறார்.

**கந்தையென நைந்தவர்கள்; சமுதாயத்தின்**
**கழிவுகளால் வதிப்பவர்கள்; மனித சாதி**
**மந்தையென அடைந்திங்கு மறுகுதம்மா**
**மானிடத்தின் வளர்ச்சியெலாம் மாயைதானோ?** (கு.க., ப.289)

இக்கவிதை வரிகள் உலகில் உள்ள எல்லோரையும் முன்வைத்துக் கேட்கின்ற கேள்வி ஆகும். மானிடத்தின் வளர்ச்சி என்பது மாயை, ஒன்றுமில்லாததோ? பொய்யோ? என்கின்ற உணர்வு எல்லோருக்கும் தோன்றும். பெரிய கம்பெனிகளும், அகலமான சாலைகளும், உயர்ந்த கட்டடங்களும் ஒரு நாட்டில் உருவாகி விட்டால் மானிட வாழ்வு வளர்ச்சி பெற்றதாக எண்ணி விட முடியுமா? அதுதான் வளர்ச்சி என்றால் அது மாயைதான் என்கிறார் கவிஞர் குலோத்துங்கன். மாறாக வளர்ச்சி என்பது ஏழை மக்கள் நல்ல உணவு, நல்ல உடை, நல்ல இருப்பிடம் நோக்கி எப்போது

பயணிக்கிறார்களோ அப்போதுதான் மானிட வளர்ச்சி உண்மை என்கின்ற கருத்தினை இக்கவிதையில் தருகிறார்.

### ஏழ்மை எத்தனை நாள்

சமுதாயத்தில் பொருளாதாரம்தான் மனிதனிடையே ஏற்றத் தாழ்வுகளைக் காட்டுகிறது. எத்தனை நாள் ஆனாலும் இந்த ஏழை என்ற ஒரு பிரிவு முன்னேறுவது முடியாத காரியம். ஏனென்றால் சுரண்டுகிறவர்கள் இருக்கிற வரையில் ஏழை ஏழையாகத்தான் இருப்பான். எனவே தான் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில், எத்தனை நாள் ஏழைகள் நிலை இப்படியே இருக்கும் என்கிற கோணத்தில் கவிதையைப் படைத்துள்ளார்.

**வயிற்றைப் பிசைந்து, துவண்டு-பசி**
**வாட்டும் நோயிற் புரண்டு**
**கயிற்றின் புரியெனச் சுருண்டு-பலர்**
**காய்வார் கண்கள் இருண்டு** -எத்தனை நாள்

**என்போடு போர்த்த தோலும் - சிறு**
**ஈர்க்கென மெலிந்த காலும்**
**துன்பிடை வறுத்த சடலம்-புவித்**
**துயரின் கலமெனும் உடலம்** - எத்தனை நாள்

**கொட்டும் வளங்கள் ஒரு பால்-பசி**
**குடலைப் பிடுங்கும் மறுபால்;**
**ஒட்டிய வயிற்றின் கூட்டம்-மிக**
**உண்டு களிப்பார் ஆட்டம்** - எத்தனை நாள்

என்று எத்தனை நாள் இது போன்ற சூழ்நிலை சமுதாயத்தில் நிலவும் என்று பல்வேறான ஏழை மக்களின் நிலையைக் கவிதையில் முன்வைக்கின்றார். இங்குப் பொதுவுடைமையில் சிந்தனையைக் கவிஞர் விளக்கியுள்ளார் எனலாம். ஒருபுறம் சாப்பாட்டிற்கு உணவு இல்லாமல் இருக்கும் கொடுமை, மறுபுறம் ஒன்றாக உண்டு திரியும் கூட்டம் என்ற கருத்தில் பொதுவுடைமையைமுன் வைக்கிறார்.

இதே கருத்துள்ள கவிதையை மேலும் ஓர் இடத்தில் படைத்துக் காட்டியுள்ளார். கவிஞர் குலோத்துங்கன் ஏழை மக்கள் மீது மிகுந்த நேசம் கொண்டுள்ளார் என்பது இதுபோன்ற கவிதையில் தெரிகிறது.

**பஞ்சிற் தீனெப் பற்றிஎழும்-கொடும்**
**பசியினில் அன்பே பதைக்கின்றாய்;**
**எஞ்சிய உணவினை எறிகின்றார்-அது**
**'ஏழைகட் கல' இது விதி அன்பே** (கு.க., ப.296)

இக்கவிதையில் கொழுத்த செல்வந்தர்களையும், அவர்களால் வீணாக எறியப்படும் உணவையும் எடுத்துக்காட்டி ஏழை மக்களின் நிலையைப் பதிவு செய்கிறார்.

பொதுவாக இது போன்ற கவிதையைப் படிக்கின்ற போது பெரிய பெரிய பணக்காரர் விழாக்களில் சம்பிரதாயத்திற்காக உணவினைச் சாப்பிடுபவர்கள், அப்படியே இலையில் உணவை வைத்து விட்டு, அதனை வீணடிக்கிறோம், என்பது தெரியாமல் அதனை நாகரிகம் என்று கூறுகிறார்கள். இதனைத்தான் மிக நாசுக்காகக் குலோத்துங்கன் தம் கவிதைகளில் பதிவு செய்துள்ளார். இது போற்றுதற்குரியது.

## குப்பையெனக் குவிந்த மக்கள்

குலோத்துங்கன் கவிதைகளில் சமுதாயத்தில் உள்ள அவலங்கள் மிகுதியாகவே வெளிப்படுகின்றன. பொதுவாகவே கவிதைகளில் மனிதனுடைய பட்டினி நிலை, அவன் பெரிதும் மதிக்கின்ற உடம்பின் நிலை ஆகிய இவைகளை அவனே கண்டு உண்மை தெரிந்து கொள்ளும்படி கவிஞர்கள் வருணித் திருக்கின்றார்கள். அவர்களுடைய வருணனையானது நமது உள்ளத்தைக் கவருகின்றது. நம்மை அடிமைப்படுத்துகின்றது. ஏனென்றால் கவிதையின் உட்பொருளாக வருவதைப் பார்க்கும் முறை, அதனை விரிக்கும் முறை, வார்த்தைகளை அமைக்கும் முறை, அந்த அமைப்பினால் வார்த்தைகளினின்றும் உதிக்கின்ற பாவனை அழகு ஆகிய இவைகளின் பால் இன்னதென்று சொல்ல முடியாததான அருமைப்பாடு அமைந்துகிடக்கின்றது''. என்கிறார் முத்துசிவம். இக்கூற்று குலோத்துங்கனின் பல கவிதைக்கும் பொருத்தப்பாடாக உள்ளது.

குறிப்பாக மனிதனின் ஏழ்மை நிலை பற்றிய கவிதைகள் படிப்பவர்கள் நெஞ்சத்தைச் சில நிமிடங்கள் கசக்கிப் பிழிந்து விடுகின்றன. அந்த வகையில் 'அறிவியல் ஆன்மீகம்' தலைப்பில் அமைந்துள்ள கவிதையில் ஏழ்மை நிலையைக் கண்முன் நிறுத்துகிறார்.

குப்பையெனக்
குவிந்த மக்கள்
குடிசைகளில் அடைந்துள்ள
குவலயத்தில்

பசிப்பிணியில் பலகோடி
பருக்கை நீரும்
பட்டியினியில் வேகுமுயிர்
பாலித் தற்குப்

புசிப்பதற்கு வழியில்லார்
எலும்பின் மேல் தோல்
போர்த்துள்ளார் பலகோடி
பொசுங்கு கின்றார் (கு.க., ப.309)

என்று கவிதையில் வேதனையை வெளிப்படுத்துகிறார். இந்திய நாட்டில் மட்டும் அல்ல உலக நாடுகளிலே பட்டினியினால் தண்ணீரும், உணவும் இல்லாமல் பலர் இறந்து கொண்டிருக்கின்றனர் என்கின்ற உண்மையைக் கூறியுள்ளார்.

இந்த நிலை தொடர்ந்து இருந்தால் குழந்தைகள் கருவிலேயே இறந்து போகும். மானிடச் சமுதாயம் இனி வருங்காலங்களில் 'வறண்டு வேகும்' அதாவது சமுதாயத்தில் மனிதர்களையே பார்க்க முடியாது என்கின்ற வேதனையைக் கவிதையில் முன் வைக்கிறார்.

ஈர்க்குச்சி கொண்டுருவம்
இழைத்த தென்ன
எலும்புடலின் தாய் மடியில்
வறண்ட தென்னை

நார்க்கத்தை போன்றதொரு
பிஞ்சு இந்த
ஞாலத்துள் வருமுன்னே
வறுமை தீய்த்து

வாட்டியதோர் கருவின் உரு
மானிடத்தின்
வருங்காலச் சந்ததியர்
வறண்டு வேகும் (கு.க., ப.309)

என்று கூறியுள்ளார். இக்கூற்றினை உற்றுக் கவனித்தால் ஒரு கருத்து புலனாகின்றது. ஏழைகள் மீதும் சமுதாய இயங்கியல் மீதும் குலோத்துங்கன் அதிகப்பட்ச அக்கறை கொண்டிருக்கிறார் என்பது தெரிகிறது. அதாவது இன்று பொதுவாக மனிதர்களுடைய சிந்தனை தான், தனது குடும்பம், தொழில், போன்றவற்றைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறது. இதுபோன்ற வேலையில் கவிஞர் குலோத்துங்கன் இச்சமுதாயத்தைப் பற்றிச் சிந்திக்கிறார் எனில் அவர் மனிதர்களுள் உயர்ந்த மனிதர் என்று கூறுவது மிகையல்ல.

### ஏழையின் இல்லம்

ஏழை மக்கள் பெரும்பாலும் இருக்க இடம் இன்றி இருப்பதனால் அவர்கள் எல்லா இடங்களிலும் குடியேறப் பழகி விட்டனர் என்பதைக் ‘கல்லறை வாசம்’ என்னும் கவிதையில் கவிஞர் குலோத்துங்கன் பதிவு செய்துள்ளார்.

**இற்றை நாள் எமது இல்லம்**
**எளியது குடிசை வீடு**
**சுற்றிலும் சகதி; சேறு**
**சூழலின் நீரில் காற்றில்**

**வறுமையில் வாடயன்றி**
**மற்றிலை வளம்பெருக்கும்**
**உறுதியுமில்லை; ஆயின்**
**ஒருவழி கண்டோம்; எங்கள்**

**முந்தையர் நன்கு வாழ்ந்தார்**
**முடிவிலாப் புகழினுக்குச்**
**சொந்தமு முடையார்; அன்னார்**
**துஞ்சிய பின்ன மைந்த**

**கல்லறை இனிய தென்று**
**கண்டனம்; காலமெல்லாம்**
**இல்லமங் கமைத்து வாழ்வ**
**தென்றொரு முடிவு கண்டோம்** (கு.க., ப.557)

என்று கவிதையை உணர்வு பொங்கச் சூடான சொற்களைக் கொண்டு அமைத்துள்ளார். இக் கவிதையைப் படித்தபின்பு எல்லோருக்கும் வறுமையின், ஏழ்மையின் பரிதாப நிலை கண்ணை விட்டு அகலாது. இக் கவிதையின் இறுதியில் கவிஞர் குலோத்துங்கன் முடிக்கும் போது

**துஞ்சிய இடத்த மைந்த**
**சோலையைப் பார்த்தோம்; அங்கும்**
**மிஞ்சிய குடிசைக் கூட்டம்**
**விளைந்தது; விதியை நொந்தோம்** (கு.க., ப558)

என்று உணர்வினைத் தட்டி உசுப்பேத்துகிறார் கவிஞர் குலோத்துங்கன்; இது போன்ற நிலையை எண்ணி என்ன செய்வது எனத் தெரியாத கவிஞர் இறுதியாக 'விதியை நொந்தோம்' எனக் கவிதையை முடிக்கின்றார்.

கவிஞர் குலோத்துங்கனின் கவிதையின் 'நோக்கும் போக்கும் மற்றவர்கள் கவிதையில் இருந்து வேறுபடுகின்றன.

கவிதை பொழுது போக்குப் பொருள் அன்று
இன்றைய நிலையின் கண்ணாடி மட்டும் அன்று
இன்றைய நிலையை ஊடுருவிக் காணும் கதிர்படம்
எதிர்காலக் கருவின் ஒலிப்படம் என்பது

கவிதைக்குக் குலோத்துங்கன் உரை நடை வழி தரும் விளக்கம் நிகழ் உலகப் பார்வையும், நவீனத்துவப் பார்வையும் தொலை நோக்கமும், நுண்ணுரு நோக்கும் வாய்க்கப்பெற்றவர் குலோத்துங்கன்' என்று கூறும் கு.அ. ராஜாராமின் கருத்து ஏற்புடையதே.

## ஏழ்மை தீர்வதற்கு வழி

குலோத்துங்கன் ஏழையின் நிலையைப் பல கவிதைகளில் மிகத் தெளிவாகவும், உருக்கமாகவும் பதிவு செய்துள்ளார். அதே நேரத்தில் ஏழைகள் என்ன செய்ய வேண்டும், ஏழ்மை தீர்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்னும் தீர்வினையும் தமது கவிதைகளில் குலோத்துங்கன் அழகாக எடுத்துரைக்கின்றார்.

**ஏற்றபணி எதுவெனினும்**
**முழுமையாக**
**ஈடுபட்டுச் செயலாற்றும்**
**இயல்பு கொண்டோம்**

**தோற்றறியோம்; துணிவுள்ளோம்**
**பிறரை அண்டித்**
**துவண்டதிலை; பயன் நாடித்**
**துதித்த தில்லை** (கு.க.,ப.209)

என்று கவிதையைத் தொடங்கி 'எந்தப் பணியாக இருந்தாலும் முழுமனதுடன் சோம்பல் இல்லாமல் செய்தால் தோல்வி இல்லை' என்கிறார். இக்கவிதையின் முடிவில்

**தன்பணியிற் சிறந்தார்முன்**
**தலை பணிந் தோம் ;**
**தரமுடையர் தாழ்வதிலை**
**நிமிர்ந்து நிற்கும்**

**என்புடையர் மானிடத்தின்**
**ஏணி; வாழ்வில்**
**ஏறு நடை பொது; அங்கு**
**ஏழை இல்லை** (கு.க., ப.210)

குலோத்துங்கன் கவிதையின் இறுதியில் 'ஏழை இல்லை' என்கிறார். ஏறுநடை என்பது எல்லோருக்கும் பொதுவானது. ஒருவருக்கு மட்டும் சொந்தமில்லை என்பதை மிகத்தெளிவாக எடுத்துரைக்கிறார்.

**வறுமை**

சமூக அமைப்பில் ஏற்றத்தாழ்வு என்பது வறுமையை மையமாக வைத்து உருவாவது ஆகும். கவிஞர் குலோத்துங்கன் ஏழ்மையையும் வறுமையையும் மிகத் தெளிவாகத் தம் கவிதைகளில் பதிவு செய்துள்ளார்.

வறுமையைச் சமுதாயத்தின் வாழ்க்கையிலிருந்துதான் தெரிந்துள்ளார். பொதுவாகக் கவிஞனுக்கு அனுபவங்கள் ஆகாயத்திலிருந்து கிடைப்பதில்லை. வாழ்க்கையிலிருந்துதான் கிடைக்கின்றன. உள்முக மனிதனுக்கு அவனுடைய தனித்த வாழ்க்கையில் அனுபவங்கள் கிடைக்கின்றன. புறஞ்சார்ந்த பார்வையாளனுக்குப் புறவுலக வாழ்க்கையில், அவன் விரிக்கும் பார்வையில் கிடைக்கின்றன. இன்னும் ஆன்மீக உணர்வுள்ளவனுக்குப் பிறப்பு, சாவு, வாழ்க்கைக்குப் பிறகு என்று அவன் கற்பனை அறிவும் மோதும் தேட்டத்தில் அவன் அனுபவங்கள் கிடைக்கின்றன. இவ் அனுபவங்கள் கவிஞனின் படிப்பை, சூழ்நிலையை அவனுக்கு நேர்ந்த வாழ்க்கைத் திருப்பங்களை, அவன் சந்திக்கும் புற வாழ்க்கையை, அவன் வாழும் நாட்டை, அவன் காலத்திய உலக நிகழ்ச்சிகளை என்று படிப்படியாக விரிந்தும், படிப்படியாகச் சுருங்கியும் கிடைக்கும் அனுபவங்கள், எனவேதான் அனுபவங்கள்

காலம், வாழ்க்கை, களம் ஆகியவற்றில் பெறப்படுகின்றன என்று குறிப்பிடுகின்றோம்' என்பார் பாலா தமது புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை நூலில். இக்கருத்து குலோத்துங்கனின் கவிதை வாயிலாகக் குலோத்துங்கனுக்குப் பொருந்துகிறது.

அந்த வகையில் தான் சார்ந்திருக்கின்ற புறவுலகத்தின் அனுபவங்களால் வறுமை குறித்த கருத்துக்களைக் கவிதையாக்கி யுள்ளார்.

**மனித ரல்லது மற்றுயிர் அறியாத்**
**தணியாது வறுமை, தரணியின் பிணிகளில்**

**கொடிய யாவினும் கொடியது, வறியவர்**
**மடிவது மில்லை; வாழ்வது மில்லை**

**சித்திர வதையெனச் செய்யும் கொடுமையின்**
**நித்திய வடிவமே நிரப்பு மானிடம்**

**தோன்றிய நாள்முதல் தொடர்ந்து நிழலென**
**ஞான்றும் வருவது; நாணமும் மானமும்**

**உடலும் ஆவியும் உயர்வு தேடிடும்**
**திடமும் நெஞ்சின் திட்பமும் அரித்துச்**

**சிதைக்கும் கறையான்; செம்மையின் பகைவன்**
**வதைத்தே எளியரை வாட்டும் கூற்றுவன்** (கு.க.,ப.300)

என்று கவிதையைப் படைத்துள்ளார். கவிஞர் குலோத்துங்கன் மிகவும் பொருத்தப்பாடுடைய கருத்தினை 'மனித ரல்லது மற்றுயிர் அறியாத் தனியது வறுமை' என்று கூறியுள்ளார். மனிதர்களுக்கு மட்டுமே உரியது வறுமை. மேலும் நல்ல கருத்துக்களைக் கவிதை முழுவதும் படைத்துள்ளார். கொடுமையிலும் மிகக் கொடுமை வறுமையில் இருப்பவன் சாவதுமல்ல, வாழ்வதுமில்லை'. மேலும் வறுமைக்குக் கவிஞர் கொடுத்துள்ள பெயர்களே துன்பம் செய்யும் பெயர்கள் தாம், கறையான், பகைவன், கூவன், இப்பெயர்களுக்குரிய உயிரினங்கள் துன்பம் செய்யும் அதுபோல வறுமை மனிதனுக்குத் துன்பம் செய்யும் என்கிறார்.

வறுமை குறித்து இதனைவிட மிகக் கொடுமையாக யாரும் கூறிவிட முடியாது. இக்கவிதையில் குலோத்துங்கனின் உணர்வுத் தாரை தெரிகிறது.

மேலும் இச்சமுதாயத்தில் உள்ள அறிவியல் வளர்ச்சி அறிஞர்கள், பொறியியலாளர்கள் போன்றவர்களிடம் கேள்வி கேட்கிறார். அவர் கேட்கின்ற கேள்விக்குப் பதில் தருவது மிகவும் கடினம். கவிஞர் கேட்கும் கேள்வி அவரது கவிதையில்,

**அறிவியலென்? அருங்கலையென்?**
**ஆற்றல் மிக்க**
**அறிஞர் குலச் சாதனை ஏன்?**
**தொழில் நுட் பத்தின்**

**பொறியியலின் பங்களிப்பு என்?**
**தத்துவத்தின்**
**பொதி சுமந்து கண்ட தைவன்?**
**ஆன்ம ஞானம்** (கு.க., ப.310)

என்று கேள்வியைத் தொடர்ந்து குலோத்துங்கன் வறுமையைப் பற்றி எழுதியுள்ள கருத்து அனைவரையும் ஒரு நொடி சிந்திக்க வைக்கிறது.

**மண்ணுலகில் ஒரு முனையில்**
**மூலை ஒன்றில்**
**மனித இனப் பிரதிநிதி**
**வறுமை மிஞ்சி**

**உண்ணுவதற்கு ணவின்றி**
**உழல்வ துண்டேல்**
**உலகத்தில் நாகரிக**
**உயர்வெலன் றில்லை** (கு.க., ப.310)

நாகரிகம் என்று கூறப்படுகின்ற ஒரு கருத்தியலையே கேள்விக்குள்ளாக்கும் கவிதையாக இக்கவிதை அமைந்துள்ளது. கவிஞர் குலோத்துங்கனின் கேள்வியில் ஒரு விதமான உலகியல் எதார்த்த வாத நியாமும் இருக்கிறது உண்மையே.

இவ்வாறாக ஏழ்மையையும் வறுமையையும் குறித்து மிகத் தெளிவான முறையில் மக்களைச் சென்றடையும் வகையில் கவிதையை யாத்துள்ளார். இறுதியாக வறுமையில் உள்ளவர்களை

**நொந்திடும் மக்கள் ஏழ்மை**
**நொடியினில் மடிவோர், நெஞ்சம்**
**வெந்தவர் உண்மை கண்டு**
**விரித்தெழச் செய்ய வேண்டும்!** (கு.க., ப.536)

என்று விழித்தெழச் செய்ய வேண்டும் என்கிறார். இதனைத் தான் கவிஞர்களைப் பற்றித் திறனாய்வு செய்து பாலா

> ''இன்றைய இலக்கியவாதி இந்த வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குகிறான். துருவி ஆராய்கிறான். துணிச்சலாக விமர்சனம் செய்கிறான். உண்மைகளை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறான். இவ்வாழ்க்கை தரும் தரிசனங்களைப் புலப்படுத்துகிறான். மனித உணர்வுகளை எழுப்பி விடுகிறான். உயிர்த்தெழச் செய்கிறான். அறிவூட்டுகிறான். தன் முயற்சிக்குப் பழமையும் மரபும் தடையென்று உணர்ந்தால் தைரியமாக அவற்றைப் புறக்கணிக்கிறான். புதுமரபு படைக்கப்புறப்படுகிறான்''

என்கிறார். அந்த வகையில் குலோத்துங்கன் படைப்பாளியாக, இலக்கியவாதியாகத் தம்மால் முடிந்த அளவு மனிதர்களை விழித்தெழச் செய்கிறார். அப்போதுதான் ஏழ்மையும், வறுமையும் இச்சமுதாயத்தை விட்டு அகலும் என நம்புகிறார்.

## உழவன் நிலை

தொழில்களின் தாய் என்று போற்றப்படும் வேளாண் தொழிலில் ஈடுபடும் உழவன் உண்மையான உழைப்பாளி. சேற்றில் அவன் கால் வைக்கா விட்டால் மனிதர்கள் சோற்றில் கை வைக்க முடியாது. ''உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்'' என்ற தொடர், உழவுத் தொழிலின் மேன்மையை நமக்கு எடுத்துக் கூறுகிறது. அத்தொழிலைச் செய்யும் உழவனின் தோற்றத்தைக் கவிஞர் குலோத்துங்கன் இயல்பாகக் கவிதையாக்கியுள்ளார்.

> **இடையில் சுற்றிய எளிய கந்தையைத்**
> **தொடையில் மேல்வரை சுருக்கிப் பின்புறம்**
> **இறுக்கிய உடையினன்; எரிக்கும் வெய்யிலைப்**
> **பொறுக்கத் துணையெனப் பொருந்திய உறுமால்**
> **தேய்த்துக் கிழிந்து செருப்(பு) அதன் தோல்போல்**
> **காய்ந்து வாடிய கட்டுடல்; தோளில்**
> **தாங்கிய கலப்பை; தாழ்விலும் சரிவிலும்**
> **நீங்குவ தறியா நிறையுடைத் துணையெனும்**
> **மாடுகள் பிணைத்த வடம்தொடு கையெனக்**
> **காடும் மேடும் கழனியும் திருத்தச்**
> **செல்லும் ஏர் உழவன்** (கு.க., ப.566)

என்று உழவனை அடையாளப்படுத்துகிறார். உழவனின் நிலையைப் பொதுவுடைமைக் கவிஞர்களைவிட மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார். இக்கவிதையைப் படித்தவுடன் காட்சிப்புலப் படிமம் தெரிகிறது. உழவனின் உருவம் கண் முன் அப்படியே காட்சிப்படுகிறது. அதுதான் இக்கவிதையின் வெற்றி. மேலும் இரவு பகலெல்லாம் உழைப்பு, உழைப்பு என்று உழைப்பை மட்டும் நம்பி இருக்கும் உழவர்களின் நிலையைப் பல்வேறு அறிஞர்கள் எடுத்துக் கூறுகின்றனர். ''உணவின்றி உயிர் வாழ்க்கையின்மையின், அவ்வுண்மை விளைவிக்கும் உழவர் மன்னுயிர்த் தேருக்கு அச்சாணியாகவும் மன்பதை மண்ணிற்கு ஆணிவேராகவும் கருதப்பட்டனர்'' என்பர் தேவநேயன்.

வள்ளுவர் உழவர்களைப் பற்றிக் கூறும் போது,

**உழுவர் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து** (குறள்.1032)

என்கிறார். அந்த அடிப்படையில் தான் கவிஞர் குலோத்துங்கனும் உழவர்களின் நிலையை,

**செல்வம் பெருக்க**
**ஒல்லும் வகையெலாம் உழைத்து (உ)ழைத்து**

**மாய்பவன்; தானும் மனைவியும் மக்களும்**
**ஓய்வு நாள் ஒழிவுநாள் ஊக்க ஊதியம்**

**அகவிலைப்படிகள் அரசினர் ஆணையின்**
**தகவல்கள் அவைதரும் சலுகைகள் என்பனவும்**

**கல்வியும் கேள்வியும் காவிய வளமும்**
**பல்கலைத் துறையினர் படைத்த இன்பமும்**

**அறியா வாழ்வினன்** (கு.க., ப.566)

என்கின்றார். அரசு ஊழியர்கள் போல எந்தவிதப் பயனும் தன் உழைப்பிற்காகப் பெறாதவன். வேளாண்மை செய்கின்றவனுக்கு விடுமுறை நாள் என்பது இல்லை. தன் குடும்பம் முழுவதும் உழைப்பில் ஈடுபடுவார்கள் என்கின்றார்.

மேலும் வேளாண்மைத் தொழில் புரியும் விவசாயி உழவன் இயந்திரம் போன்றவன் ஓய்வறியாதவன்; ஆனால் வலிமையானவன் என்று கூறுகிறார் கவிஞர் குலோத்துங்கன்.

**அறிவியல் படைத்த**
**பொறிபோல் தன் கடன் பொறுமை யொடாற்றும்**
**குடிமகன் பசியொடு கூட்டுக் குடும்பம்**
**நெடிது கண்டு தன் நிழலென வறுமையை**
**ஏற்பவன்: தன்சுமை ஏறினும் பொறுமையாய்**
**நோற்பவன் நெஞ்சம் நுடங்கா வலிமையன்;**
**வெய்யிலும் குளிரும் மேயும் மேனியன்**
**செய்யும் தொழிலோடு சேர்ந்தே வாழ்பவன்**
**உயர்வினும் தாழ்வினும் உழைப்பவன்** (கு.க., ப.567)

என்று மிகத் தெளிவாக உழவனை அடையாளப்படுத்துகிறார்.

சுந்தரர் இறைவனைப் பாடும் போது 'பித்தா' என்று விளித்தார். அது போலவே குலோத்துங்கன் உழவனைப் பித்தன் என்ற சொல் கொண்டு கவிதையைப் படைத்துள்ளார்.

**மண்ணிடைப் பிறந்த வாய்ப்பினைத் தவமென**
**எண்ணியும் களித்தும் இன்புறும் பித்தன்** (கு.க., ப.64)

என்கின்றார். மேலும் கவிதையைத் தொடர்ந்து எழுதும் போது கவிஞர் குலோத்துங்கன்,

**வானம் பொய்க்கினும், வயலிடைப் பயிரினைக்**
**கானால் தீய்க்கினும், கதிரும் குருத்தும்**

**வாடுதல் கண்டுளம் வாடினும், தன்கைப்**
**பாடும் பூட்டிய பகட்டின் மேழியும்**

**உறுவலி தளரா உளமும் கைவிடாது**
**அறுவடை வரும்வரை ஆற்றிடும் உழவன்** (கு.க., ப.64)

என்று படைத்தளிக்கிறார். எப்போதும் விவசாயம் பற்றிய சிந்தனையிலே இருப்பவன்தான் உழவன். இயற்கை செய்கின்ற சதியை எல்லாம் பொறுத்துக் கொண்டு மீண்டும் மீண்டும் தளராமல் அதே தொழிலைச் செய்பவன் தான் உழவன் என்று உழவனின் மேன்மையான சிந்தனையைக் கவிதையில் வடித்துள்ளார்.

கவிஞர் குலோத்துங்கன் உழவுத்தொழில் மகத்துவத்தைச் சொல்லியுள்ளதை விட, உழவனின் உருவத்தையும், அவனின் உழைப்பையும், அவனின் செயல்பாடுகளையும், உழவுத்தொழில் மீது வைத்துள்ள நம்பிக்கையையும், பாசத்தையும் மிக நேர்த்தியாகக் கவிதையாக்கியுள்ளார்.

இதுபோன்ற கவிதையை வெறுமனே கற்பனையால் படைத்துள்ளார் என்று கூறுவதை விட, கவிஞர் விவசாயக் குடும்பத்தைச் சார்ந்ததன் விளைவாக இவ்வாறு தத்ரூபமாகக் கவிதையை யாத்துள்ளார் என்பது மிகையன்று.

## சாதிய ஏற்றத்தாழ்வு

சமுதாயம் பன்னெடுங்காலமாகச் சாதிய ஏற்றத் தாழ்வோடு அமைந்துள்ளது. சாதிய நிலையை, சமுதாய ஏற்றத் தாழ்வு நிலையைப் பல கவிஞர்கள் கவிதையாக்கியுள்ளனர். ஆனால் கவிஞர் குலோத்துங்கன் படைத்துள்ள கவிதைகள் உணர்வுப் பூர்வமாகச் சாயம்பூசாத இயல்பான கவிதைகளாக விளங்குகின்றன.

மனித இனம் சாதி என்னும் பெயரால் பிளவுபடுவதைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில்

**விரிசல் நிதமும் மிடுகிறது-மனம்**
**வெந்தவர் கூட்டம் வளர்கிறது**
**கரிசல் வயல் நிலம் வெடிப்பது போல்-நம்**
**கண்முன் மானிடம் பிளக்கிறது** (கு.க., ப.295)

என்று மனித இனப் பிளவுகளை நேர்த்தியாகக் கூறிவிட்டு எழுதுகிறார்.

**மண்ணொடு விண்ணை இணைக்கின்றோம்-நாம்**
**மானிட சாதியைப் பிரிக்கின்றோம்**
**எண்ணவும் எழுதவும் கூசுகிறேன்-நம்**
**இனத்தின் சிறுமையில் நாணுகிறேன்** (கு.க., ப.295)

என்று அறிவியலின் சாதனையைக் கூறிவிட்டு எல்லாவற்றையும் இணைக்கத் தெரிந்த அறிவியல் யுகத்தில் மனிதர்களை மட்டும் ஏன் பிரிக்கின்றோம் என்று கூறி இது இனத்தின் சிறுமை என நொந்து கொள்கிறார்.

## சாதித் தீயில் தமிழினம்

சாதிப் பிரிப்பு என்பது ஆரியர்கள் கண்ட ஒன்று. தமிழர்கள் ஆதியில் சாதிகள் காணவில்லை என்பதைக் கவிஞர் குலோத்துங்கன்

**சங்கம் கண்டவர், சாதிகள் காணார்**
**எங்கள் மூதையர் ஏற்றமும் தாழ்வும்**
**கடந்த வாழ்வினர்; காலமும் மண்ணிதில்**
**நடந்த நல்லன யாவையும் யாத்தவர்** ( கு.க., ப.324)

என்று கூறுகிறார். மேலும் சாதியை வளர்ப்பவர்கள் சாதாரணப் பொது மக்கள் இல்லை. மாறாக அரசியல் தலைவர்கள்தாம் என்பதைக் கவிதையில் தெளிவாக எழுதியுள்ளார்.

**வகுத்த சாதிகள் மற்றவர் கொணர்ந்து**
**புகுத்திய; நமக்குப் புறமெனின், இன்று**

**சாதியை விடுத்த தமிழர் யாருடா?**
**வேதியர் சாதியை விடுப்பினும், அரசியல்**

**வாதியர் சாதியை வரமெனத் தாங்குவர்**
**சாதியை வைத்து தலைவர் வாழுவர்** (கு.க., ப.324)

என்று வேதனைப்படுகிறார். கவிஞர் இன்றைய இலக்கியத்தின் பாடுபொருளைத் தம் எண்ணத்தின் அருகில் தேங்கிக் கிடக்கின்ற வற்றில் இருந்து எடுக்கின்றனர். எந்த வகையில் கவிஞர் குலோத்துங்கன் சாதியத்தைக் கொடிபிடித்துக் கொண்டிருப்பவர்களை அருகில் பார்க்கிறார். அவர்கள் பெரும்பாலும் சாதித் தலைவர்களாக இருப்பதால் இவைபோன்ற கவிதைகளைப் படைத்துள்ளார்.

## சாதி விடம்

சாதியை விடத்திற்கு ஒப்பிட்டு ஒரு கவிதையைக் கவிஞர் குலோத்துங்கன் படைத்துள்ளார். விடம் மனிதனைக் கொன்று விடும். அதே போலச் சாதிவெறியும் மனிதர்களைக் கொன்று விடுகிறது என்பதைத் தொன்மப் புராணக் கதையைக் கொண்டு விளக்கியுள்ளார்.

**சமநீதிப் பாற்கடலை மீண்டும் மீண்டும்**
**சாதிஎனும் கயிறிட்டுக் கடைந்தீர்; மேலும்**
**அமுதேதும் காணவில்லை; சாதி நஞ்சு**
**அனல்போலப் பரவுதடா! அணைப் பாரில்லை** (கு.க., ப.328)

என்று கவிதையில் ஏக்கத்தை வெளிப்படுத்துகிறார். அதாவது பாற்கடலை இந்திரலோகத்துத் தேவர்களும், அரக்கர்களும் கடைந்த போது விடம் வந்தது. அதனைச் சிவபெருமான் வந்து பருகினார். ஆனால், இன்று 'சாதி' என்னும் நஞ்சு தீப்போலப் பரவுகிறது அதனை அணைப்பதற்கு ஒருவரும் இல்லை என்கின்ற கருத்தினை இக்கவிதையில் முன்வைக்கிறார்.

இதே போன்ற பாற்கடலைக் கடைந்த கதையைக் கொண்டு மேலும் ஒரு கவிதையைக் கவிஞர் படைத்துள்ளார்.

அமுதூறும் என்றெண்ணிக்
கடைந்த பாலில்
அரவத்தின் நஞ்சன்று
விளைந்தாற் போன்று

சமுதாய நீதிக் கொன்று
நிறைத்த நீரில்
சாதியெனும் களை வளரும்
தன்மை கண்டோம்

தருணமிது கல்வியுகம்;
அடிவே ரோடு
சாதியினைத் தகர்ப்பமென
நினைத்தோம்; ஆனால்

ஒரு துணைவிட்டு ஒருதுணையை
ஒண்டி வாழும்
உண்ணி இது; உண்ணி இது
உயிர் பிழைக்கக்

கொழுக் கொம்பு புதிதாகத்
தருவ துண்டோ?
கூற்றுவனுக் குயிர்தருதல்
கொடுமையன்றோ?

வழுவினைச் செய்யாது
சமூக நீதி
வளர்கின்ற வழிகாண்போம்;
சாதி என்னும்

பழியாய்ச் சமுதாயம்
படைத்து வாழ்வோம் (கு.க., ப.331)

என்று ஒரு நம்பிக்கையைக் கொண்டு குலோத்துங்கன் கவிதையை முடிக்கின்றார். ஆனாலும் அவர் கூறியதுபோல அது 'ஒருதுணை விட்டு ஒரு துணையை ஒண்டி வாழும் உண்ணி இது; உண்ணி இது' என்பதாக 'உண்ணி' என்னும் ஒட்டுண்ணிப் பூச்சியைப் போல எதாவதொரு ஒட்டினைத் தேடிக்கொண்டு சாதி பூரணமாக வாழும்.

### சாதியால் சாகின்றனர்

தமிழ் மரபு என்பது சாதிகள் அற்றது. சாதித்தீ எப்படித் தமிழ்நாட்டில் பரவியது என்பது புதிராகவே உள்ளது. கவிஞர்

குலோத்துங்கன் சாதி தமிழ் மரபன்று என்று கவிதையைப் புனைந்துள்ளார்.

**சாதி யென்பது தமிழ் மரபு அன்(று) இது**
**ஆதியி லிருந்தே அறிஞரும் பெரியரும்**
**திருத்தம் வேண்டாத் தெளிவுடன் கூறிய**
**கருத்து** (கு.க., ப.386)

இக்கருத்து தமிழ்ச் சமூகத்தின் தொடக்க காலச் சமுதாய அமைப்பு. ஐந்திணைகளாகிய 'குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை' என்கிற நிலத்தை அடிப்படையாக வைத்துப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதை உணர்த்துகிறது.

ஆனால், இன்று விதியின் செயலால் சாதியம் தலை விரித்தாடுகிறது. அதனை வளர்த்தெடுப்பவர்களைக் கவிஞர் குலோத்துங்கன் 'சிறியவனிலும் சிறியவன்' என்றுரைக்கின்றார்.

**சாதியின் குலத்தின் சகதியில் நெளிந்து**
**ஊதியம் தேடி ஊன்வளர்க் கின்ற**
**சிறியரில் சிறியர் தினந்தொறும் சாதி**
**வெறியினை ஊட்டி வேற்றுமை பெருக்கி**
**என் தமிழ் மக்கள் தம் இனஉணர்(வு) அழிக்கும்**
**புன்மையைக் கண்டு பொங்குமென் நெஞ்சின்**
**ஆத்திரம் தாங்குவ தாற்றிலன்; பேயர் தம்**
**சாத்திரம் விரிவது தடுப்பவர் காணேன்**
**விதியே, விதியே, தமிழ்ச் சாதியை**
**என் செயக் கருதி இருக்கின் றாயடா?**

என்று விதியை நொந்து கொள்கிறார் கவிஞர்.

> ''சாதி என்னும் கொடிய நோய் அன்று முதல் இன்று வரை மக்களை அலைக்கழித்து அவமதித்தது. அனாதரவாக்கும் நிலையைக் காலங்காலமாய்க் கண்டு வருகிறோம். சமுதாயத்தின்மீது அக்கறை கொண்ட இலக்கியப் படைப்பாளிகள் காலந்தோறும் சாதிக் கொடுமையை எதிர்த்துக் குரல் எழுப்பிக் கொண்டே இருக்கின்றனர். எனினும் சாதி ஒழிந்த பாடில்லை.''

என்கிறார் நிர்மலா மோகன். இக்கூற்றும் குலோத்துங்கன் கவிதைக்குப்

பொருந்துவதாக அமைந்துள்ளது. குலோத்துங்கனும் இதுபோலவே தம் கவிதையில் பல இடங்களில் சாதியை நினைத்து, வேதனைப் படுகிறார்.

இன்று தமிழன் நாள்தோறும் சாதிப்பெயரால் சண்டையிட்டுக் கொண்டு இறந்து போகிறான். இதனை மிக நேர்த்தியாக,

**சாதித் தழல்தனில் தமிழினம் வெந்தது**
**ஆதிக் குடியினர் அமரரின் றாயினர்** (கு.க., ப.324)

என்று வேதனையின் உச்சத்தில் கவிதையைப் படைத்துள்ளார். இவை போன்ற கவிதை வரிகளைக் கவிஞர் பல்வேறான இடங்களில் இத்தொகுதி முழுவதும் பயன்படுத்தியுள்ளார்.

இங்ஙனம் காலந்தோறும் இலக்கியங்களில் இடம்பெற்று வந்த சாதி எதிர்ப்புக்குரல் இன்றைய புதுக்கவிதைகளில் பரிகாசமாக, அவலமாக, ஆவேசமாக, எழுச்சி தரும் வகையாக, தீர்வு காணும் நோக்காக அமைந்துள்ளது. குலோத்துங்கனும் என்றாவது ஒரு நாள் சாதிஒழியும் என்ற நம்பிக்கையில் கவிதையைப் படைத்துள்ளார்.

## பெண்கள் நிலை

குலோத்துங்கன் தம் கவிதைகளில் அனைத்துச் சமுதாயக் கூறுகளையும் பாடுபொருளாகக் கொண்டு படைத்துள்ளார். தமிழ்ச் சமுதாயம் தொடக்க காலத்தில் பெண்களை மையமாகக் கொண்டு 'தாய்வழிச் சமுதாயமாக' இருந்தது என்பது யாவரும் அறிந்ததே. அதே போலச் சமூகத்தின் தொடக்கம் என்பதும் தாய்வழிச் சமூகமாகவே இருந்துள்ளது. எட்வர்டு பர்னட் டைலர் என்னும் ஆங்கிலேய மானிடவியல் அறிஞர் 'பேறுகாலத் தனிமை' 'சேய்வழி அழைத்தல்' ஆகிய இரண்டு கூறுகளின்வழி தாய்வழிச் சமூகமே முதலில் தோன்றிய சமூகம் என்பதை நிறுவுகிறார் என்று பக்தவத்சல பாரதி தமிழர் மானிடவியல் நூலில் கூறுகிறார்.

இந்த அடிப்படையில் பெண்களுக்கு முதன்மை கொடுத்த சமுதாயம் எப்போது அவர்களை இரண்டாம் நிலைக்குக் கொண்டு சென்றது எனக் கூறமுடியவில்லை. ஆனால் இன்று பல இலக்கியவாதிகளும் பெண்களின் சுதந்திரத்திற்காகக் குரல் கொடுக்கின்றனர். அந்த வகையில் கவிஞர் குலோத்துங்கனும் தம் கவிதைகளில் பெண்களின் நிலைபற்றிப் பல செய்திகளைப் புனைந்துள்ளார். அவற்றை இப்பகுதியில் காணலாம்.

## இயற்கை தந்த உருவம்

பெண் இயற்கை தந்த உருவம் எனவேதான் பெண்ணைப் பற்றி, அவளின் மேனியைப் பற்றிக் கவிஞர் குலோத்துங்கன்,

**மாந்தளிர் மேனி, வாழ்வின் சுவையெலாம்**
**ஏந்திய உருவம், இளந்தசை அரும்பிய**
**பூந்துணர், வையப் பொலிவெலாந் திரட்டி**
**ஈந்தனள் இயற்கை**

என்கிறார். பெண்கள் மாந்தளிர் போன்ற மேனியைப் பெற்றவர்கள் என்று கூறுகிறார். இக்கவிதையின் இறுதியில் பெண்மை வாழ்க என்கிறார்.

> ''தற்காலத்தில் நமது நாட்டிற்கு முக்கியமாக வேண்டிய தர்மங்கள் தேசபக்தியும், தர்ம வீரமும், தியாக புத்தியும், குற்றமற்ற பிரேமையுமாகும். ஆகையால் இக்காலத்து நூல்களைப் படிக்கும் போது இத்தகைய தர்மங்களின் உணர்ச்சி தொனிக்க வேண்டும்''

என்பது 1930களில் சிறுகதையாசிரியராக இருந்த வ.வே.சு. அய்யரின் கூற்று. ஆனால் இவற்றை வளர்த்தெடுப்பதற்கு மாறாக இவற்றின் எதிர்மறைகள் வலுப்பெற்றுவிட்ட 21ஆம் நூற்றாண்டு இது. இவ்வெதிர்வுணர்வுகளை நீக்குவதற்குப் போராட வேண்டிய போராட்டக்களத்தில் நின்று கொண்டிருக்கிறது இன்றைய சமூகம் என்று கி.லோதிலதா கூறுகிறார். இந்தச் சூழ்நிலையில் கவிஞர் குலோத்துங்கன் பெண்களின் நிலையைப் பற்றி,

**காலமெலாம் பாடியதும், காவி யங்கள்**
**கருப்பொருளாய்க் கொண்டதுவும், கலைகட் கெல்லாம்**
**மூலமென நின்றதுவும், உயிர்தொட் டீர்க்கும்**
**முரல்மலர் பெண்மையடா; தொன்று தொட்டுத்**
**தேடும் ஒரு புதையலடா; தெளியும் தோறும்**
**தீராத புதுமையடா; செம்மை எல்லாம்**
**கூடும் ஒரு சங்கமம்; ஓம் உயிரும் ஊனும்**
**குளிர்விக்கும் தென்றலடா; குறைவிலாத**
**புத்துணர்வின் மணற்கேணீ; அழகு கோடி**
**பூக்கின்ற மலர்காடு; கண்ஒவ் வொன்றும்**

முத்துடைய மாதுளைபோல் அங்கம் தோறும்
முடிவில்லாச் சுவையமைந்த முழுமை பெண்மை

(கு.க., ப.436)

என்று பெண்ணின் அத்துணைப் பண்பு நலன்களையும் மிகவும் அருமையாகக் கவிதையாக்கியுள்ளார். கவிஞர் குலோத்துங்கன் குறித்துள்ள பெண்களின் நிலை என்பது அவர்களின் சிறப்புக்களைத் தருவதாக அமைந்துள்ளது.

இக்கவிதையில் குலோத்துங்கன் 'அனைத்தும் பெண்மை' என்று கூறியுள்ளார். இதனைத்தான் பாரதியார் பாரதப்பெரும் நாட்டை ஒரு தாயாகப் பாவித்துப் பாடியுள்ளார்.

**பூமியினும் பொறை மிக்குடையாள் பெரும்**
**புண்ணிய நெஞ்சினள் தாய்-எனில்**
**தோமிழைப்பார் முன் நின்றிடுங்கால் கொடும்**
**துர்க்கை யனையவர் தாய்**
**நல்லறம் நாடிய மன்னரை வாழ்த்தி**
**நயம்புரிவாள் எங்கள் தாய்-அவர்**
**அல்லவராயின் அவரை விழுங்கிப்பின்**
**ஆனந்தக் கூந்திடுவாள்....**
**அறுபது கோடி தடக்கைகளாலும்**
**அறங்கள் நடத்துவள் தாய்-தனைச்**
**செறுவது நாடி வருபவரைத் துகள்**
**செய்துகிடத்துவள் தாய்**

என்று பாரதியார் கூறியுள்ளது. குலோத்துங்கனின் 'அடிப்படை அனைத்துக்குமானது பெண்' என்பதற்குச் சரியாக உள்ளது.

## பெண்கள் சிறப்பு

பெண்களின் சிறப்புக்களைப் பற்றிப் பல கவிஞர்கள் பேசியுள்ளனர். ஆனால் குலோத்துங்கன் கவிதை படைக்கும் போது பெண்கள் ஆதி சமுதாயத்தில் வேளாண்மைத் தொழிலைச் செய்தவர்கள், தாய்மையுள்ளவர்கள், மானிடர்களைக் காப்பாற்றும் தெய்வங்கள் போன்றவாறு கூறியுள்ளார்.

**வீட்டில் பயிர்வளர்த்து**
**வேளாண்மை கண்டவர்கள்**
**காட்டில் விலங்கெறிதல்**
**கடந்த ஒரு நாகரிகம்**

கூட்டுவித்த மேழியுகம்
கொண்டு வந்த மேதையர்கள்
ஊட்டுவிக்கும் தாய்மையினர்
உலகம் புரப்பவர்கள்

ஆணின் உயர்ந்தவர்கள்
ஆதிமுதல் மானிடத்தைப்
பேணி வளர்த்தவர்கள்
பெண் என்னும் தெய்வங்கள் (கு.க., ப.459)

இக் கவிதையை வாசித்த பிறகு பழமை குறித்த தேடலைத் தொடங்க மனம் நோக்கியது. அப்போது உ.வா.கி. அவர்கள் தொடக்க காலத்தில் பெண்களின் நிலை சிறப்புக் குறித்து எழுதியதைக் காண்போம்.

'ஆண்டாண்டு காலமாகப் பெண்கள் அடிமையாக இருப்பது உண்மை. ஆனால் ஆரம்பத்திலேருந்து இல்லை. மனித குல வரலாற்றின் துவக்கத்தில் இத்தகைய பால் வேறுபாடுகள் இல்லை. யாருக்கும் யாரும் தாழ்ந்தவர் இல்லை. நிர்ணயமான திருமண உறவுகளும் இல்லாத காலம் அது. எந்த ஆணும் எந்தப் பெண்ணும் உறவு கொள்ளலாம். பெண் நிகராக மட்டும் அல்ல ஒரு படி மேலே போய்த் தலைமை தாங்குபவளாகவும் இருந்திருக்கிறாள். சமூகப் பங்களிப்பு செய்திருக்கிறாள்.

மனித குலத்துக்கு உதவுகிற பல கண்டுபிடிப்புக்களையும் நிகழ்த்தியிருக்கிறாள். மனிதர்கள் குழு குழுவாக வாழ்ந்த காலத்தில், காடுகளில் திரிந்த போது, மற்ற குழுக்களிடமிருந்தும், மிருகங்களிடமிருந்தும் தற்காத்துக் கொள்ள நிறைய ஆட்கள் தேவைப்பட்டனர். இயற்கையின் சீற்றத்தால், விபத்தால், வியாதியால், மிருகங்களின் தாக்குதலால் குழுவின் உறுப்பினர்கள் இறக்கும் போது, காலியிடத்தைப் பூர்த்தி செய்யவும் ஆட்கள் வேண்டியிருந்தனர். குழந்தை பிறப்புப் பற்றிய விவரங்கள் தெரியாத பின்னணியில் குழந்தைகளைப் பெற்றுக் கொடுக்கிற பெண்கள் முக்கியமானவர்களாகக் கருதப்பட்டனர். பெண் என்பது செழிப்பு, செழுமை, வளம் என்றிருந்தது. மனித சக்தியை உருவாக்குவதால் போற்றப்படுவளாகவும் இருந்தாள். 'பெண்ணியம் பேசலாம் வாங்க' என்னும் சிறு நூலில் வாசுகி இவ்வாறு கூறியுள்ளார். இக்கருத்தை மிகத் தெளிவாக எளிமையாகக் கவதையாக்கித் தந்துள்ளார் குலோத்துங்கன்.

பெண் காலப்போக்கில் அடிமையாகி விட்டாள். அதற்கான காரணம் குழந்தை பெறுவதற்கு ஆணின் துணை தேவை என்ற போது ஆண்களால் பெண்கள் அடிமைப்படுத்தப்பட்டனர். ஆனால் இன்று சுதந்திரத்தை நோக்கியும், ஆணுக்குப் பெண் சமம் என்பதை நோக்கியும் பெண் புரட்சியாளர்கள் புறப்பட்டு விட்டனர். ஆனாலும் அதில் உள்ள சிக்கல்களைக் கவிஞர் குலோத்துங்கன் பல கவிதைகளில் மிகவும் அழகாகப்புனைந்துள்ளார்.

**ஆண்கள் செய்தொழில் யாவும் தாம் செயும்**
**மாண்பும் பெற்றனர் மங்கையர்; ஆயினும்**
**மதுவும் மாதரும் மண்ணின் தேவையில்**
**பொதுவென் றெண்ணிடும் போக்கில் இன்னமும்**
**மாற்றம் காண்கிலன்** (கு.க., ப.468)

என்றும், இன்னமும் பெண்களை இச் சமுதாயம் போகப் பொருளாகத் தான் பார்க்கின்றது என்பதைக் கவிஞர் குலோத்துங்கன்,

**மக்கள் மத்தியில்**
**செல்லும் பல்வகைச் செய்தித் தாள்களின்**
**அட்டையில் கோலம் ஆயிரம் பூண்டு**
**பெட்டைநிர் வாணம் பேசும் ஓவியம்** (கு.க., ப.469)

என்று கவிதை புனைத்துள்ளார். மேலும்,

**பெண்மையைப் போகப் பொருளாய்ப்**
**பார்க்கும் மரபில், பார்வையில், மாறுதல்**
**ஏற்படும் நாள்வரை 'இருபால்' சமத்துவம்**
**கனவு, கற்பனை; கானல் நீர்** (கு.க., ப.470)

என்று பெண்ணின் சுதந்திரம் கனவாகத்தான் உள்ளது என்பதைக் கவிதையில் மிக அழகாக உணர்வுப்பூர்வமாக அமைத்துள்ளார்.

### உரிமை தருவதற்கு யார்?

பெண்கள் உரிமைக்காகப் பல வழிகளில் போராட்டங்களை நடத்துகின்றனர். பெண்கள் விடுதலை என்னும் பெயரில் கணவனிடம் விவாகரத்துக் கூட உடனே வாங்கிக் கொண்டு தனியாக வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். அப்படிப்பட்ட பெண்களும் பெண்ணியவாதிகளாகத் தங்களை அடையாளப்படுத்திக் கொள்கின்றனர். அவர்கள் சமீப காலமாக ஆண்களை நோக்கிப் பல கேள்விகளைக் கேட்கின்றனர். அதனையே கவிஞர் குலோத்துங்கனும் தமது கவிதையில் எழுதியுள்ளார்.

சமஉடைமை, உரிமையெலாம் தந்தோம் என்பீர்
தருவதற்கும் பெருவதற்கும் சமத்து வந்தான்
உமதுடைமை எனும் நினைவோ? கொடுத்தும் பெற்றும்
உரிமைகளும் சமத்துவமும் உதித்த தில்லை
கெஞ்சுவதால் வருவதில்லை; உரிமை தன்னைக்
கேட்டெ வரும் பெற்றதில்லை; கிளர்தெ ழுந்து
வஞ்சியர்கள் தலை நிமிர்க! வளர்க வாழ்க! (கு.க., ப.464)

என்று குரல் கொடுக்கிறார். உரிமைகள் யாருக்கும் சொந்தமில்லை யாரும் கொடுத்தும் யாரும் பெறுவதற்கில்லை எனவே உரிமை யெல்லாம் தந்தோம் என்று கூறாதீர்கள் என்கின்றார்.

## அழிவை நோக்கிய சுதந்திரம்

பல கவிதைகளில் பெண்களின் நிலையைப் பற்றி எழுதியுள்ள கவிஞர் குலோத்துங்கன் தமிழ் நாட்டின் பெண்களின் நிலையையும் மறந்தாரில்லை. சுதந்திரம் என்னும் பெயரில் தற்போதுள்ள பெண்கள் எவ்வாறு தம்மைத்தாமே சீரழித்து வருகிறார்கள் என்பதையும் தம் கவிதையில் கூறியுள்ளார்.

ஆண்களொடு போட்டியிட
அரிவையர்கள் பண்பாட்டின்
தூண்களெனும் தம்பெருமை
தோற்கமனம் கொண்டு விட்டார்

புகைப்பிடித்தல் கற்றார்கள்;
புருடருக்கு நேராகச்
சிகை முடித்துக் கொண்டார்கள்;
தெருவில் உலவுகையில்

மங்கையயெனத் தோன்றுவதற்கு
மனமிலராய், ஆடவர்போல்
அங்கிகலும், கால்நுழையும்
ஆடைகளும் பூண்டார்கள்

போதை, மயக்கப்
பொருள்களிலே தம் உரிமைப்
பாதை இருப்பது போல்
பயணம் தொடர்ந்தார்கள்

ஆடவர்க்குத் தாம்சமமாய்
ஆகுநிலை, ஆடவர்தம்

**கேடனைத்தும் கற்றால்தான்**
**கிட்டுமெனும் தத்துவத்தை**

**ஆரிவர்க்குக் கூறினரோ**
**அறியோம் நாம், போராடும்**
**நாரியர்கள் அந்த வழி**
**நனிதூரம் சென்று விட்டார்** (கு.க., ப.460-61)

இக்கவிதையில் கவிஞர் சரிசமமாய் இருந்து கருத்துரைக்கிறார். அதாவது ஆண்களைப் பார்த்து உரிமைகளைத் தருவதற்கு யார் நீவிர்? என்கிறார். பெண்களின் சுதந்திரம் என்னும் மாயை நிலையை, குறிப்பாகப் பெண்ணியம் என்னும் போர்வையில் வாழ்க்கையை இழந்து சீரழிந்து போகும் பெண்களைச் சாடுகிறார். அந்த வகையில் இவர் சிறந்த தமிழ்க் கவிஞராக இருக்கிறார்.

**காதல்**

காலங்காலமாகக் காதல் கவிதை உலக இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கிறது. குறிப்பாகப் பாரசீகர்கள் கி.மு. 1000த்திலேயே காதல் கவிதைகளைப் படைத்தனர் என்று க.பா. அறவாணன் குறிப்பிடுகிறார். தமிழிலும் சங்க காலத்தில் இருந்து காதல் கவிதைகள் இடம்பெற்றிருக்கின்றன.

**நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று;**
**நீரினும் ஆரள வின்றே; சாரல்**
**கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே**

என்னும் குறுந்தொகைப் பாடலைத் தமிழில் காதல் கவிதைக்கான எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். புதுக்கவிதை உருவாகிய பின்பு காதலுக்குப் பல கவிஞர்களும் நல்ல விளக்கத்தில் கவிதையை இயற்றியுள்ளனர்.

கவிஞர் வைரமுத்து காதல் பற்றிக் கூறியுள்ள கருத்து சிறப்பானதாக அமைந்துள்ளது.

**விழியில் விழுந்து, இதயம் நுழைந்து**
**உயிரில் கலந்த, உறவே**

என்று காதலுக்கு விளக்கம் தருகிறார்.

இவ்வளவு விளக்கங்களும் கவிதைகளும் காதலுக்கு வெளிவந்து கொண்டேயிருந்தாலும், இன்று காதல் என்பது

போலியாக உடல்புணர்ச்சியை நோக்கிச் செல்கிறது, இந்தச் சூழ்நிலையில் கவிஞர் குலோத்துங்கன் காதல் குறித்துப் பல நல்ல கவிதைகளைப் படைத்துள்ளார். கவிஞர் காதல் என்பது தொடங்கும் நிலையைக் கவிதையில் கூறும் போது

**கைகள் தொடாது, கால்கள் படாது**
**கலவிகள் நிகழ்வண்டு-உணர்வுகள்**

**கரை புரண்டெழுவ துண்டு**
**மையல் விழிகள், வார்த்தைகள் அணைந்து**

**மருவம்; தழுவுமடா-யாவும்**
**மறந்தவர் கலந்தரடா** (கு.க., ப.439)

என்று கூறுகிறார்; அதாவது உண்மையான காதல் தொடங்கும் சூழ்நிலையைக் கூறுகிறார். மேலும் எப்படிக் காதல் மலரும் என்பதை,

**நெஞ்சினில் அரும்பி நினைவில் வளர்ந்து**
**நெருக்கம் மலருமடா-உறவின்**

**நிறைவுகள் கனியுமடா**
**கொஞ்சுதல், தழுவல், குலவுதல், உடல்கள்**

**கூடாதியலுடா-ஈருளம்**
**குவிவதும் கலவியடா** (கு.க., ப.439)

என்கிறார். உள்ளங்கள் இணைவதுதான் காதல்; எனவே உள்ளங்கள் இணைய வேண்டும் என்கிறார். நெஞ்சங்களில் அரும்பி, நினைவில் வளர்ந்து நெருக்கம் வளர வேண்டும் என்கிற உள்ளப் புணர்ச்சியை இக்கவிதையில் தெளிவாகக் கூறியுள்ளார்.

## எப்போது காதல் அரும்பும்?

காதல் என்பது எல்லோருக்கும் ஒரே மாதிரியாகத் தோன்றுவதில்லை. சிலருக்கு அழகினைப் பார்த்ததும், சிலருக்குப் செல்வ வளத்தைப் பார்த்ததும், பதவியைப் பார்த்ததும் காதல் வரும். ஆனால் எப்போது வரவேண்டும் என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் கவிதையில்,

**இளமையின் துடிப்பினால் நீ**
**ஈர்த்தனை இல்லை; யானுள்**
**வளமுடை மேனி கண்டு**
**மயங்கின னில்லை வான**

மின்னலும் மங்கு மென்ன
மெல்லிதழ் விரிய வீசும்
புன்னகை வெள்ளந் தன்னில்
புலனெலாம் நனைந்து நின்ற

உணர்வினால் எனது நெஞ்சம்
உண்வய மாக வில்லை
தணலென ஒளிரும் ஆசை
தசையிடைப் பிறந்த தன்று

மங்கைநீ என்ப தொன்றும்
வடிவினிற் சிறந்த தொன்றும்
நங்கைநீ தேவ மாதின்
நகலென அசைவ தொன்றும்

கண்டுளம் மகிழ்ந்தேன்; ஆயின்
காதலங் கரும்ப வில்லை
பெண்மனம் எண்ணி எண்ணிப்
பெருமிதம் கொள்ளத் தக்க

மாண்பு நீ கொண்ட தால் நான்
மயங்கினேன் (கு.க. ப.451-452)

என்று கவிதையை முடித்துள்ளார் கவிஞர் குலோத்துங்கன் கவிதையின் இறுதியில் 'காமம் ஓர் அணுவும் இல்லை' என்று முடித்துள்ளார். இது போன்ற நிலையில்தான் காதலர்கள் ஒருவருக்கொருவர் மயங்க வேண்டும் என்கிறார். அவ்வாறு இல்லாமல் வருகின்ற காதல் இலாப நோக்கத்திற்காக வருகின்ற காதல் என்கிறார்.

பொதுவாகக் காதல் என்பது முன்னைய கண்ணபிரான் காலம் முதல் இன்றைய கணினிக் காலம் வரையில் உயிர்ப்புடன் இயங்கி வரும் ஓர் உயரிய உணர்வு; அருமையும் எளிமையும் அழகும் பொருந்தி மூன்றெழுத்து மந்திரம்' என்கின்றார் இரா.மோகன்.

அந்தக் காதலைக் கவிஞர் குலோத்துங்கன் மிகவும் உணர்வுப் பூர்வமாகக் கவிதையாக்கியுள்ளார். காதலி, காதலனைச் சிறு தீண்டல் தீண்டினால் காதலன் அடைகின்ற இன்பத்தைக் கவிஞர்

மென்விரல்கள் தீண்டலின் என் மெய்யடைந்த பேருணர்வின்
தன்மை யுரைக்கத் தமிழறியேன்; உன்னுடல் ஓர்

மாயமோ அன்றி ஒரு மர்மமோ! என் மார்பில்
தோயநீ அன்பில் துவளுங்கால் கண்ட சுகம்

பேசும் தரத்ததுவோ, பெருமழையும் பேய்க்காற்றும்
வீசும் பருவத்து வெள்ளமென மேலெழுந்து

பொங்கும் களிப்பும் புலன்கடந்த இன்புணர்வும்
அங்கம் முழுமையுமாய், அணுஅணுவால் ஊடுருவத்

திளைத்த அனுபவத்தை, தெளிவிழந்து சோர்வடைந்து
களைத்த நிலையின் களிப்பை, என் கண்ணே நான்

பாடுதற்கு வையம் படைத்தமொழி ஏதுமில்லை
ஏடுதரும் சொற்குலங்கள் இதயப் பெருக்கத்தில்

ஓங்கும், கரைபுரளும், உணர்வுகளைப் பேசுவதில்
மூங்கைகளே; இந்நிலையில் மொழியென்ப தொன்றுமிலை
(கு.க., ப.445)

என்று கூறுகிறார். காதலியின் சிறு விரல் தீண்டல் காரணமாகக் காதலன் அடைந்த இன்பத்தைக் கூறுவதற்குத் தமிழறியேன், என்று கூறுவதோடு, அந்த இன்பத்தைக் கூறுவதற்கு இந்த உலகத்தில் எந்த மொழியும் இல்லை என்கிறான். இதுதான் காதல் உணர்வு.

காதல் பற்றி வ.சுப. மாணிக்கனார் கூறுவது மிகவும் பொருத்தப்பாடுடையதாகும். அதாவது 'நம் பிறப்போட ஒட்டியது, உலகப் பிறப்பை அருளுவது யாண்டும் பரந்தது, உணர்ச்சியுள் வலியது, ஐம்புலவின்பமும் ஒருங்கு தருவது, எண்ணம் சொல் செயலெல்லாம் இனிப்பது எது? காதல், காதல், காதல், காதல். இக் காதலே இயல்பான பாலுணர்ச்சியே அகத்திணையிலக்கியத்தின் பாடற்பொருளாம். உலகியலில் வாழ்வியலைக் கண்ட தமிழினத்தின் தனியிலக்கியத்துக்கு வேறு எவ்வுணர்ச்சி பாடுபொருளாக இருக்க முடியும்? இவ்வுணர்ச்சிக்குத் திணையும் துறையும் வகுத்துத் தனியிலக்கியம் காணும் எண்ணம் வேறு எவ்வினத்துக்குத் தோன்ற முடியும்?' என்கிறார். இக்கூற்றை இரா.மோகன் தம் நூலில் கையாண்டுள்ளார்.

## காதல் மொழி

காதல் என்கிற சிறப்பிற்கு வ.சுப.மாணிக்கம் தந்த விளக்கத்தைக் குலோத்துங்கனின் எல்லாக் காதல் கவிதைகளிலும்

காணமுடிகிறது. காதல் மொழி குறித்துக் கவிஞர் குலோத்துங்கன் கூறும்போது

செவிகளுக்கும் நினைவுண்டு; புலரும் வான்நேர்
திருமகள் நின் சுவைமொழியை மீண்டும் மீண்டும்
புவியிருக்கும் வரை கேட்பேன் (கு.க., ப.443)

என்று கூறுகிறார். உண்மையான காதல் என்றும் காதலர்களை விட்டு நீங்காது அது இந்தப் பூமி இயங்கும் வரையில் மறவாமல் நினைவில் இருக்கும் என்பதைக் கவிஞர் தம் கவிதையில் வடித்துள்ளார். மேலும்

நம்மிரு நெஞ்சின் பிணைப்பாலே-புது
ஞாலம் பிறப்பதும் சாத்தியம்
இம்மியும் பொய்யிலை, நம்முளம்-உடல்
இன்பத்தைத் தாண்டிக் கலந்தவை (கு.க., ப.442)

என்று புனைந்துள்ளார். காதல் இந்த உலகத்தில் மிகுந்த வலிமையுடையது. உண்மையான காதல் எப்போதும் தோற்காது. காதலர்கள் காதலில் தோல்வியைத் தழுவலாம். ஆனால் காதல் ஒரு போதும் அவர்கள் மனதில் இருந்து நீங்காது. அது வாழ்ந்து கொண்டு தான் இருக்கும். எனவே தான் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில்

செந்தம் மறந்தவர் சென்றதை எண்ணிநீ
சோர்ந்து துவள்வதும் ஏன்மனமே?
பந்தமி யார் உந்தன் பக்க மிலாதது
பாதிப்ப தேன் உனை என் மனமே?
நம்மை மறந்தவர் தம்மை மறந்திட
நாமறி யாததும் ஏன் மனமே?
உம்மையும் மிஞ்சிய ஏக்கம் ஒன் றாழத்தில்
ஊற்றெனப் பொங்குவ தேன்மனமே?
பட்டறி வென்பதும் பள்ளியின் பாடமும்
பாசம் செயும் துயர் தீர்ப்பதிலை
விட்டவர் தம்மை விடத்தெரி யாதவுன்
வேதனை தாங்குவ தாற்றுகிலேன்
பற்றொடு நின்கரம் பற்றினர் எண்ணமாய்ப்
பைத்தியம் ஆவதுன் பாதையெனின்
கற்றதி லென்பயன் கேட்டதிலென் பயன்
கண்டதி லென் பயன் என்மனமே?

ஆல மரக்கிளை வேரென நாள்தோறும்
ஆசை வலுப்பெறக் காணுகிறேன் (கு.க., ப.449)

என்று பிரிந்த பின்பு காதல் வலிமையடைவதைக் கவிதையாக்கி யுள்ளார் கவிஞர் குலோத்துங்கன். பொதுவாகவே காதலர்கள் பிரிந்த பின்புதான் அவர்களுக்குள் காதல் வலிமையடைகிறது. அதனால் தான் அவர்கள் தற்கொலை செய்து கொள்கிறார்கள்.

## பொய்க்காதல்

காதல் எவ்வளவு புனிதமானதாக இருந்தாலும் ஒரு சிலர் அக்காதலைக் கொச்சைப் படுத்தும் விதமாகப் பொய்க்காதலாக ஆக்கி விடுகின்றனர். அதனையும் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் வடித்துள்ளார்.

நீ நினைப்ப தில்லை எனை;
நேற்றுவரை உன்னுளத்தில்
யானிருந்த பீடத்தில்
யாரிருக்கத் தக்கவர்? நீ

'உன்னைப் பிரிந்தால் இவ்
வுலகமே வெறுமை' யென
முன்னை பலதடவை
மொழிந்ததுவும் பொய்யோ? நாம்

பாசமெனும் பாற்கடலில்
படகோட்டிப் பண்ணிசைத்த
நேசம் முறிந்ததுவும்
நிசந்தானோ? என்னுடலின்

அணுவனைத்தும் நிற்பவள் நீ!

..........

நீரில் கலந்தபொருள்
நெருப்பால் பிரிந்திடலாம்

நாரில் தொகுத்த மலர்
நகம் கொண்டு வீழ்த்திடலாம்
தரணியில் நம்பிணைப்பு
ஈருயிரின் வேதியியல்

இணைப்பென் றிருந்ததெய்வம்
ஓருயிரின் கற்பனையோ?

**உலகம் என நாமழைக்கும்**
**விந்தை இடமிதினில்**

**விளைகின்ற நட்பனைத்தும்**
**சந்தை உறவுகளோ?**
**தனி இருவர் நம்காதல்**
**புனித உணர்வுகளின்**

**பூரணம் என் றெண்ணியதும்**
**இனி கனவுகளோ?** (கு.க., ப.454)

என்று நெடிய கவிதையைப் படைத்துப் பிரிந்து செல்வதற்குமுன் காதலர்கள் பேசிக் கொண்டதெல்லாம் பொய்யானது என்பதைக் கேள்விக் கணைகளாய்த் தொடுக்கிறார். உண்மைக் காதலுக்கு இடையே பொய்க்காதலும் உண்டு என்பதை இக்கவிதை காட்டுகிறது.

குலோத்துங்கன் மானுடத்தைப் பற்றிப் பல்வேறு கவிதைகளை இயற்றியுள்ளார். அவற்றிற்குக் கொஞ்சமும் சளைக்காமல் காதல் சார்ந்த கவிதைகளையும் இயற்றியுள்ளார். எல்லாத் தளங்களிலும் கவிஞன் தன் கவித்துவத்தைக் காட்ட முடியும் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாக அமைகிறது.

## மனித நேயம்

இன்றை உலகில் மனிதநேயம் என்பது கேள்விக்குறியாக மாறிப்போய் விட்டது. மனிதன் சக மனிதன் மீது காட்டும் அன்பு, இரக்கம், பாசம் போன்றவை அர்த்தமிழந்து விட்டன. இச்சூழ்நிலையில் கவிஞர் குலோத்துங்கன் மனிதநேயம் கேள்விக்குள்ளாவதைத் தம் கவிதையில் புனைந்துள்ளார்.

**ஐந்தில் ஒரு பங்கினர்; நீர் உலகச் சொத்தில்**
**ஐந்தில் ஒரு நான்கினையும் அனுப விக்கும்**
**நிந்தையினைச் சுமக்கின்றீர்; கூச்சமின்றி**
**நீதியுரை பகர்கின்றீர் உலகுக்கெல்லாம்!**

**தனிமனிதர் உரிமையெனச் சொல்வீர்; இந்தத்**
**தரணியெலாம் மானிடத்தின் உரிமை காக்கும்**
**புனிதரெனப் புறப்பட்டீர்; உம் வியூகம்**
**புரியாத எளியர் உமைப் போற்றி நிற்பர்**

**தனிமனிதர் ஏழை எனல் சகசம்; இந்தத்**
**தரணியில் கண்டதுயாம்; ஆனால் இன்று**
**நனிவறிய நாடுகள் ஓர்புறமும், செல்வ**
**நலம் பொங்கும் நாடுகள் ஒருபுறமும் நிற்க**

**வறுமையெலாம் ஒரு பக்கம்; வாழ்வில் கண்ட**
**வளமெல்லாம் உம்பக்கம்; மனித நேயப்**
**பெருமையை பேசுகிறீர்; பிறரைத் தேய்த்துப்**
**பெருவாழ்வு வாழ்வதா மனிதநேயம்** (கு.க., ப.302)

இக்கவிதை மிகப்பெரிய பொதுவுடைமைக் கொள்கையைக் கொண்டுள்ளது. உலகில் உள்ள வளங்களைப் பகுந்தளிக்காமல் உலகில் உள்ள வளர்ந்த நாடுகள் ஏறத்தாழ 20 சதவீதம் தான் மக்கள் தொகையைப் பெற்றுள்ளன. ஆனால் 80 சதவீத வளங்களை அனுபவிக்கின்றனர். அதே வேளையில் வளரும் மற்றும் ஏழைநாடுகள் 80 சதவீதம் மக்கள் தொகையைக் கொண்டுள்ளன. ஆனால் 20 சதவீதம் வளங்கள்தான் அனுபவிக்கின்றன. இந்த மாதிரியான சூழ்நிலையில் மனிதநேயம் எங்கு இருக்கிறது என்கிற கேள்வியை இக்கவிதையில் கவிஞர் குலோத்துங்கன் தெளிவாகக் கேட்டுக் கொண்டுள்ளார்.

## அடுத்தவர் துயரம் கண்டு இரங்கல்

குலோத்துங்கன் கவிதைகள் எல்லாக் காலங்களுக்கும் பொருந்தும் தன்மையில் அமைந்துள்ளன. அடுத்தவர்களின் துயரங்களைத் தம் துயரம் போல் எண்ணுபவர்களே மனிதநேயவாதிகள். 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்கிறார் வள்ளலார். அது போல எத்தனைபேர் மற்றவர்கள் துன்பத்தைக் கண்டு வருந்துகிறார்கள். யாருமில்லை ஆனால் கவிஞர் குலோத்துங்கன் 'நாளை விடியும்' என்கிற கவிதையில் மற்றவர்களின் துயரத்தைக் கண்டு மனம் வாடுகிறார்.

**உடையேது மில்லாது**
**தோல் போர்த்த கூடு**
**உயிரொன்று வதிவதற்(கு)**
**எலும்பில் செய் வீடு**

**பசியோடு போராடி**
**அயர்ந்துள்ள கண்கள்;**

**பார்க்கவோ கேட்கவோ**
**உறவற்ற சீவன்**

**புசியாத குடல் அழலில்**
**புண்ணான போதும்**
**புவி வாழ்வு நனிமவர்க்கும்**
**புதிர் காண்ப துண்டோ?**

**துன்பங்கள் எண்ணற்ற**
**துயரங்கள், நிழல்போல்**
**தொடர்கின்ற தம் வாழ்வில்**
**சுகமென்ன கண்டார்?** (கு.க., ப.304)

என்று நடைபாதையோரமாக வசித்து வரும் சிறுவர்களையும் பெரியவர்களையும் கண்டு உள்ளம் நொந்து கவிதை படைத்துள்ளார். இது போன்ற கவிதைகளைப் படைப்பதற்கும் மனிதநேயம் தேவைப்படுகிறது. அந்த நேயத்தின் விளைவாகவே கவிதையில்

**மானிடர் சாதிக்கு**
**வாழ்விலுள் பற்றின்**
**மர்மத்தை ஆய்கின்ற**
**மறையேது முண்டோ?** (கு.க., ப.305)

என்று கேள்விகளை இச்சமுதாயத்தை நோக்கிக் கேட்கிறார். இதுபோன்ற சிந்தனை வருவதற்குக் காரணம் கவிஞர் குலோத்துங்கன் ஒரு குக்கிராமத்தில் பிறந்து ஏழ்மையில் வளர்ந்து பெரிய நிலையை அடைந்தவர். எனவேதான் பிறர் துன்பம் குறித்தும் அவர்கள் மீது மனிதநேயமிக்க கருணை குறித்தும் கவிதை வடித்துள்ளார்.

## குடிப்பழக்கம்

சங்க காலம் முதல் மது, மக்கள் வாழ்வில் நீங்காத இடம் பெற்றுள்ளது. குடிகாரனின் செயலை மணிமேகலை போன்ற நூல்களும் குறிப்பிடுகின்றன. மணிமேகலையில் குடிகாரன் குடித்துவிட்டுத் தெருவில் உள்ளவர்களைத் தொந்தரவு செய்கிறான். அதனைச் சாத்தனார்,

**எந்தம் அடிகள் எம்உரை கேண்மோ**
**அழுக்கு உடை யாக்கையில் புகுந்த நும்உயிர்**

புழுக்களைப் பட்டோர் போன்று உளம் வருந்தாது
இம்மையும் மறுமையும் இறுதியில் இன்பமும்
தன்பயின் தரூஉம் என் தலைமகன் உரைத்தது
கொலையும் உண்டோ கொழுமடல் தெங்கின்
விளைபூந் தேறலின் மெய்த்தவத் தீரே
உண்டு தெளிந்து இவ் யோகத்து உறுபயன்
கண்டார் எம்மையும் கையுதிர்க் கொண்ம் என
உண்ணா நோன்பி தன்னொடும்சூன் உற்று
உண்ம் இரக்கும் ஓர் களிமகன்

என்று கூறுகிறார். மணிமேகலைக் காப்பியம் இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது. அன்று உள்ள குடிமக்களின் நிலை இன்றும் தொடர்ந்து சமுதாயத்தில் இருக்கிறது. ஒன்றும் மாறியதாகத் தெரியவில்லை. எனவே குலோத்துங்கனும் தம் கவிதையில் குடிகாரனின் செயல்பாடுகளை மிகவும் தெளிவாகப் பதிவு செய்துள்ளார்.

தள்ளாடி நடக்கின்றான்; கால்கள் பின்னத்
தடுமாறி விழுகின்றான்; வாய்த் திறத்தால்
பொல்லாத புகல்கின்றான்; வலியச் சென்று
போருக்கு முயல்கின்றான்; உள்ளே நின்று (கு.க., ப.479)

என்று குடித்துவிட்டுள்ள ஒருவனின் செயல்பாட்டை மிகத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். இதற்கெல்லாம் என்ன காரணம் என்பதையும் கவிஞர் கூறும்போது,

கள்ளோ, பின் சாராயக் கலவை யோகிக்
களிமகனை ஆள்கிறது; சான்றோர் ஏற்றுக்
கொள்ளாத பொருள்களிவை; மனித சாதி
கூடாத தென்பவொடு குலவும் விந்தை! (கு.க., ப.479)

என்று கூறுகிறார். அதாவது குடிமகனின் உடம்பிற்குள் கள், சாராயம் போன்ற போதைப் பொருள்கள் இருப்பதால் அவை அவனை ஆள்கின்றன என்கிறார். மேலும் இவை போன்ற செயல்களில் யார்? யார்? எல்லாம் ஈடுபடுகிறார்கள் என்பதைப் பட்டியலிட்டுக் கவிதையில் காட்டுகிறார்.

குடிப்பனஓ ராயிரம்; மென்பொருளாய் உண்ணக்
கொள்வனஓ ராயிரம்; வெண் புகையாய் வாயில்

**பிடிப்பனஓ ராயிரம்; பின் ஊசியேற்றிப்**
**பெறுவனஓ ராயிரம் ; இப் பித்துக் கொண்டோர்,**

**கல்லாதார் என்பதில்லை; ஒழுக்கப் பாதை**
**காணாதார் என்பதில்லை பதவி செல்வம்**
**இல்லாதார் என்பதில்லை; போதை வாழ்வில்**
**எல்லோரும் உளர்; விலக்கிங் கெதுவு மில்லை** (கு.க., ப.479)

என்று அனைவராலும் கள்ளோ, சாராயமோ உள்கொள்ளப்படுகிறது என்பதனைக் கவிஞர் கவிதையில் கூறியுள்ளார். மேலும் இப் பானங்கள் எங்கு எங்கெல்லாம் இருக்கின்றன என்பதைக் கவிஞர்,

**மாடங்களிலும் வாழ்கிறது; மன்னர் செல்வ**
**மாளிகையில் வளர்கிறது; வறியர் மொய்க்கும்**
**இடங்களையாம் ஆள்கிறது; கலைஞர் மன்றில்**
**இன்ப ஓடம் புரிகிறது போதை வேட்கை**

**சட்டங்கள் தடுத்ததிலை; சமயம் கொள்கை**
**சாத்திரத்தால் இயலவில்லை; நெறிப் படுத்தும்**
**திட்டங்கள் வென்றதிலை; சமுதாயத்தைச்**
**சீரமைத்த புரட்சிகளும் திருத்தவில்லை** (கு.க., ப.480)

என்று வேதனையோடு கவிதையை இயற்றியுள்ளார். இன்று சமுதாயத்தை நாசம் செய்யும் மிகப்பெரிய அரக்கனாகப் போதைப் பொருள்கள் இருப்பதைக் கவிஞர் சுட்டிக்காட்டியுள்ளார். சமுதாயச் சீரழிவுக்கு முழு முதல் காரணமாக அமைகின்ற இந்தச் சாராயத்தை யாராலும் அழிக்க முடியவில்லை. சட்டங்கள் போட்டாலும் அதனைத் தடுக்க முடியவில்லை. சமயங்களின் கொள்கைகளாலும், பல்வேறான சமூகத் திட்டங்களினாலும் மற்றும் சமூகச் சீர்திருத்தப் புரட்சியாலும் அழிக்க முடியவில்லை என்கின்ற ஆதங்கத்தைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் பதிவு செய்துள்ளார்.

**விபச்சாரம்**

சமுதாயப் பிரச்சினைகளில் ஒன்று விபச்சாரம். இத்தொழில் சங்க காலத்தில் பரத்தமையாக இருந்தது. இன்று தசைவாணிபம் என்னும் அளவிற்கு வளர்ந்துள்ளது. இதனைப் பற்றிக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் புதிய சொல்லாட்சி கொடுத்துள்ளார். அதான் 'தசைவாணிகம்' என்பதாகும். இச்சொல்லாட்சியில் கவிஞர் கூறியுள்ள கருத்துக்கள் இன்றைய சமுதாயத்தின் நிலையை உள்ளது உள்ளவாறு காட்டுகின்றன.

இசைமொழயின் மாதரர் தம்
ஏழிலைத் துகில் உரித்து
தசை வணிகம் செய்பவர்கள்;
தரம் ஏதும் காணாத

வசைமொழியில் வல்லுநர்கள்;
மலர்கின்ற பாலுணர்வின்,
பசை மொழியைக் காமுகர்தம்
பசிமொழியிற் சித்தரித்துக்

கற்பனையின் போர்வையினில்
களங்கத்தை நாள்தோறும்
விற்பனை செய்கின்றவர்கள்;
வீதிச்சுவை நினைந்து

அற்பமெலாம் காவியமாய்
அரங்கேற்றம் செய்பவர்கள்;
தற்பொழுது பத்திரிக்கைச்
சந்தை நடத்துகிறார் (கு.க., ப.505)

என்று மிகவும் உணர்வுப் பூர்வமாக விபச்சாரத்தைச் சாடுகிறார். இதைச் சமுதாயச் சீர்கேட்டை உருவாக்கும் செயல் என்பதால் இவர் தமது கவிதையில் வன்மையாகச் சாடுகிறார்.

## கல்வி நிலை

சமுதாயக் கூறுகளில் மிகப்பெரிய அங்கமாகத் திகழ்வது கல்வி. கல்வியின் மூலமாகத்தான் ஒரு நாட்டையே நிருவாகம் செய்யும் திறமையுள்ளவர்கள் உருவாக முடிகிறது. எனவே எல்லாக் கவிஞர்களும் கல்வியின் இன்றைய நிலையைப் பற்றிக் கவிதை புனைகின்றனர். அந்த வகையில் குலோத்துங்கன் கல்வி பெற வேண்டிய வளர்ச்சி மற்றும் சிறப்புக்களைத் துல்லியமாகக் கவிதையாக்கியுள்ளார்.

வகுப்பறையில், ஆய்வகத்தில் புதிய காண்பீர்
வாழிய, நும் பணிநாளும் வளர்க! நீவிர்
தொகுப்பனவும், விரிப்பனவும் மக்கள் வாழ்வைத்
தொடுவனவா? அவர் நாடித் துடிப்புப் பேசும்
மொழியறிவும் தரத்தனவா? மூச்சுக் காற்றின்
முணுமுணுப்பை உணர்ந்தனவா? தேவை தீர்க்கும்

**வழியறியவும் பாங்கினவா? ஆம் என் பீரோல்**
**மனந்திறந்து வாழ்த்துகிறேன், வளர்க, வாழ்க!** (கு.க., ப.202)

என்று கல்வி குறித்துக் கூறியுள்ள கவிஞர்,

**ஏடன்று கல்வி; சிலர் எழுதும் பேசும்**
**இயலன்று கல்வி; பலர்க் கெட்டா தென்னும்**
**வீடன்று கல்வி; ஒரு தேர்வு தந்த**
**விளைவன்று கல்வி; அது வளர்ச்சி வாயில்** (கு.க., ப.207)

என்று கல்வி வெறுமனே ஏட்டில் இருப்பதில்லை; எழுதுவதும் பேசுவதும் மட்டும் கல்வி இல்லை, என்று கூறும் கவிஞர் அது வளர்ச்சியின் வாயில் என்கிறார்.

சமுதாயத்துக்குப் பயன்படும் அளவில் கல்வி வளர்ச்சி நிலையை அடைய வேண்டும். 'கல்வி என நாம் கூறுவது வெறும் ஏட்டுக் கல்வி அன்று. அது படிப்பு, பயிற்சி இரண்டையும் உள்ளடக்கியது. மனிதருக்குள் அடங்கி இருக்கின்ற அளவற்ற ஆற்றலை உருவம் பெறச் செய்து உயிர் கொடுப்பது' என்று குலோத்துங்கன் கூறியுள்ளார் (தாய்மொழி பெறாததைச் சமுதாயம் பெறாது).

மேலும் கல்வி குறித்துத் தம் படைப்புகளில் பல இடங்களில் கூறியுள்ளார். 'வகுப்பறையில், ஆய்வகத்தில் புதிய காண்பீர்' என்னும் கவிதை வரியை உற்று நோக்கும் போது கவிஞர் குலோத்துங்கனின் 'சமுதாயச் சிந்தனை' நூலில் கூறியுள்ள 'ஒவ்வொரு பள்ளியும், வெறும் எழுத்தறிவிக்கும் இடம் அன்று. ஒவ்வொரு பள்ளியும் ஒரு சமுதாய மேம்பாட்டு மையம். ஆசிரியர்கள், சமுதாய மாற்றத்தின், சமுதாய மேம்பாட்டின் தூதுவர்கள்' என்னும் கருத்து பொருத்தமாக இருக்கிறது.

மேலும் கவிஞர் குலோத்துங்கனின் கல்வி நிலை குறித்த சிந்தனையைப் பேராசிரியர் இரா.மோகன் தொகுத்துள்ள **குலோத்துங்கன் பண்ணையில் கொய்த கதிர்கள்** என்ற நூலிலிருந்து சிலவற்றை இங்குச் சுட்டலாம். கவிஞர் குலோத்துங்கனின் மானுட யாத்திரையில் இடம் பெற்றுள்ள வரிகளான:

**உலகங்கள் அனைத்தினுக்கும்**
**கதவுகள் திறக்கும் சாவி**

கல்வி; இவ்விஞ்சை கொண்ட
ஆற்றலை எவரே சொல்வர்?
ஆக்குதல், அழித்தல், காத்தல்
மாற்றுதல், தன்னுள் கொண்ட
வலிமையின் தெய்வ ஊற்று

(பேரா.இரா.மோகன், குலோத்துங்கன் பண்ணையில் கொய்த கதிர்கள், ப.95)

என்பதும் மானுட யாத்திரை ப.630 பாகம் 3இல் குலோத்துங்கன் கூறுவதாக இரா.மோகன் அவர்கள் எடுத்துக் காட்டுவதுமான,

திடமுடன் சொன்னான் பண்டைச்
சீனமன் தத்துவ ஞானி (கன்ஃபூசியஸ்)

கடவுளர் தவறினாலும்
கைவிடாச் செல்வம் கல்வி

என்னும் வரிகள் குலோத்துங்கனின் கல்வி மீதான புதிய பார்வையைத் தெளிவுபடுத்துகின்றன. மேலும் கவிஞர் 'புது அவதாரம்' என்னும் தலைப்பில் கவியின் சிறப்பினை மிக உன்னதமாகப் பதிவு செய்கின்றார்.

கல்வியின் றுலகு நாளும்
கணித்திடும் பொருளே! வையச்
செல்வமே! மானிடத்தின்
திருவினில் திருவே! யாவும்

படைத்திடும் ஆற்றல் கொண்ட
பரமமே! உனது பார்வை
உடைத்தெனின் யாவும் ஆங்கே
உளதென உயர்ந்தோர் கண்ட

ஆற்றலின் சுரங்கமே! யாம்
ஆய்தொறும் புதிய பொங்கும்
ஊற்றெனும் வரமே! வையம்
உயர்ந்திடும் பாதை காட்டும்

கலங்கரை ஒளிரே! எங்கும்
கரையிலா வெளியே! வாரி
வழங்கிடின் குறைவதின்றி
வளர்ந்திடும் அருவமே நீ (கு.க., ப.219)

என்று கல்வியைக் குறிப்பிடுகிறார். இவ்வரிகள் கல்வி மீது குலோத்துங்கன் கொண்டுள்ள பற்றையும் ஆழமான நம்பிக்கையையும் காட்டுகின்றன. கல்வி பொதுவாக ஏழையைப் பணக்காரர்களாக மாற்றும் செயலைச் செய்கிறது. அதனால்தான் ஔவையார், 'பிச்சை புகினும் கற்கை நன்றே' என்றார். நாலடியார் 'கொஞ்சியழகும் கொடுத்தனைக் கோட்டழகும் அழகல்ல நெஞ்சத்து ஒடுவுநிலைமையில்....... கல்வி யழகே யழகு' என்று கூறுகின்றது. அந்த அடிப்படையில் தான் குலோத்துங்கன், கல்வியைக் 'கலங்கரை விளக்கம்' என்றும் 'ஆற்றலின் சுரங்கம்' என்று, 'வளர்ந்திடும் அருவம்' என்றும் கூறுகிறார்.

## துன்பம் துடைக்கும் கருவி

சமுதாயத்தில் துன்பங்களைச் சுமந்துகொண்டு பலர் இருக்கின்றனர். அவர்களின் துன்பங்களையெல்லாம் களைகின்ற கருவியாக இருப்பது கல்வி மட்டும் தான் என்பதைக் கவிஞர்,

**தொகுத்துப் பல நூல்கள்**
**படிப்போம்-வாழ்வுத்**
**துறை மூழ்கித் துன்பத்தின்**
**ஊற்றுக்களைத் தூர்ப்போம்** (கு.க., ப.105)

என்கின்றார். மேலும் கல்வியில்லாத சமுதாயம் எந்த வளர்ச்சியும் காணமுடியாது என்று தம் கருத்தை ஆணித்தரமாகக் கூறுகிறார் கவிஞர் குலோத்துங்கன்.

**வல்லாரே வையத்தை**
**வழி நடத்தும்**
**மாண்புடையர்; வளம் எதுவும்**
**வருங் காலத்தில்**

**கல்லாத சமுதாயம்**
**காண்பதில்லை**
**கல்வியுகம் மலர்கிறது;**
**காண வாரீர்** (கு.க., ப.194)

இக்கவிதை புதுயுகம் கல்வியால்தான் உருவாக முடியும் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. கல்விதான் சமுதாயத்தின் அடிப்படையான அங்கம் என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் மிகவும் அழகாகவும் தெளிவாகவும் தம் கவிதைகளில் எடுத்துக் காட்டியுள்ளார். கவிஞர்

பாரதிதாசனின் வழிவந்தவர் எனவே பாரதிதாசனின் கல்வி குறித்த சிந்தனையான 'கல்வி கற்கண்டு' 'நூல் விலங்கு கல்லாமை' மேலவர் கற்றவர்' போன்ற ஆத்திசூடியைப் போலக் கவிஞர் குலோத்துங்கனும் கல்விச் சிந்தனையைச் சமுதாயத்திற்குத் தந்துள்ளார்.

## கவிஞரின் சமுதாயம் மீதான ஏக்கம்

கவிஞன் குலோத்துங்கன் மானுடம் பாடிய கவிஞர். வெற்று வருணனையும், வீண்சொற்களும் கொண்டு ஏதோ கவிஞன் ஆக வேண்டும் என்று கவிதை இயற்றவில்லை. என்னதான் அறிவியல் வளர்ச்சி, ஆன்மீக வளர்ச்சி, வளர்ந்தாலும் சமுதாயம் இன்னமும் அப்படியேதான் இருக்கின்றது என்கிற ஏக்கத்தைத் தம் கவிதைகளில் புனைந்துள்ளார்.

**தான் கண்ட பாதை தான்**
**சரியென்ற மூடரால்**
**சமுதாயம் நைந்த தம்மா!**

**சாத்திரம், கொள்கைகள்,**
**சமயங்கள், அரசியல்**
**தத்துவம் யாவினுக்கும்**

**மேன்நின்ற மனிதனின்**
**விழைவுகள் மதியாத**
**வீம்பினர் கொடுமையின் கீழ்**

**மிதிபட்டு, நலிவுற்று**
**விசையற்ற மானிடம்**
**மீண்டெழும் காட்சி தன்னை**
**நான் கண்டு பாடினேன்** (கு.க., ப.183)

என்று சமுதாயத்தில் கவிஞர் 'கண்டு பாடியதைக்' கவிதையில் குறிப்பிடுகிறார்.

மேலும் இந்தச் சமுதாயத்தின் முரண்களையும், உண்மையான பொதுநிலைகளையும் சமுதாய மக்களுக்குத் தம் கவிதையில் முன் வைக்கிறார். மாயையிலும், வீண் நம்பிக்கைகளிலும் வாழ்ந்து வீணாக மடிவதைக் கண்டு கவிதையில் உண்மை நிலையை எடுத்துரைக்கிறார்.

**மண் தொட விழுந்த பின்னர்**
**மலர்களும் குப்பை; மேகம்**

விண்தொட நின்று மண்ணில்
வீழ்ந்த பின் சகதி; கோடி

கண்பட நின்ற பொற்பின்
கலையெலாம் கடந்து நிற்கும்
பெண்தகை இதழின் தேனும்
பிரியுமேல் எச்சில் அன்றோ?

வையகம் முழுது மாளும்
மன்னவன் பிடித்த செங்கோல்
கையிருந் தகலு மாயின்
கழியலால் வேறொன் றாமோ?

என்று கவிதையில் கேள்வியைக் கேட்டு மக்களைச் சிந்திக்க வைக்கிறார். மேலும் கண்ணதாசன் எழுதிய 'யாரும் இருக்கும் இடத்தில் இருந்து கொண்டால் எல்லாம் சௌக்கியமே' கருடன் சொன்னது' என்னும் கருத்தில் அமைந்த கவிதையைக் கவிஞர் வடித்துள்ளார்.

சிவன் முடி நாகம் தெய்வம்;
தெரு வுறின் ஓச்சுப் பாம்பு
தவவுடல் அணிசெய் நீறு
தரைபடின் சாம்பல் அன்றோ?

நெருப்பிசை அழியு மேனும்
நீள்திரி தெய்வ மன்றோ?
இருப்பிடம் பெருமை ஏற்றம்;
ஏணியும் அதுவேயாகும் (கு.க., ப.221)

இதெல்லாம் கவிஞர் குலோத்துங்கன் சமுதாயத்தின் மீது கொண்டுள்ள அக்கறையின் காரணமாக இயற்றிய கவிதை என்பது புலப்படுகிறது.

சமுதாயத்தில் மதம் என்னும் அங்கம் மக்களைப் பகை உண்டு பண்ணி வளருகிறது என்பதை மிக வேதனையோடு தம் கவிதையில் பதிவு செய்கிறார்.

மதமெதற்கு, மொழியெதற்கு, நாடு தான் ஏன்?
மானிடர் தம் வளர்ச்சிக்கு வழி வகுக்க
உதவுதற்கு நாம் படைத்தோம் அவையே நம்முன்
உட்பகையை வளர்ப்பதெனின் ஒழிதல் நன்று (கு.க., ப.554)

என்று மதத்தை ஒழிக்க வேண்டும் என்கிறார். இவ்வாறு கூறுவது சமுதாயத்தின் மீதான பற்றுதான். மாறாக மதங்களுக்குக் கவிஞர் எதிரானவர் அல்லர்.

சமுதாயத்தின் உணர்ச்சி மீது மிகுந்த ஏக்கம் கொண்டு தம் கவிதைகளை மிகவும் ஆக்கப்பூர்வமாக முன்வைக்கிறார். கவிஞர் குலோத்துங்கனின் பார்வையில் 'செல்வம் வளர்ந்தன. தத்துவங்கள் வளர்ந்தன. பண்பு கூட வளர்ந்தன' என்று கூறிவிட்டுச் சமுதாயத்தின் மீதான அவரது ஏக்கத்தை

**பண்டுதொட்டிருந்த வந்த**
**பசிப்பிணி மறைய வில்லை;**
**உண்டியும் உடையும் வாழ்வில்**
**(ஒரு சிலருக்கு அமையவில்லை)**
**ஒரு சிலர்க் கமைய வில்லை** (கு.க., ப.483)

என்று வெளிப்படுத்துகிறார். இந் நான்கு வரிகள்தாம் கவிஞர் குலோத்துங்கனின் கவிதைகளில் ஜீவன் என்றால் மிகையல்ல. அவர்களுக்கும் உணவு, உடை, உறையுள் அமைய வேண்டும் என்பதே கவிஞரின் எதிர்பார்ப்பு.

# 3. தமிழ் மொழி, இனம்

தமிழ்மொழி, தமிழ் இனம் காலத்தால் முற்பட்டவை ஆகும். உலக மொழிகளில் தமிழ் மொழியும் தனிச் சிறப்புடைய மொழி என்பது பெருமைக்குரியது. தமிழில் பல்வேறான இலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ளன. உலக அளவில் தமிழுக்கும், தமிழர்களுக்கும் தனி இடம் உள்ளது. தமிழகத்தில் பக்தி இலக்கியங்களின் காலமாகிய 7ஆம் நூற்றாண்டில் தமிழ், வடமொழி இரண்டும் தெய்வீக மொழிகளாகப் பேசப்பட்டன. இந்தக் காலக் கட்டத்தில்தான் 'தமிழ் ஞானசம்பந்தன்' என்று தம் பெயரைத் தமிழோடு இணைத்துக் கொண்டார் திருஞானசம்பந்தர். 'தமிழ் நாட்டில் சமயம், மொழி இவற்றில் மறுமலர்ச்சி தோன்றிய காலம் பக்தி இயக்கக் காலம்' என்று மு.சண்முகம் குறிப்பிடுகிறார்.

## உயர்தனிச் செம்மொழி

இன்று தமிழ் மொழி செம்மொழித் தன்மையைப் பெற்றதற்குத் தமிழறிஞர்கள் ஒருபுறம் காரணமாகத் தோன்றினாலும், ஐரோப்பியர்களின் வரவும் ஒரு காரணமாக உள்ளது.

இந்தியாவில் தமிழ், வடமொழி இரண்டும் மூத்த மொழிகள். தமிழ் நாட்டில் வடமொழி அறிந்த வல்லுநர்களும் இருந்தனர். காலப் போக்கில் அறிஞர்களிடையே வடமொழியா? தமிழா? எது சிறந்தது என்ற கொள்கைப் போராட்டம் வளர்ந்தது. இன்றளவும் அது நடந்து வருகிறது. இரு மொழிகளிலும் சொற்கலப்பு நேரிட்டுள்ளது.

டாக்டர் கால்டுவெல் தமிழ் நாட்டுக்கு வந்தபோது இம்மொழிக் கொள்கைக்குத் தம்மளவில் ஒரு முடிவுகாண எண்ணினார். 'அவர் காலத்தில் தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற பிற மொழிகளும் வழக்கில் இருந்தன. இம்மொழிகளை ஊன்றி ஆராய்ந்து கால்டுவெல் ''திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் ஒப்பியல் மொழி நூல் ஒன்றை

வெளியிட்டார். அந்நூல் தமிழ்மொழி வரலாறு பற்றிய புதிய உண்மைகளை வெளிப்படுத்திற்று. ''வடமொழிக்கும் தமிழுக்கும் இலக்கணத் தொடர்பு இல்லை; வடமொழியை விட்டுத் தமிழ் தனித்து இயங்க வல்லது; தென்னகத்தில் தமிழ்மொழியே பழமை வாய்ந்தது; தமிழிலிருந்து, தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற பிற மொழிகள் தோன்றியிருக்க வேண்டும்; இம்மொழிகளைத் திராவிட மொழிக் குடும்பம்' என அழைக்கலாம். திராவிட மொழி இயல்புக்கு வடமொழி முற்றும் மாறானது' என்றார் கால்டுவெல் (திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், முன்னுரை). இது தமிழ் மொழி குறித்த அவரின் கொள்கை.

தமிழ் இலக்கியங்களில் தமிழினம், தமிழ் மொழி இவற்றை முன்னிறுத்திப் பாடிய தனிப் பாடல்களோ, வலிமையான பாடல் அடிகளோ நிறைய இல்லை. அதனால் தமிழரிடையே தம்மையே அளந்து கொள்ளும் போக்கு அன்று காணப்படாமல் இருந்தது. கால்டுவெல் வரவுக்குப் பின்னால் இந்நிலை மாறியது. பிற மொழிகளோடு தமிழ் மொழியை ஆராய்ந்து டாக்டர் கால்டுவெல் வெளியிட்ட ஆய்வு நூல் தமிழரிடையே பழைய வரலாற்று உணர்வையும் தம்இன உணர்வையும் தூண்டியது. அதனால் தமிழர்கள் தமக்கென ஒரு மொழி, நாடு, நாகரிகம், பண்பாடு இவை உண்டு எனத் தெளிந்தனர். பக்தி இலக்கியத்திற்குப் பின்னர் மீண்டும் தமிழரிடையே மொழி, இன உணர்வைத் தூண்டியவர் கால்டுவெல் என்று மு. சண்முகம் கூறுவது மிகவும் போற்றத்தக்க கருத்தாகும் (தமிழ் மறுமலர்ச்சியில் கவியங்கக்கவிதை).

கால்டுவெல் காலத்திற்கு அடுத்துத் தமிழ் நாட்டில் தமிழ்மொழியைக் காப்பதற்காகப் பல தமிழர்கள் பல இயக்கங்களைத் தோற்றுவித்தனர். அவ் இயக்கங்கள் தமிழ் மக்களிடையே தமிழ்த் தேசிய உணர்வை வளர்த்தன. குறிப்பாகத் தனித்தமிழ் இயக்கம், தமிழிசை இயக்கம், நாம் தமிழர் இயக்கம், தமிழரசு கழகம், தமிழ் முன்னேற்றக் கழகம்; தமிழ்த் தேசியக் கட்சி, தமிழியக்கம் போன்ற இயக்கங்கள் தோன்றிச் சிறப்பாகச் செயல்பட்டன. இவ் இயக்கங்களில்தாம் பாரதிதாசன், சுரதா, வாணிதாசன் போன்ற கவிஞர்கள் தமிழ்மொழி இன உணர்வைக் கவிதைகளில் வெளிப்படுத்தினர்.

## தமிழ்த்தேசிய உணர்வு

தமிழ்த் தேசிய உணர்வு பல கவிஞர்களிடத்தில் வேரூன்றி இருந்தது. குறிப்பாகச் சுரதா அவர்கள் தம் தேன்மழைக் கவிதைத் தொகுப்பில் தமிழ் உணர்வை மிக வேகத்தோடு வெளியிடுகிறார்.

**தாய் நாடே மாற்றார் நஞ்சைத்**
**தரிசனம் யான் ஏற்பேன், வீரத்**
**தாய் நாடே உன்னைக் காக்கச்**
**சாகவும் அஞ்ச மாட்டேன்**

இவ்வரிகள் தமிழ் மீதும் தமிழ் இனத்தின் மீதும் சுரதா கொண்டுள்ள அன்பையும், பாசத்தையும், பற்றையும் வெளிக்காட்டுகின்றன.

## குலோத்துங்கனின் தமிழ்மொழிச் சிந்தனை

இதுபோன்ற சிந்தனையில் தம்மை இணைத்துக் கொண்டவர் கவிஞர் குலோத்துங்கன். தமிழ் மீதும் தமிழ் இனத்தின் மீதும் மிகுந்த அக்கறையும், பற்றும் கொண்டவர். தமிழின் மறுமலர்ச்சிக் காலத்தியக் கவிதைகளில் மொழியுணர்வும், இனஉணர்வும் படிப்பவர்களின் மெய்சிலிர்க்கும் வகையில் அமைந்துள்ளன.

## தமிழ் இறைவன்

தமிழ் மொழியைக் கடவுளாகப் பார்க்கின்ற புதிய பார்வையைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் படைத்துள்ளார். பொதுவாக இறை வாழ்த்து, மொழி வாழ்த்து என்னும் சிந்தனை தமிழர்களிடையே வேரூன்றிப் போய்விட்டது அதனைப் போலக் கவிஞர் தமிழை இறைவனாகக் காண்பது மொழிச் சிறப்பைக் காட்டுகிறது.

**செந்தமிழ்த்தாய் நின்வளங்கள்**
**சிறந்த வேணும்**
**தேவை இனும் கோடியுள;**
**அவற்றுள் ஏதும்**
**எந்தமிழால் தீராதோ**
**என்னும் நெஞ்ச**
**ஏக்கத்தால் எழுதுகிறேன்**
**ஏழை எந்தன்** (கு.க., ப.69)

**சிந்தனையும், செய்திறனும்,**
**திறமை சேர்த்த**
**திருவனைத்தும் நினதடியே**
**சேர்க்க எண்ணும்**

**சொந்த மகன் படைக்கிறேன்**
**நின்னை யன்றித்**
**தொழுவதற்குப் பொருளறியாத்**
**தொண்டனம்மா;** (கு.க., ப.69)

என்று மிகவும் ஆழமான உணர்வின் பாட்டோடு தமிழுக்குத் தொண்டன் என்று கவிதையில் தம்மைக் கூறுகிறார். மேலும் பழமையான மொழி தமிழ் என்பதனையும், பல கலைகள் தோன்றுவதற்கு உரியமொழி தமிழ் என்பதனையும் தமது கவிதைகளின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

**ஏர் பிறந்த பழமையிலும்**
**ஏற்றம் கண்டாய்**
**எண்ணற்ற கலைகள் வளர்**
**இடமாய் நின்றாய்** (கு.க., ப.69)

இந்த வரிதான் தமிழின் தொன்மைப் பெருமையைக் காத்து நிற்கிறது. 'ஏர்' என்பது வேளாண்மைத் தொழிலைக் குறிக்கின்ற குறியீடாக அமைந்துள்ளது. அதே போலப் பல வகைக் கலைகள் பிறப்பதற்கும் காரணமானதும் தமிழ் தான். எனவே கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் இறைவனை அழகாகக் கண்டுள்ளார் எனலாம்.

## முதல் மொழி

மொழிகளில் பழம்பெருமை வாய்ந்தமொழி தமிழ். எனவேதான் புறப்பொருள் வெண்பாமாலையில் தமிழரின் குடிநிலையைப் பற்றிக் கூறுமிடத்தில் ஐயனாரிதனார்,

**பொய்யகல நாளும் புகழ் விளைத்தல் என்வியப்பாம்**
**வையகம் போர்த்த வயங்கொலிநீர்-கையகலக்**
**கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**
**முற்றோன்றி மூத்த குடி**

என்று பாடல் புனைந்துள்ளார். உலகில் முதல் தோன்றிய இனம் தமிழ் இனம் எனில் அவர்களின் மொழியும் உலக மொழிகளுள் முதன்மையானது தானே!

இந்த அடைப்படையில்தான் கவிஞர் குலோத்துங்கன் தமிழ்மொழி குறித்துக் கவிதை புனையும் போது 'பன்மொழிகளின் அன்னை' என்கின்றார்.

முன்னிருந்து பன்மொழியின் அன்னை; மண்ணில்
முதுகுடியின் தாய்மொழி; எம் தமிழை இன்றும்

கன்னியெனக் கூறுவது 'தனிமை', 'தூய்மை'
கருத்தயல; இளமை நலம் 'கன்னி' யன்றோ?

வரை கடந்த புதுமைகளை அலசி ஆய்ந்து
வரவேற்று வளம் சேர்த்து வளர்ந்தாள் அன்னை;

திரையமைந்த தீவாக நின்ற தில்லை;
தென்றல் வரும் சாளரங்கள் திறந்தே வாழ்ந்தாள்

ஆய்வியலும் அறிவியலும், ஆளும் காலம்;
அண்டங்கள் படிப்படியாய் அஃகி அஃகிச்

'சேய்மை' எனல் பொருள்குன்றி மறையும் காலம்;
சிற்றூராய்ப் பெருவையம் சிறுகும் காலம்

வையத்தின் துருவத்தின் முனையில் எங்கோ
மலர்கிறது புதுமை எனின், மறுநாள் யாவும்

ஐயத்திற் கிடமின்றித் தமிழில் சேர்க்க
அடிப்படையும், உத்திகளும் அமைக்கும் காலம்

தரமான கல்வி வளம் துறைகள் தோறும்
தமிழ் மொழியின் வழிகாணத் தரணி எங்கும்

வரலாறு 'புதிதாகப் படைக்கும் காலம்
மலைபோல நம்கண்முன் வளர்ந்து நிற்கும் (கு.க., ப.401)

என்று தமிழ் மொழியின் எதிர்காலம் குறித்தும், தமிழ் தான் எல்லா மொழிக்குமான அன்னை என்றும் கவிதையைப் புனைந்துள்ளார்.

'தமிழ்க் கவிதை என்று பேசும்பொழுதே நெடுங்காலத் தமிழ்க் கவிதை மரபு என்ற இயக்க நீரோட்டத்திற்குள் நாம் வாழ்ந்திருக்கிறோம். சங்க இலக்கியம் தொடங்கி எத்தனையோ வகைக் கவிதைகள், கடைசியாகப் பாரதிதாசன் வரை நமக்கென மிகப் பெரிய கவிதை மரபு இருக்கிறது. இதன் இழைகள் சிலருக்குள் கூடுதலாகவோ, பலருக்குள் குறைவாகவோ இருக்கக்கூடும். தமிழ்

இலக்கிய மரபென்பது எத்தனையோ மாற்றங்களோடு இயங்குகிறது' என்பர் ஞானி. அது போலவே தமிழ் மொழியும் வருங்காலங்களில் உலகில் நிகழும் மாற்றங்களை உள்வாங்கிக் கொண்டு இயங்கும் என்பதாகக் கவிஞர் குலோத்துங்கன் கவிதையைப் படைத்துள்ளார்.

## வளர் தமிழமுதே

'தமிழுக்கு அமுதென்று பேர்' என்ற வரியில் பாரதிதாசன் தமிழை அமுதென்கின்றார். அதே போல அவரின் சிந்தனைவழி வந்த கவிஞர் குலோத்துங்கன் தமிழ் மொழியை வளர்கின்ற அமுதமே' என்கின்றார். மேலும் கவிதையில் தமிழ் மொழி வளர்ந்த, வளர்கின்ற இடத்தை மிகத் தெளிவாக நயம்பட உரைக்கின்றார்.

மானிடர் மழலை பேசி
வளர்ந்த நாள் வந்தாய்; தூய
தேனினை, அன்பு தோய்ந்த
செவ்விதழ் அமுதை வென்றாய்;
ஊனினும் உயிரினம் மற்(று)
உணர்வினும் நிறைந்தாய்; வைய
வானிடை நிலவே நாளும்
வளர் தமிழமுதே எந்தாய்!

தென்னில மேதையர் தம்
தெளிவினில், திறன் படைத்த
மன்னர்தம் மடியில், மாண்பில்,
வாரியின் வளம் நிறைந்த

தன்னிகர் கண்டி ராத
தவப்பெரும் புலவர் நெஞ்சில்
பொன்னியின் கரையில், வையம்
போற்றிட வாழ்ந்தாய் எந்தாய்!

வழிவழி வந்த செல்வம்;
மன்பதை பண்டு கண்ட
மொழிகளுள் முதல், எம் முன்னோர்
முதிர்ந்தபே ரறிவு தந்த

கழிபெரும் கலையின் பண்பின்
கவிதையின் கடல், எம் வாழ்வின்
வழி துணை வகைநீ யன்றோ! (கு.க., ப.344)

இக்கவிதையில் தமிழ்மொழியின் 'தன்னிகர் அற்ற தன்மை' 'புலவர் நெஞ்சில் வாழ்ந்தவள்' 'மொழிகளுள் முதலான மொழி' 'கவிதைகளின் கடல்' போன்ற தன்மைகளைக் கவிஞர் குலோத்துங்கன் மிகுந்த மொழிப் பற்றோடு புனைந்துள்ளார்.

கவிஞர் குலோத்துங்கன் 'தமிழ் மொழியின் பண்டைய நிலை குறித்துக் கருத்துரைக்கும் போது 'இந்தியாவில் பேசப்படும் மொழிகள் பலவற்றிற்கு அன்னை இலக்கிய வளம் நிறைந்தது. கவிதைக்காகவே உருவானது போன்ற இசையும் யாப்பும் ஏற்கும் உருவம் கொண்டது. இவையனைத்தும், இன்னும் சிலவும் தமிழின் ஒருவகைச் சிறப்புக்கள். ஆனால் இவை மட்டுமே நமது தேவைக்குப் போதுமானவை அல்ல. நமது தேவையைத் தீர்க்கும் தகுதி வாய்ந்தன அல்ல. பண்டைய சிறப்பு, இன்றைய குறைகளை ஈடு செய்யாது. நாம் பண்டைய சிறப்பையும் இன்றைய குறைபாடுகளையும் ஒன்றாகச் சேர்த்துப் பார்த்து ஒன்றை மற்றொன்றுக்குச் சமாதானமாக்கி மயங்குவது அறிவுடைமை ஆகாது. இதை நாம் உணர வேண்டும், ஒப்ப வேண்டும்' என்கிறார் (அறிவியல் தமிழ்)

இதே போன்ற சிந்தனையைக் கவிதையில் கூறும் போதும்,

**இன்றோ ..................**
**குறுகினை எல்லை நான்கும்**
**கூம்பிய எமது நெஞ்சின்**
**சிறுமையில் நைந்தாய்; கொள்கைத்**
**தெளிவிலேம்; எம்மைச் சூழ்ந்த**
**வறுமையில் உன்னை விற்கும்**
**மனநிலை கொண்டோம்; காலத்**
**தெறுநனை வென்ற நீஎம்**
**சிறுமையால் சிதைவ துண்டோ?** (கு.க., ப.345)

என்கின்றார். கவிஞர் தமிழ் மொழியின் பழமைச் சிறப்பைக் கூறுகிறார். அதே நேரத்தில் தமிழ் மொழியின் இன்றைய நிலைப்பாட்டையும் கொஞ்சமும் புனைவு இல்லாமல் மிகத் தெளிவாகவே எடுத்துக் காட்டுகிறார்.

இது கவிஞரின் உண்மையான கவி உள்ளத்தைக் காட்டுவதாக அமைகிறது.

**வாழ்வுக்குத் தோணி**

ஒவ்வொரு மொழி சார்ந்த மனிதனுக்கும் மொழி என்பது மிகவும் முக்கியமான ஒன்று. குறிப்பாகத் தாய்மொழி என்பது

ஒருவனின் வாழ்க்கைக்கான தோணியாகவும் உதவுகின்றது என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் குறிப்பிடுகிறார்.

**கன்னலின் சாறும் முப் பழமும்-கோதையர்**
**கனிவாய் இதழும் பிறவும்**
**உண்ணின் இனிப்பன கண்டீர்-மிகுமேல்**
**ஊறுசெய் கின்ற இயற்கை**
**எண்ணின் இனிப்பது தமிழாம்-எங்கள்**
**இன்பத் தமிழ்மொழி வாழ்க!**
**கண்ணின் மணியெனக் காப்போம்-வாழ்வுக்**
**கடலில் எமக்கது தோணி** (கு.க., ப.337)

என்று மொழி குறித்து அதன் இயல்பு குறித்துக் கவிஞர் பாடுவது கவிஞரின் தமிழுணர்வைக் காட்டுகிறது. மேலும் கவிஞர் குலோத்துங்கன் கவிதையில் தமிழ் மொழியை இன்பத் தமிழ், துன்பத்தின் மருந்து, சுவையுள்ள பால் என்று குறிப்பிடுகிறார்.

**இன்பத் தமிழ் மொழி தாயே-உயிர்**
**ஏறிக் கலந்த உணர்வே**
**துன்பந் துடைக்கு மருந்தே-மாந்தர்**
**தோன்றிய ஞான்றுனைக் கண்டார்;**

**திண்மை அருள்மறம் வீரம்-யாவும்**
**சேர்ந்துன் தீஞ்சுவைப் பாலே!**
**அன்பை வளர்த்தனை வாழி-உயர்**
**அறிவொளி யாண்டும் விரித்தாய்!** (கு.க., ப.337)

என்று கவித்துவத்தோடு கருத்தை வெளிப்படுத்துகிறார். கவிஞர் குலோத்துங்கன் மொழி குறித்துக் கருத்துரைக்கும் போது மிகவும் தெளிவாகத் தமிழ் வளர்ச்சி என்பது தங்களது ஏக, போக உரிமை போல, அதில் தாங்கள் மட்டுமே உண்மையான ஈடுபாடு கொண்டவர்கள் போல, சிலர் எழுதுவதும், பேசுவதும் நாம் காணும் ஒன்று. இது ஏற்கத்தக்க அணுகுமுறை அன்று. நமது சமுதாயத்திற்கு இன்று மாட்டுவண்டியும் தேவை. வானூர்தியும் தேவை. மாட்டுவண்டியை நவீனப்படுத்தும் வழிகளும் முக்கியம். வானூர்திக்கு உரு அமைக்கும் நூல்களும் முக்கியம். தமிழ் வளர்ச்சிக்குப் படைப்போர், பயன்படுத்துவோர், பங்களிப்புத் தேவை. இவற்றைப் பெறும்வகையில் நிறுவனங்கள் அமைப்புக்கள் அமைய வேண்டும்'' என்கின்றார். இந்த அடிப்படையில்தான் இவரது கவிதைகளில் தமிழ் உணர்வு வெளிப்படுகிறது.

## தமிழ் நூல்கள்-களஞ்சியம்

தமிழ்மொழியின் பெருமையைத் தமிழில் வெளிவந்துள்ள நூல்கள் வெளிப்படுத்துகின்றன. எனவேதான் தமிழ்மொழியில் உள்ள நூல்களைக் கவிதையில்

**இன்பத் தமிழ் அலவோ-எம**
**தெண்ணப் பெருவெளி தன்னில் ஒளிர்நிலா**
**அன்புக் கடல் அடடா-தேறல்**
**ஆறாய்ப் பெருகிக் கரைபுரள் காட்சிகாண்**

**மண்பதைத் தோழர்களே-ஓடி**
**வாரீர் தெவிட்டாது வாரிப் பருகுவோம்**
**கண்பெற் றனள் எனலாம்-புவிக்**
**காரிகை செந்தமிழ்த் தாய்தந்த நூல்களால்** (கு.க., ப.339)

என்று கூறிவிட்டுக் கவிஞர் குலோத்துங்கன், தமிழ்மொழியை முத்து, செம்பொன், ஞான விளக்கு, களஞ்சியம் போன்ற பொருள்களாகக் கூறுகிறார்.

**வாழ்வுக் கடல்தனிலே-முதல்**
**மாந்தன் முழுகி எடுத்த வெண் முத்தடா!**
**ஆழ்ந்த கருத்துக்களாம்-செம்பொன்**
**ஆழியில் நீரெனக் கொண்ட களஞ்சியம்;**

**சூழ்பகை துன்பஇருள்-பறந்**
**தோடச் சுடர்விடும் ஞானவிளக்கடா!**
**வாழ்வு கசப்பதுண்டோ-தமிழ்**
**மாது தருஞ்சுவை உண்டு களித்தபின்** (கு.க., ப.339)

இத்தன்மை வாய்ந்த கவிதை ஒவ்வொரு மனிதனின் இன்பத்தைக் கொடுக்கும் 'இன்பத்தின் ஊற்று' என்று கவிதையில் படைத்துள்ளார்.

**திருவள்ளுவன் ஔவை இளங்கோவைப் பெற்றதால்**
**பண்ணெழில் பெற்றதடா-தமிழ்ப்**
**பாக்க ளுகுத்திடும் தேன்துளி சேர்ந்ததால்;**
**எண்ணுந் தொறுங்களிப்பே-தமிழ்**
**என்மொழி என்மொழி இன்பத்தின் ஊற்றடா!** (கு.க., ப.340)

இவ்வாறாகக் கவிஞர் கவிதையைச் சுவைபடப் புனைந்துள்ளார். தமிழின் பெருமையைப் பேசிய கவிஞர்

குலோத்துங்கன் சில கவிதைகளில் இன்றைய தமிழின் நிலையைச் சித்திரித்துள்ளார்.

## தமிழின் இன்றைய நிலை

இன்று கவிஞர்கள் பெரும்பாலானோர் 'தமிழின் மேன்மை-தமிழர் மேம்பாடு-தமிழ் நாட்டின் மறுமலர்ச்சி என்னும் முப்பெரும் கருத்தியல்களை அடிநாதமாகக் கொண்டு ஆற்றல் மிக்க கவிதைகளைப் படைத்து வருகின்றார்' என்றார் பேராசிரியர் இரா.மோகன்.

பாமரராய் விலங்குகளாய் இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு நாமம் தமிழரெனக் கொண்டிங்கு வாழ்ந்திடுதல் நன்றோ? என்று பாரதியார் கடுமையாகச் சாடுகிறார். அதே போல் கவிஞன் குலோத்துங்கன் அவர்கள் இன்றைய தமிழ்மொழியின் நிலையைக் குறித்துப் பல்வேறான சாடல்களைக் குறிப்பிடுகிறார்.

'வளர்க தமிழ்' என்னும் தலைப்பில் குலோத்துங்கன் படைத்துள்ள கவிதை சிறப்பானது; தமிழராய்ப் பிறப்பெடுத்த ஒவ்வொருவரும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டுவது; தொலை நோக்குடன் தமிழினம் செயலாற்ற வழிவகை கூறுவது. 'வளர்க தமிழ்', 'வாழ்க தமிழ்', எனக் கூடி நின்று வாழ்த்துவதால் மட்டும் தமிழ் வளர்ந்து விடாது; 'கூடி வழுத்துவதால் தமிழ் வளர வசிட்டரா நீர்' என்பது கவிஞர் இக்கவிதையின் தொடக்கத்தில் கையாண்டிருக்கும் கூரிய கேள்விக் கணை' என்று பேராசிரியர் இரா. மோகன் கூறுகிறார்.

இவரின் கூற்று உண்மையே. 'வளர்க தமிழ்' கவிதையில் கவிஞர் குலோத்துங்கன்,

**வளர்க தமிழ் வாழ்க தமிழ் என்பீர்; கூடி**
**வழுத்துவதால் தமிழ் வளர வசிட்ட ராநீர்;**
**அளவிலது பழம்பெருமை புகழ்வீர்;வையம்**
**அறியும் வழி எடுத்தோத அறிந்தீ ரில்லை;**
**உளதரிய கலைப்புதையல் எனினும் அண்டை**
**உள்ளவரும் உணர்ந்தேத்த உரைத்த தில்லை;**
**குளமுறையும் தவளையென நமக்குள் நாமே**
**குலப்பெருமை பேசுவதும் கொடுமை யன்றோ!**

(கு.க., ப.346)

என்று உயர் கொள்கையைக் கவிஞர் கவிதையில் முன்வைக்கிறார். மேலும் பழமை நிலையைத் தமிழர் மறந்துவிட்டோம், மழுங்கி விட்டோம் என்னும் கருத்தியலை மையமாக வைத்துக் கவிஞர்,

வாழ்ந்த பழந் தமிழர்எழு கடலில் தங்கள்
வணிகர்கலம் ஓடியநாள்; எண்ணிறந்த
ஆழ்ந்தகலைத் திறனுடையார் சங்கம் கூடி
அறிவு வளம் பெருக்கியநாள் தமிழ்வ ளர்த்தார்;
சூழ்ந்தமர்ந்து சிந்திப்பீர், வளர்ச்சிகுன்றிச்
சுடர்மங்கி நிற்கின்றோம் உலக மன்றில்;
தாழ்ந்த இனம் உயர்ந்த மொழி சமைத்த தில்லை
தானாக எம்மொழியும் வளர்ந்த தில்லை (கு.க., ப.346)

என்று இறுதி இரண்டு வரி இந்தக் கவிதைக்கு உயிர்கொடுத்து மகாகவிதையாகப் படைத்து விட்டார்.

தமிழ்மொழி குன்றி மங்கிப் போனதற்கான காரணங்களைக் கவிஞர் கேள்விக் கணைகளாகச் சமுதாய மக்களின் முன் வைக்கிறார். அவரின் கவிதை வரிகள் வெறும் எழுத்துக்களால் ஆனதல்ல, உணர்வுகளால் உருவானவை.

திருக்குறளும் சிலம்பொலியும் கம்பன் செய்த
சித்திரமும் தேவையெலாம் தீர்ப்பதுண்டோ
கருத்துலகப் பூம்பொழிலின் விரிவில் கோடி
கலைமலர்தல் காணீரோ; அவையனைத்தும்

திருத்தமிழிற் கண்டீரோ; அணுயுகத்தைச்
செந்தமிழிற் பார்த்தீரோ; மொழிவ ளர்க்க
மருத்துவரின் பொறிவலரின் அறிவி யல்நூல்
வல்லுநரின் துணைதேட வழிசெய் தீரோ? (கு.க., ப.349)

இக்கவிதை ஒவ்வொரு தமிழனையும் தட்டியெழுப்ப வேண்டும் என்பது கவிஞரின் ஆசையாகக் கூட இருக்கலாம். எனவே தான் கவிதையில் கேள்விகளை முன்வைக்கிறார். இதுபோன்ற கவிதைகளைப் படித்த பின்பாவது தமிழர்கள் தம் மொழியை வளர்க்க முயற்சி எடுப்பார்களா? என்பது கவிஞரின் சிந்தனை. எனவேதான் கவிதையின் முடிவில்,

முன்னோர் செல்வ
ஆசியிலே வாழ்கின்றோம்; கால மெல்லாம்
அதன்பெருமை பேசுகின்றோம். அவலமன்றோ?
(கு.க., ப.347)

என்கின்றார்.

**ஏக்கம்**

மொழியின் மீது கவிஞருக்கு ஏக்க உணர்வு இருக்கிறது என்பதை அவரது கவிதைகளில் அறிந்து கொள்ள முடிகிறது. அது அனைவருக்கும் இருக்கிற மன உணர்வுதான்.

பொதுவாக மொழி, இனத்தின் அடையாளம், ஓர் இனத்தின் நாகரிகம், பண்பாடு, கலை கலாச்சாரம் போன்றவை மேம்பாடு அடைவதற்கு மொழியின் பங்கு அளப்பரியது. மொழி அழிந்துவிட்டால் ஓர் இனத்தின் தனித்தன்மை அழிந்துவிடும். பின்னர் அவ்வினம் உருக்குலைந்து தன் அடையாளத்தை இழந்து, அங்கீகாரமற்ற சிறுபான்மை இனமாகப் பின்னுக்குத் தள்ளப்படும் நிலை உருவாகும். எனவே தான் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் மொழி குறித்த ஏக்கத்தைப் பதிவு செய்கிறார்.

**சங்கங் கூட்டி உண்மை ஆய்ந்த**
**தமிழர் வாழ்வின் தகைமை இடையில்**
**மங்க நேர்ந்த கொடுமை எண்ணி**
**வாடும் நெஞ்சே, வளமும் கலையும்**
**பொங்க மீண்டும் தமிழர் பண்டைப்**
**புகழின் மிஞ்சி முதன்மை யாங்கும்**
**தங்க வாழ்வர் என்ற செய்தி**
**தரணி பேசும் நாளும் வருமோ?** (கு.க., ப.343)

என்று ஏக்கத்தோடு கேள்வி கேட்கிறார். மேலும் தமிழ்மொழி குறித்துப் பேசும்போது கவிதையில்,

**முன்னை மனிதன் அறிவுக் கடலில்**
**முழுகி எடுத்த முதிர்ந்த முத்து**
**தென்னை நீரின், மதுவின், மாதர்**
**செவ்வை இதழின், மழலை நாவின்**

**கொன்னை மொழியின் இனிய, விரையும்**
**கோளின் வெளியின் பெரிய, எங்கள்**
**அன்னை அமுதத் தமிழின் செல்வம்**
**அவனி விழையும் நாளும் வருமோ?** (கு.க., ப.343)

என்கிறார் பழைய நிலை மீண்டும் தமிழ் மொழிக்குக் கிடைக்குமா? என்கின்ற ஏக்க உணர்வைக் கவிதையில் பதிவு செய்கிறார்.

## தமிழ் இல்லை

தமிழ் என்பது இன்று பல நாடுகளில் பேசப்படுகின்ற மொழியாக இருக்கின்றது. ஆனால் சில நாடுகளில் பேசப்படுவதே இல்லை. அதனைக் கண்டு கவிஞர் ஏக்கம் கொள்கிறார். பொதுவாகத் தமிழுக்குப் பாதிப்பு எங்கெல்லாம் நடக்கிறதோ அங்கெல்லாம் தமிழுணர்வு கொண்ட தமிழர்கள் தமிழைப் பாதுகாக்கும் நடவடிக்கைகளில் ஈடுபடுவர். இலக்கியவாதிகள், எழுத்தாளர்கள், கவிஞர்கள் தங்களின் படைப்புகளின் வாயிலாகத் தமிழுணர்வை மக்களுக்கு ஊட்டுவர். அந்த வகையில் மொரீசியஸ் நாட்டில் தமிழ் பேச்சில் இல்லை என்பதைக் கவிதையில் கவித்துவத்துடன் புனைந்துள்ளார்.

**பெயரினில் தமிழைக் கண்டேன்**
**பெருகிடும் அன்பின் பண்பின்**
**உயர்வினில் தமிழைக் கண்டேன்**
**ஒளிர்நகை மலரும் பெண்டிர்**

**அணிகளில் தமிழைக் கண்டேன்;**
**ஆடையில் தமிழைக் கண்டேன்;**
**பணிவுடன் வணங்கி நிற்கும்**
**பக்தர்கள் நிறைந்த கோவில்**

**சூழலில் தமிழைக் கண்டேன்;**
**தொன்றுள சடங்கனைத்தும்**
**நிழல்போல் தொடர்ந்து நிற்கும்**
**நிலைமையில் தமிழைக் கண்டேன்;**

**நாவினில் அலகு தைக்கும்**
**நடப்பினில், முருக வைக்குக்**
**காவடி தோளில் தாங்கும்**
**காட்சியில் தமிழைக் கண்டேன்**

**பணமென வழங்கும் தாளில்**
**பைந்தமிழ் கண்டேன்; உண்ணும்**
**உணவினும் தமிழ் நிலத்தின்**
**உறவுகள் கண்டேன்; தங்கள்**

**மூச்சென மரபு காத்த**
**மொரீசியத் தமிழர் தங்கள்**

**பேச்சினில் தமிழைக் காணேன்**
**பெரிதவர் ஏக்கம்-கண்டேன்** (கு.க., ப.370-371)

பல நாடுகளில் பழக்க வழக்கங்கள் மட்டுமே தமிழரிடம் நடைமுறையில் உள்ளன. ஆனால் தமிழ்க் குடும்பங்களில் கூடத் தமிழ்மொழி பேசுவது இல்லை; இந்நிலையைக் கவிஞர் கவிதையில் மிகத் தெளிவாகத் தமிழ் இல்லை என எடுத்துரைக்கிறார்.

இந்த நிலை மொரீசியஸ் நாட்டில் மட்டும் இருக்கிறது என்பதல்ல.நம் நாட்டில் தமிழர்களிடையே குடும்பத்தில் பல பேர் தமிழ் மொழியில் பேசுவது இல்லை. தமிழ் நாட்டில் உள்ள பெற்றோர்கள் தங்களது குழந்தைகளிடம் தமிழ் மொழியில் பேசுவது கிடையாது.

தமிழகத்தில் உள்ள ஆங்கிலப் பள்ளிகளில் தமிழில் பேசும் மாணவர்களுக்குத் தண்டனை கொடுக்கின்றனர். இது போன்ற கீழ்த்தனமான செயலில் ஈடுபடுபவர்களுக்காகவே இக்கவிதையைக் கவிஞர் குலோத்துங்கன் எழுதியுள்ளார்.

### தமிழ் மொழி எங்கே

தமிழ் மொழி எங்கே இருக்கிறது. நம் மொழிக்கான இடம் எது? எங்கெல்லாம் மொழி தன் ஆளுமையைச் செலுத்துகிறது என்கிற கேள்விகளைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதைகளில் முன்வைக்கிறார்.

பொதுவாகவே தமிழ்மொழியின் தரம் தாழ்ந்து விடக்கூடாது; தலை நிமிர்ந்து நிற்க வேண்டும். நலினப்பட்டு விடக்கூடாது என்பதில் மொழியுணர்வு மிக்கவர்கள். மிகுந்த அக்கறை யுடையவர்கள் என்பதை அவர்களின் படைப்புகள் எடுத்துரைக் கின்றன. அந்த வகையில் குலோத்துங்கனின் கவிதையில் தமிழின் பெருமை எது என்பதை மிகவும் உணர்வுடன் பதிவு செய்துள்ளார்.

**செந்தமிழின் பெருமை எனச் செவிகள் கைப்பத்**
**தினந்தோறும் பேசுகிறீர்; ஒரு சொல் கேளீர்!**

**நந்தமிழின் பெருமை எது? ஆங்கிலம் போல்**
**ஞாலத்தின் பொதுமொழியா? உலக மன்றில்**

**அமர்வுடைய ஆட்சிமொழிக் குழுவில் ஒன்றா?**
**ஐக்கியநாட் டவைமொழியா? மனித சாதி**

நமதென்னும் செம்மொழியின் வரிசைபெற்ற
யவனம் போல், வடமொழிபோல் நமதும் ஒன்றா?

வையத்தின் துறையனைத்தும் தன்னுள் கொண்டு
வளர்மொழியா; பல்கலையின் வாயிலா? நாம்

ஐயத்திற்கிட மின்றிப் பெருமை கொள்ளும்
அடிப்படைகள் யாவை என ஆய்ந்த துண்டா?

எதை நம்பிப் பேசுகிறீர்; தமிழர் நம்மோர்
ஏற்றத்தின் ஊற்றறியீர்; ஆய்வில் யாது

கதை சொல்லி என்னபயன்; தமிழர் பண்டைக்
கலைச்செல்வம் முழுமையையும் கண்டீரில்லை

(கு.க., ப.363)

என்று கவிதையில் ஏக்கத்தையும், சோகத்தையும், வேதனையையும் பதிவு செய்துள்ளார். இக்கவிதை 1984இல் எழுதப்பெற்றது. அப்போதே கவிஞர் செம்மொழிச் சிந்தனையைத் தம் கவிதையில் பதிவு செய்துள்ளார். அவரின் ஆதங்கத்தின் பயனால் 2000த்திற்குப் பின்பு தம் தாய்மொழியாகிய தமிழ் செம்மொழித்தகுதி பெற்று விட்டது. அது போலவே அவர் எதிர்பார்க்கிற அனைத்துப் பண்புகளையும் தமிழ்மொழி பெறவேண்டும் என்பது கவிஞரின் ஆசையாகும்.

### வீண் கதை பேசிப் பயன் என்ன?

தமிழ்மொழி வளர்வதற்காக ஆக்கப்பூர்வமான பணிகள் எதுவும் செய்யாமல் வீணாகக் கதைகளையும், முந்தைய பெருமைகளையும் பேசிக்கொள்வதால் என்ன பயன் விளையப் போகிறது என்கிற வினாவைத் தமிழ்ச் சமுதாயத்தின் முன் வைக்கிறார்.

மூலையிலோர் கொடி ஏற்றி, அண்ணன் தம்பி
முறைமையினர் தமைக்கூட்டி முன்னர்வைத்துக்
காலையிலும் மாலையிலும் தமிழர் வாழ்ந்த
கதைபேசி இன்று வரை கண்ட தென்ன?

ஆங்கிலமும் நன்கறியீர்; செம்மை சான்ற
அயல்மொழிகள் கற்பதிலும் ஆர்வம் காணீர்;
தீங்கிழைக்கும் வடமொழியென் றெதிர்ப்பீர்; பேசும்
செழுந்தமிழின் முழுமையையும் தெளிந்தீ ரில்லை

**ஒளியற்ற வெப்பத்தின் உருவம் நீவிர்;**
**உடம்பணியால் தமிழென்றும் உயர்வ தில்லை;**
**வளியுண்டு; இடியுண்டு; மழையில் லாத**
**வானம் நீர்; தமிழும்மால் வளர்வ தில்லை** (கு.க., ப.364)

இக் குறைகள் கவிஞர் காட்டும் குறைகள் ஆகும். இக் குறைகளை எப்படிக் களைவது, என்பதையும் தம் கவிதையில் தெளிவு படுத்துகிறார்.

**இமயம் முதல் குமரிவரை பரவி நிற்கும்**
**இந்தியத்தின் வாழ்வியலில், இலக்கியத்தில்**
**சமயமெனும் சிந்தனையில், தத்துவத்தில்**
**தமிழ்மொழியின் பங்குண்டு; சாற்ற வேண்டும்**
**இந்தியத்தின் பண்பாட்டின் விழிகள் என்ப**
**இன்தமிழும், வடமொழியும் என்னும் உண்மை**
**விந்தியத்தின் வடக்கேயும், கடல்கள் தாண்டி**
**வெளியுலகின் மன்றத்தும் விளக்க வேண்டும்**

என்கிறார். மேலும் இது போன்ற செயல்களைச் செய்ய 'நாம் செய்வ தென்னவென நாட வேண்டும்' என்கிறார். மேலும் அதற்கு நாம் செய்ய வேண்டியதைக் குலோத்துங்கன் தமது கவிதையில் தீர்வாக முன்வைக்கிறார்.

**வளமுண்டு சொல்லமைப்பில், புதிய சேர்க்கும்**
**வாய்ப்புண்டு தமிழ்மரபில், மாற்றம் ஏற்கும்**

**அளவுண்டு மொழிநூலில், துறைகள் தோறும்**
**ஆய்வுடையார் தலைமையுடன் அமர வேண்டும்**
(கு.க., ப.365)

நல்ல திறமைபடைத்த ஆய்வுடையவர்கள் தமிழ் மொழி அமைப்புகளுக்குத் தலைமையேற்க வேண்டும் என்பது கவிஞர் முன்வைக்கின்ற தீர்வாகும். இது ஏற்றுக்கொள்ள வேண்டிய கருத்தாகும். பெரும்பாலும் மொழி வளர்ச்சி நிறுவனங்களுக்கு எந்தவிதமான பரிந்துரை இல்லாமல் தகுதிவாய்ந்த, திறமையான நல்ல தமிழ் அறிவுள்ளவர்களைத் தலைமைப்பொறுப்பில் அமர்த்த வேண்டும். அப்போது தமிழ் இயல்பாகவே வளர்ந்துவிடும்.

## அறிவியல் வளர்ச்சியில் தமிழ்

இன்று அறிவியல் வளர்ச்சியால் அறிவு வெடித்துச் சிதறுகின்ற காலம்; அறிவு பரவும் என்பது கூடப்போதாது என்பர்;

ஒவ்வொரு நொடியும் அறிவியல் வளர்ச்சியும், மாற்றமும் பெற்று வருவது கண்கூடு. ஆனால் தமிழ்மொழியில் அறிவியலின் தன்மை எப்படி இருக்கிறது என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் முன்வைக்கிறார்.

**அறிவியல் உலகம் விரிகிறது-நிதம்**
**அது செலும் வேகம் மிகுகிறது**
**பொறியியல் கருவிகள் சமைகின்றன-நிதம்**
**புதுமைகள், புதுமைகள் புலர்கின்றன**

**அந்நிய மொழிக்குலம் முன்நடக்கும்-புது**
**அறிவின் துறைகளை வழிநடத்தும்**
**என்னுடைய மொழி அவண் இல்லையடா-அது**
**எங்கோ தேங்கி ஏங்குதடா** (கு.க., ப.362)

என்று அறிவியலில் தமிழ் மொழி சரியான வளர்ச்சி பெறாமல் ஒரு தேக்கத்தை அடைந்துள்ளது என்பதைக் கவிஞர் கவிதையில் பதிவு செய்துள்ளார். மேலும் தமிழ் மொழியின் வளர்ச்சி பிந்தியே உள்ளது என்பதை,

**நாளும் நம்மொழி பிந்துதடா-புவி**
**நம்மைப் பிரிந்து முந்துதடா**
**ஆளுமை தருவது கல்வியடா-நமக்**
**கன்னை மொழித்துணை இல்லையடா** (கு.க.,ப.362)

என்று கூறுகிறார். இக்கவிதையில் அறிவியல் துறையில் தமிழ்மொழி பின்னோக்கி இருக்கிறது என்கிறார். ஆனால் கவிஞர் குலோத்துங்கன் 'தமிழின் பரிமாணங்கள்' குறித்துக் கருத்துரைக்கும் போது 'தமிழ்மொழிக்குச் சீன மொழி, கிரேக்க மொழி தவிர்த்த வேறு எந்த மொழிக்கும் இல்லாத அளவில் மூன்று பரிமாணங்கள் ஒருங்கு சேர அமைந்து உள்ளன.

1. (i) தமிழ் இரண்டாயிரம் ஆண்டுக்கும் மேலான இலக்கியப் பாரம்பரியம் உள்ள பண்டை மொழிகளுள் ஒன்று.

(ii) இந்தியப் பண்பாட்டின், தத்துவ மரபின், நாகரிகத்தின் முக்கியமான அடிப்படைகளாக அமைந்துள்ளவை இரண்டு மொழிகள் அவை வடமொழியும், தமிழ் மொழியும் ஆகும்.

(iii) தமிழ் உலகின் செவ்வியல் மொழிகளுள் ஒன்று.

2. இரண்டாவதாக, தமிழ் இருபத்தோராவது நூற்றாண்டில் ஏறத்தாழ 7.5 கோடி மக்களின் தாய்மொழியாகவும், அது வழங்கும் நாடுகளில் அதன் பயன்பாட்டிற்கேற்ப, அரசியல், சமுதாய, ஆன்மிகத் தேவைகளை எதிர்கொள்வதாகவும், இலக்கிய வளம் நிறைந்ததாகவும் உள்ள நவீன மொழி.

3. மூன்றாவதாக, தமிழ்...ஐம்பதுக்கு மேற்பட்ட நாடுகளில் வாழும் தமிழர்களின் தாய்மொழி, சுருக்கமாகச் சொல்வதனால், உலகு தழுவி வாழும் ஒரு மொழிக் குடும்பத்தின் தாய்மொழி, என்று தம் 'உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ்' என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.

ஆனால், அவ்வளவு சிறப்பு வாய்ந்த மொழி இன்றும் முன்னேற்றத்தைக் காணவில்லை. குறிப்பாக அறிவியல் தன்மையில் பின்னோக்கியே இருக்கிறது என்கிறார்.

இதற்கான காரணத்தைக் கவிஞரே தமது கவிதையில் குறிப்பிடுகிறார் அதாவது,

**இந்நாளின் தேவைகளை**
**எண்ணாமல் காலமெலாம்**
**பின்னோக்கிப் பின்னோக்கிப்**
**பின்னோக்கிப் பேசுபவர்**

**கூட்டம் வளர்கிறதே!**
**கூக்குரலில் ஆர்ப்பரிப்பில்**
**தேட்டம் வளர்கிறதே!**
**செயல் மறந்து, மக்களிடை**

**பேதத்தை நாளும்**
**பெருக்குபவர், வீணான**
**வாதத்தின் நாயகர்கள்**
**மலிந்துளரே; மற்றொருவர்**

**கூறுவதில் சிந்தை**
**குவித்ததனை எண்ணுகிற**
**பேறுடையர்; விஞ்ஞானப்**
**பார்வையுளர்; நம்மினத்தைப்**

**பாதிக்கும் கேள்விகளைத்**
**தேர்வு செய் ஆழ்ந்தகன்று**

சிந்திப்போர்! பல்வழியும்
தூக்கி, எடை கண்டுமனம்

சூழுபவர்; தூரத்தை
நோக்கி எதிர் காலத்துள்
நுழைதிறலர்; விற்பன்னர்
வளர்கின்ற நாடன்றோ

வாழ்வுபெறும்; அத்திறத்தர்
உளர்நம்முள்; ஆய்ந்தடங்கி
ஒதுங்கியுளர்; அன்னவரைத்
தேடுவதும், பட்டறிவில்

தெளிந்தார் தம் சேவையினை
நாடுவதும் முன்னேற்ற
நாட்டமுளர் பாதை; இவண்
யார் தமிழர் என்பதையே

நம்தீர்க்க வில்லையெனில்
சீர்வருமா! வெற்றிநமைச்
சேருமோ! செந்தமிழை
எம்மொழியென் றேற்பவர்

இதயத்தில் எந்தமிழைத்
தாய்மொழியென் றெண்ணுபவர்
தமிழரே (கு.க., ப.378-379)

என்று கவிஞர் ஒரு நெடுங்கவிதையைப் பாடுகிறார். தமிழ் பின்னோக்கிப் போனதற்குப் பல்வேறு காரணங்களைச் சொல்லி விளக்குகிறார்.

கவிஞர் குலோத்துங்கன் கூறியுள்ள ஒவ்வொரு வரியும் மிக ஆழமாகச் சிந்திக்கத்தக்கவை. தமிழ்மொழி தாழ்ச்சியுற்றதற்கு ஒரு காரணம் முக்கியமானது, அதனைத்தான் 'வீணான வாதத்தின் நாயகர்கள் மலிந்துளரே' என்று கூறுகிறார். அதுதான் இன்று உண்மையும் கூட. மற்றொரு கருத்தும் கவனிக்கத் தக்கது. 'இன்னாளில் தேவைகளை எண்ணாமல் காலமெலாம் பின்னோக்கிப் பேசுபவர் கூட்டம் வளர்கிறதே' என்ற கருத்து ஒவ்வொரு தமிழர்களின் மனதையும் கசக்கிப் பிழிந்து விடுகிறது.

கவிஞர் குலோத்துங்கன் இக்கவிதையில் கூறியுள்ள கருத்துக்கள் எதிர்காலத்திலாவது மாறவேண்டும். தமிழ் வளர

வேண்டும். இல்லையெனில் கவிஞர் கூறியுள்ள கருத்து மாறாது. தமிழின் நிலையும் மாறாது.

### தமிழ் அஞ்சல் அட்டையில் உண்டா?

தமிழ்மொழி தமிழ்நாட்டில் எல்லா இடங்களிலும் உண்டா? எனில் இல்லை என்றே கூறலாம். குறிப்பாக வங்கிகளில் உள்ள தாள்களில் கூட ஆங்கிலம் தான் உள்ளது. சில வங்கிகளில் தமிழ் உண்டா. அதேபோல அஞ்சல் அட்டையில் கூடத் தமிழ் இல்லை என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் வேதனையோடு பதிவு செய்துள்ளார். அதாவது

**அஞ்சல் அட்டைல் அருந்தமிழ் இல்லை**
**அஞ்சல் அட்டைக் கருகதை யில்லாப்**
**பஞ்சையர் மொழியா பைந்தமிழ்? இன்னும்**
**அஞ்சல் அட்டை போல் ஆயிரம் ஆயிரம்**
**சான்றுள** (கு.க., ப.393)

என்று ஓர் அஞ்சல் அட்டையில் இல்லாத் தமிழைப் போல் பல சான்றுகள் சொல்லத் தயாராக உள்ளார். ஆனால் அவர் வெறும் பட்டியல் தருவதில் பயன் இல்லை என்பதால் கவிஞர் தமிழ் இல்லா இடங்களின் பட்டியலைத் தரவில்லை. இந்தக் கவிதையின் இறுதியில் அவர் முடிக்கும் போது விதியை நொந்து கொள்கிறார்.

**விதியே, விதியே தமிழ்ச் சாதியை**
**என்செயக் கருதி இருக்கின்றாயடா?** (கு.க., ப.394)

என்று ஒரு கேள்வியோடு கவிதையை முடிக்கிறார். மேலும் இந்நெடுங்கவிதையில் தமிழ்மொழி உயர்வதற்குத் தீர்வையும் தருகிறார்.

**தமிழுல கனைத்தும் தம்வழி ஈர்த்துத்**
**தமிழினம் உயர்த்தும் தலைவர் காணுவீர்** (கு.க., ப.394)

என்கிறார். அதாவது நல்ல தரமான தன்மானத் தமிழினத் தலைவராகக் காண வேண்டும் என்கிறார்.

### தமிழை வளர்க்கச் செய்ய வேண்டியவை

கவிஞர் குலோத்துங்கன் தமிழ் மொழியை வளர்க்கப் பல்வேறான வழிகளைத் தம் கவிதையில் கூறியுள்ளார்.

**எழுத்துருவைச் சீரமைப்பீர்**
**எழுதல் கற்றல்**
**எளிதாக்க வழி வகுப்பீர்;**
**கூடி நின்று**

**வழுத்துவதால் தமிழ் வளர்வ**
**தில்லை; வாழ்வில்**
**மாற்றம் தான் மேம்பாட்டின்**
**வாயில் ஆகும்.**

**சொல்லாக்கம் புதுவழியில்**
**துணிந்து காண்பீர்**
**தொல்காப்பியத்திற்கும்**
**துணை நூற் செய்வீர்**

**எல்லார்க்கும் கல்வியெனும்**
**இந்த நாளில்**
**ஏணி பல புனையாதார்க்கு**
**ஏற்றம் இல்லை** (கு.க., ப.412)

இக்கவிதையில் கவிஞர் எளிமையான மொழியாக்கத்தைக் குறிப்பிடுகிறார். 'வாழ்த்தினால் தமிழ் வாழாது' என்பது உரக்கச் சொல்ல வேண்டிய வார்த்தை. காரணம் இன்று எதற்கெடுத்தாலும் கருத்தரங்கம் என்னும் பெயரில் ஒரு கூட்டத்தைக் கூட்டிச் சாப்பாடு போட்டு, பணத்திற்குப் பொய்யான கணக்குக் காட்டி 'ஆடிட்டிங்'கில் தப்பித்துப் பெருமூச்சு விடும் கூட்டம் தமிழ் வளர்ப்பதாகக் கூறுகிறது. எனவே தான் கவிஞரின் வரியை உரக்கத் தமிழ் இனத்திற்குக் கூறவேண்டும் என்கிறேன்.

மேலும் தமிழ் வளர்வது எங்குள்ளது என்று கவிஞர் குறிப்பிடுவது அருமை.

**இறுக்கத்தால் பயனில்லை**
**இளக்கம் தேவை**
**இலக்கண நூலும் பயிற்சியெலாம்**
**எளிமை செய்வீர்**

**மறுக்கின்ற வைதிகர்கள்**
**வய்யம் செல்லும்**
**வழியறியார் எளியர்; அவர்**
**வழி தவிர்ப்பீர்**

**பலகணியை மூடுபவர்;**
**புதுமை சேர்க்கும்**
**பரிதி ஒளி கூசுபவர்;**
**முன்னோர் சொல்லே**

**உலகமென நம்புபவர்;**
**எதிர் காலத்தை**
**ஊடுருவி அறியாதார்**
**உயர்வதில்லை** (கு.க., ப.413)

என்கிறார். இக்கவிதையை முதலில் பழைமைவாதிகளுக்குக் கொடுக்க வேண்டும். எளிமையை எப்போது தருகிறோமோ அப்போதுதான் தமிழ் வளரும். இன்று ஒரு பாடலின் சீரைப் பிரித்து எழுதுவதால் தமிழ் கெட்டுப் போய் விட்டது என்கிற கூட்டம் இருக்கும் வரையில் தமிழ் வளருவதில்லை. எனவே எல்லா இலக்கணத்தையும் எளிமையாக்க வேண்டும் என்னும் தன்மையில் அமைந்த இக்கவிதை அற்புதம் தான்.

தமிழ்மொழி குறித்துக் கவிஞர் குலோத்துங்கன் முன்வைத்துள்ள கவிதைகள் எல்லாம் இன்றைய சூழ்நிலையில் தமிழ் வளருவதற்கான கருத்துக்களை எடுத்துரைக்கின்றன. கவிஞர் தமிழ்மொழியின் மீது ஆழமான சிந்தனையிலும் சமூக எதார்த்த வாதத்திலும் நடப்பியல் பாணியிலும் கருத்துக்களை முன்வைக்கிறார்.

கவிஞர் மொழி குறித்துப் பல்வேறான கருத்துக்களை மிகவும் அழகாகவும், வாசிப்பவர்களின் மனதில் ஏதாவது ஒரு தாக்கத்தை ஊசிபோலத் தைப்பதாகவும், கவிதைகளை அமைத்துள்ளார்.

## தமிழ் இனம்

கவிஞர் குலோத்துங்கன் தமிழ் இனத்தின் மீது மிகுந்த அக்கறை கொண்டவர். எனவேதான் மொழியோடு தமிழ் இனத்தையும் கவிதையில் படைத்துள்ளார். தமிழ் இனம்தான் முதலில் தோன்றியது என்பதைக் கவிஞர்

**செந்தமிழ் மக்கள் சர்வ**
**தேசியத் தத்து வத்தின்**
**தந்தையர்**

**வய்ய மெல்லாம் தமர்யெனப்**
**பறை யறைந்தோர்** (கு.க., ப. 414)

என்று தமிழ் இனத்தின் பெருமையைப் படைக்கிறார். இந்தத் தேசத்தின் தத்துவவாதிகளில் முன்னோர் என்று கூறுவதைத் தந்தையர்கள் என்கின்றார்.

## தமிழ் இனப் பெருமை

தமிழ் இனம் பல்வேறான பெருமைகளைக் கொண்டது. அப்பெருமைகளைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் பதிவு செய்துள்ள பாங்கு சிறப்பிற்குரியது.

**கரையினை அணைந்த காவலில் நாவாய்**
**திரைகடல் பயணம் சென்றநாள் கடந்து**
**வாரியின் பரப்பில் வளியினை ஆண்டு**
**பாரிதில் வாரிதிப் பயணப் புரட்சியைச்**
**செய்தஎம் பேரினம்** (கு.க., ப.385)

என்று கடல்கடந்து தமிழினம் பயணம் செய்து வாணிகம் செய்தனர் என்ற செய்தியை மிக நேர்த்தியாகப் பதிவு செய்துள்ளார். இது கவிஞரின் தமிழியக்க உணர்வை வெளிப்படுத்துகிறது. மேலும் தமிழினப் பெருமையை நினைத்துக் கவிஞர் இன்பம் அடைவதைக் கவிதையில் மன எழுச்சியின் ஆழத்தில் இருந்து வெளிப்படுத்துகிறார்.

**சேய்மையை வென்று**
**எய்திய நாடெலாம் என்முன் வந்தன**
**கல்வியில், கலைகளில், கருத்தின் நுண்மையைச்**
**சொல்வதில்; உண்மையைத் துருவி ஆய்வதில்**

**மாண்புடைக் காவிய மரபின் உச்சியைக்**
**காண்பதில் எம்மினும் கண்ட வெற்றியை**
**எண்ணினன், எண்ணியேன் இறகுகள் பெற்று**
**மண்ணினின் றெழுந்து வானிடைத் திரியுமோர்**
**தெய்வத நிலையோ, தேவதப் பிறவியோ**
**எய்தினன்** (கு.க., ப.385)

என்று கவிதையைப் புனைந்துள்ளார். **''குலோத்துங்கனின் மொழி தமிழியக்க உணர்வுப்போக்கில் மிகவும் புதிய அறிவார்ந்த இயல்பான மொழி, தமிழர்களின் மனதுக்குள் சென்று சிந்திக்கத் தூண்டும் மொழி. மேடை முழக்கமாக, பெருமை கூறலாக, போர்க்குரலாக, உரிமைக் குரலாக, தன்மான உணர்வாக வெளிப்பட்ட தமிழியக்க உணர்வு குலோத்துங்கனிடம் அறிவார்ந்த கல்விச் செயலாக வெளிப்படுகிறது.**

கவிதையைத் தனிநபரின் உணர்வு சார்ந்து விளக்கம் செய்யும் போது, அவ்வுணர்வில் அரசியல் நிரம்பியிருக்கும் போது அதன் மொழி வேறானதே. தமிழியக்க உணர்வுப் போக்கு என்பது, தமிழர்களின் உரிமைக்கான அடையாள அரசியலாக, இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் தனிப்பரிமாணம் பெற்றுள்ளது எனலாம்'' என்று து. சீனிச்சாமி கூறுகிறார். இவரின் கருத்து குலோத்துங்கனின் அனைத்துக் கவிதைகளிலும் காணக்கிடக்கிறது.

## புலவர்கள் சிறப்பு

கவிஞர் குலோத்துங்கன் தமிழ்ப் புலவர்களின் சிறப்புக்களையும் தம் கவிதையில் பதிவு செய்துள்ளார் தமிழ் மொழியை வளர்த்த பெருமை தமிழ்ப்புலவர்களுக்குண்டு. எனவே தம் கவிதைகளில் அவர்களின் சிறப்பினைக் கலைநயத்துடன் படைத்துள்ளார்.

**சங்கம் கண்டதும், தம் துறை தெளிந்தோர்**
**அங்கமர்ந் துறுபொருள் ஆய்ந்த மாட்சியும்**

**வள்ளுவன் ஔவை வாழ்ந்ததும், புதுமலர்க்**
**கள்ளுயர் காவியம் கம்பன் தந்ததும்**

**மன்னவன் இளங்கோ வரிச்சியம் பொரியிலுன்**
**இன்னிசை முழங்க இழைத்த பெற்றியும்**

**கல்லும் தம் கலைக் கைபடப் பேசும்**
**வல்லுநர் நுண்கலை வகுத்த காலமும்**

**கங்கை கொண்டதும் கடலிகத் துன்னினம்**
**சிங்களம் கீழைத் தீவகம் வென்றதும்** (கு.க., ப.350)

என்று சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தவர்கள் தமிழ்ப் புலவர்கள் என்பதைக் கவிதையில் கூறியுள்ளார். தமிழ்ப் புலவர்கள் ஔவை, கம்பன், வள்ளுவன், இளங்கோ போன்றவர்கள் சங்கத்தில் இருந்து தமிழ் ஆய்ந்தவர்கள் என்று குலோத்துங்கன் தமிழியக்க உணர்வைக் கவிதையில் பதிவு செய்துள்ளார். மேலும் வள்ளுவனைப் பற்றியும் வள்ளுவர் யாத்த குறள் பற்றியும் கவிஞர்,

**வாழ்வியல் படைத்த மேதை,**
**வள்ளுவன் தந்தமுப்பால்**
**சூழ்நிலை அனைத்தும் தன்னுள்**
**சூழ்ந்தொரு பாதை காட்டும்**

மானிட வேதம்;
இந்த வையத்தார் அனைவர் கட்கும்
தேனினும் இனிய எங்கள்
செந்தமிழ் தந்த செல்வம்

பொதுமறை என்று வையம்
போற்றுதற் குரிய வேண்டின்
முதுமறைகுறளே என்று
மொழிகுவர் நுழைந்த நூலோர் (கு.க., ப.407-408)

என்று கூறுகிறார். இக்கவிதை வள்ளுவரின் சிறப்புகளை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. கவிஞர் 'தமிழ்மறை கூறடா' என்னும் கவிதையில் திருவள்ளுவரின் சிறப்பைத் 'தமிழ்மறை' என்று கூறி விளக்குகிறார். இக்கவிதையை வாசிப்பவர்களுக்குத் திருக்குறளின் மீதும் வள்ளுவரின் மீதும் மிகுந்த மரியாதை ஏற்படும். அந்த அளவிற்குக் கவிஞர் குலோத்துங்கன் கவிதையைப் படைத்துள்ளார்.

வள்ளுவன் வாழ்க என்போம்-திரு
மாமறை தந்தவன், வாழ்வியல் கண்டவன்
தெள்ளு தமிழ்ப்புலவன்-பழஞ்
செந்தமிழ்ப் பண்பில் திளைத்ததை வையகம்

கொள்ளக் குறள் கொடுத்தான்-வளம்
கூடிய சிந்தனை வாரியின் ஆழத்தில்
அள்ளிய பொன்மணிகள்-புவி
அன்பிற் செழிக்கத் தமிழ்மறை கூறடா! (கு.க., ப.341)

இந்த உலகம் அன்பில் செழித்து வளர்வதற்குத் தமிழ் மறையாகிய திருக்குறளை எடுத்துக் கூற வேண்டும் என்கிறார் கவிஞர் குலோத்துங்கன். மேலும் இந்த உலகம் பல்வேறு பிரச்சினைகளால் நொந்து போய்க்கிடக்கிறது. எனவே அந்தச் சூழ்நிலையில் தமிழ்மறையை எடுத்துக் கூறவேண்டும் என்கிறார். தமிழ்மறை ஒரு புத்துணர்ச்சியைக் கொடுக்கும் நூல் ஆகும். எனவே அந்த நூலின் கருத்தை எடுத்துக் கூற வேண்டும் என்கிறார்.

தேன் வழி யும்மழலை-தவழ்
சின்னஞ் சிறார்களை அள்ளி அணைத்திடும்

மான்விழி மாதர்குலம்-அவர்
வாய்மது வுண்டு மயங்கிய ஆடவர்

கான்விளை முல்லையடா-எங்கும்
காதலர் புன்னகை; வள்ளுவன் இல்லற

நோன்பி னுயர்வுகண்டோம்-மனம்
நொந்து புவிக்குத் தமிழ்மறை கூறடா!

வானம் விரித்ததடா-தரை
வாழ்வும் விரிந்தது மன்பதை ஒன்றெனும்

கானம் பிறந்ததடா-உயர்
காதல் நிறைந்தது, நெஞ்சம் விரிந்தது

ஞாலம் மலர்ந்ததடா-தமிழ்
நாடு படைத்தமுப் பால் அமுதுண்டதால்

ஈனம் அழிந்ததடா -புவி
இனபஞ் சுவைக்கத் தமிழ்மறை கூறடா (கு.க., ப.341, 342)

என்று தமிழ்மறையாகிய திருக்குறளை மக்களுக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்கிறார். அதற்கான காரணத்தையும் கவிதையில் கவிஞர் எடுத்துக்காட்டியுள்ளார். 'தமிழும், தமிழ் வேந்தும், தமிழகமும் ஞாயிற்றன்ன ஆற்றல் தோற்றித் திங்கள் அன்ன புகழொளி பாரித்து உயர்ந்த எண்ணங்கள் செயல்பட ஞான்று பிறப்பு எடுத்த திருக்குறள்' என்கிறார் பேராசிரியர் வ.சுப. மாணிக்கம். இக்கருத்துக்களை மிக நன்றாகத் குலோத்துங்கன் தம் கவிதைகளில் கூறியுள்ளார்.

## பாரதியார்

குலோத்துங்கன் பாரதியாரையும் தம் கவிதையின் பாடுபொருளாகக் கொண்டுள்ளார். 'பாரதி நின் அறங்கள் வெல்க' என்னும் தலைப்பில் பாரதியின் பெருமையையும் புகழையும் கவிநயத்தோடு படைத்துள்ளார்.

செந்தமிழின் வாழ்விலொரு திருப்பம் கண்டாய்
தீங்கவிதை இலக்கியங்கள் புலவர் கட்கே

சொந்தமென நின்றதொரு தோற்றம் வென்றாய்
சொல்கடந்து புதுவாழ்வு தமிழன்னைக்கு

வந்ததெனப் புதுக்கவிதை படைத்தாய்; பாட்டின்
வரியனைத்தும் மின்விசையின் வலிமை [illegible]

**தந்தமிழ்ப் பெருங்கவிஞர்! கவிதைத் தாயின்**
**தலைமகனே! பாரதிநின் தலைமை வெல்க!** (கு.க., ப.598)

பாரதியைக் கவிதைத் தாயின் தலைமகன் என்கின்றார் குலோத்துங்கன். ஒரு கவிஞன் பிறிதொரு கவிஞனைப் புகழ்கின்றான் எனில் அது பாரதியாரையும், பாரதிதாசனையுந் தான் இருக்க முடியும். அதிலும் பாரதியார் காவியத் தலைவன் தமிழுக்கு ஒரு மகுடமாக கவிதையை எளிமையாக்கி அறிமுகம் செய்தவன். எனவே அவனைப் புதுக்கவிஞர்கள் போற்றிப் புகழ்வார்கள். அந்த வகையில் கவிஞர் குலோத்துங்கனும் புகழ்ந்துள்ளார்..

பாரதியார் பாஞ்சாலி சபதத்தின் முன்னுரையில் 'எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம்' குறித்து மொழிவது போன்ற பாடல்கள் எல்லாம் எளியனவே' என்று கூறியுள்ளார். அக் கருத்துக்களை வைத்துக் கொண்டு குலோத்துங்கன் கவிதையைப் படைத்துள்ளார்.

**சுவை புதிது சொல் புதிது பாடத் தேர்ந்த**
**துறை புதிது முறை புதிது பாடி நின்ற**
**அவை புதிது பொருள் புதிது கவிஞ! நீஎம்**
**அவலத்தின் ஊற்றுக்களை ஆய்ந்த எண்ணைக்**

**குவை புதிதுன் குறிபுதிது; நமது பண்டைக்**
**கொள்கையெனும் தருவினில் பார்வை கண்ட**
**கவைபுதிது; மலர்புதிது; புதுயுகத்துக்**
**கவியரசு! பாரதி நின் கலைகள் வெல்க!** (கு.க., ப.598)

என்று பாரதியின் இலக்கிய வடிவத்தைக் கவிஞர் பாஞ்சாலி சபதத்தின் முன்னுரையை வைத்துக் கவிதையைப் படைத்துள்ளார். மேலும் கவிதையில் பாரதியாரின் மனத்திட்பத்தையும் அஞ்சாத நெஞ்சத்தையும் கவிஞர் மிக அழகாகக் கவிதையாக்கியுள்ளார்.

**அச்சமெனும் சிறுமையினை அறியா நெஞ்சம்;**
**ஆளுமையின் உருவமென அமைந்த தோற்றம்**
**துச்சமென உடைமைகளை உயிரை என்றும்**
**துறப்பதற்குத் தயங்காத துணிவு யார்க்கும்**

**இச்சகம்செய் தறியாத ஏற்றம்; மண்ணில்**
**எவருக்கும் வணங்காத தகைமை; வாழ்வில்**

**உச்சமெனும் மெய்யறிவுப் பார்வை; சேர**
**உயர்ந்தவன் நீ பாரதி நின் ஒழுக்கம் வெல்க** (கு.க., ப.599)

என்று பாரதியின் பண்பு நலன்களைக் கவிதையில் தெளிவு படுத்துகிறார். பாரதியைப் பற்றித் தமிழ்க் கவிஞர்கள் எவ்வளவு வேண்டுமென்றாலும் எழுதலாம் அவன் வாழ்ந்தது குறைவான நாள்களாக இருந்தாலும் அவனின் செயல்கள், கவிதைகள் எல்லாம் பல. அவற்றையெல்லாம் நாளும் எழுதிக் கொணடே யிருக்கலாம்.

'உலக இலக்கிய நியதியாகக் கொள்ளக் கூடிய இவ்விதிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இயங்குகிறார் பாரதியார்; 'புதுநெறி காட்டிய புலவன்' என்று பாரதிதாசனார் போற்றியது போல் பின் வந்தோர் எல்லாம் ஏதோ ஒரு வகையில் பாரதியின் புரட்சி வழி வரும் கவிப் புதல்வர்களேயாவர். யுகக் கவிஞன் புரட்சிக் கவிஞராகவும் இருத்தல் தவர்க்க இயலாதது' என்பர் கைலாசபதி தம் 'பாரதி ஆய்வுகள்' நூலில்.

இதுபோலப் பல தமிழறிஞர்களும் பாரதியின் பண்பு நலன்களைப் பற்றிப் பலவாறு எழுதியுள்ளனர். கவிஞர் குலோத்துங்கன், பாரதியைப் பற்றிக் குறிப்பாகப் புரட்சியாளராகச் சித்திரிக்கும் போது மிக இயல்பாக எந்தவிதமான வருணனையும் இல்லாமல் உண்மையைக் குறிப்பிட்டுக் கவிதை படைத்துள்ளார்.

**பாரதத்தை மனங்கொண்டு பாடினாலும்**
**பார்முழுவதும் ஒரு குழுவாய்ப் பார்த்த மேதை** (கு.க., ப.608)

என்கிறார்.

பாரதியார் பொதுவுடைமைச் சித்தாந்தத்தைக் கவிதைகளில் முன்வைத்தவர். எனவேதான் குலோத்துங்கன் 'உலகத்தை முழுவதும் ஒன்றாய்ப் பார்த்த மேதை' என்கிறார். இதனைத் தான் இன்று 'உலகக் கிராமம்' என்கின்ற வார்த்தையால் 'தனியார்மயம், தாராளமயம், உலகமயம்', என்கின்ற (LPG) கோட்பாட்டின் முன்னோடி பாரதி என்கிற விதமாகக் கவிஞர் முன்வைக்கிறார்.

மேலும், பாரதியார் முதன் முதலில் இந்தியாவில் புரட்சிக் கவிஞராக விளங்கியவர் என்பதைக் குலோத்துங்கன் மிகத் தெளிவாகக் கவிதையில் குறிப்பிடுகிறார்.

**வறுமையிலாச் சமுதாயம்; வயிற்றுப் பாட்டின்**
**வாட்டமிலாச் சமுதாயம்; மனத்தில் என்றும்**
**சிறுமையிலாச் சமுதாயம்; ஊற்றுநீர் போல்**
**தெளிவுடைய சமுதாயம் செய்ய வந்தோன்**

**சாதியிலாச் சமுதாயம்; உயர்வு தாழ்வுச்**
**சாதியறியாச் சமுதாயம்; எளியோர்க் கெல்லாம்**
**நீதிசெயும் சமுதாயம்; நமது மண்ணில்**
**நிலை நாட்டப் பாடியவன்; நிகரொன்றில்லான்** (கு.க., ப.608)

பாரதியார் வாழ்ந்த காலத்தில் இந்திய சமுதாயம் மிக இறுக்கமான சாதியக் கட்டமைப்பில் சிக்குண்டு இருந்தது. அந்தச் சூழ்நிலையில் பாரதியார்,

**சாதிகள் இல்லையடி பாப்பா**
**குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்**

என்று பாடினார். இதனைத்தான் குலோத்துங்கன், 'நமது மண்ணில் நிலைநாட்டப் பாடியவன்' என்கிறார். மேலும் பாரதியார் உண்மையான மானிடத்தை மட்டும் முன்னிறுத்திப் பாடல்களைப் பாடியவர் எனவே தான்,

**எல்லாரு மோர்குலம் எல்லாரு மோரினம்**
**எல்லாரு மிந்திய மக்கள்**
**எல்லாரு மோர்நிறை எல்லாரு மோர்விலை**
**எல்லாரும் இந்நாட்டு மன்னர்-நாம்**
**எல்லாரும் இந்நாட்டு மன்னர்-ஆம்**
**எல்லாரும் இந்நாட்டு மன்னர்-வாழ்க**
(பாரதியார் கவிதை, ப.135)

என்று பாடினார் பாரதி. இதனைத்தான் குலோத்துங்கன் பாரதியைப் பற்றிக் கவிதை புனையும் போது,

**நிறம் கடந்து, மொழிகடந்து பிறந்து வாழ்ந்த**
**நிலம் கடந்து மதம் கடந்து மானிடத்தின்**
**திறம் நினைந்து பாடியவன்; புதிய காணும்**
**சிந்தனையில் பலயுகத்தைச் சேர்த்துக் கண்டோன்**
(கு.க., ப.608)

என்று புனைந்துள்ளார். இது போன்று பாரதியின் பல திறத்தை மிகவும் எதார்த்தமாக, ஆழமான உணர்வுப் பூர்வமாகக் கவிதையைப் படைத்துள்ளார். இது தமிழ்க் கவிஞர் மீது குலோத்துங்கன் கொண்டுள்ள பற்றைக் காட்டுகிறது.

### ஈழத் தமிழினம்

கவிஞர் குலோத்துங்கன் இலங்கையில் அழிந்த தமிழ் இன மக்களைக் கவிதையில் மிகவும் துயர உணர்வோடு நம் கண்களைக்

கசங்க வைக்கும் நிலையில் கூறியுள்ளார். 'இருபதாம் நூற்றாண்டுத் தமிழில் இலங்கைத் தமிழர்தம் அவலம்' போன்ற நெஞ்சு நெகிழ்விக்கும் பாடுபொருள் வேறில்லை. கரும்புத்தோட்டத்திலே தமிழ் மாதர் கலங்கித் துடித்ததனைக் கண்ணீர் ஓவியமாக்கினான் கவிஞன் பாரதி. அந்தத் துயர் பன்மடங்காகப் பெருகி நாள்தோறும் செய்தித்தாளில் ஈசல் மடிந்து விழுவது போல் இனப்பூசலில் தமிழர்கள் கருகிச் சாகக்கண்டு நெஞ்சு குமுறி ''யாது செய்தோம்! யாது செய்தோம்!'' எனத் துடித்தெழுந்து கவிதை முரசுகொட்டி ஆர்த்தனர் கவிஞர் பலர். குலோத்துங்கன் இவர்களில் குறிப்பிடத் தக்கவர் மட்டுமல்லர். ஒரு பேரவலத்தைச் சொற்சித்திரமாக்கி அவலத்தைப் பிழிந்து ''ஐயகோ செய்வதற்கு ஒன்றுமில்லையே'' என நம்பிக்கை வறட்சியில் இக்கவிஞன் குரல் ஒலித்து நிற்கவில்லை'' என்கிறார் கு.வெ. பாலசுப்பிரமணியன்.

**ஈழத்தைப் பார்க்கின்றேன்; என்னி னத்தை**
**எரியுண்ணும் கொடுமையினும் எனது நெஞ்சின்**
**ஆழத்தைச் சுடும் ஒன்று; மானுடத்தின்**
**ஆத்மாவின் தரம் தாழ்ந்த அவலம் அம்மா!**

**வரலாறு காணாத புன்மை கண்டும்**
**வாய்திறவாச் சாதியினை மதிப்பனோ நான்**
**உரமேது; தீமையின்முன் ஊமையாகி**
**ஒதுங்கிடும் இவ்வுலகத்திற் கொழுக்கம் ஏது?**

**வல்லரசென் றமைந்தவர்கள்; உரிமை கோடி**
**வாய்கிழியப் பேசியவர், மற்றோர் எல்லாம்**
**புல்லரினும் புல்லர்சிலர் மனிதம் கண்ட**
**புனிதம் எலாம் மாய்ப்பதனைப் பொறுப்பதாயின்**

**காப்பதற்கென்று ஏதுவுமில்லை; வெறுத்து நீக்கும்**
**களங்கமென ஒன்றுமிலை; கலையும் பண்பும்**
**மூப்படைந்து பெறுவதிலை; மனிதர்பேசும்**
**முன்னேற்றம், நாகரிகம் முழுதும் பொய்; பொய்**

(கு.க., ப.619)

என்று கவிஞர் ஈழத்தமிழர் படும் வேதனையைக் கூறி நாகரிகம் என்பது போலித்தனமான பொய், பொய் என்கிறார். மேலும் கவிஞர் உலக நாடுகளைப் பார்த்து ஒரு வினாவை முன்வைக்கிறார். அதனைக் கவிஞர்,

**கொலை வெறியர்; பேய்த்தனத்தர்; கொடியர் ஆட்சி**
**கூட்டாக ஏற்பீரோ வளர்ந்த நாட்டின்**
**தலைவர் எனும் பெரியீர்காள், நீவிர் பேசும்**
**தருமங்கள், தத்துவங்கள், சடங்கு தானோ?** (கு.க., ப.619)

என்கிறார். பொதுவாக இலங்கையில் நடைபெற்ற ஈழத் தமிழர் உரிமைப் போரைப் பற்றி வளர்ந்த நாட்டினர் பேசியவை எல்லாம் வெறும் தத்துவங்களாக மட்டும் போய் விட்டன. அது வீணான சடங்கான பேச்சாகவும் போனது என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் மன வேதனையோடு தம் கவிதையில் முன்வைத்துள்ளார். இது கவிஞர் தமிழ் இன்த்தின் மீது வைத்துள்ள பற்றைக் காட்டுகிறது.

## மனிதம் எரிகிறது

கவிஞர் குலோத்துங்கன் ஈழத் தமிழர்களைப் பற்றிக் கொதித்தெழுந்து கவிதை படைக்கிறார். குலோத்துங்கன் கவிதைகள் குறித்துக் கார்த்திகேசு சிவத்தம்பி அவர்கள் மிக நீண்ட முன்னுரையை வழங்கியிருக்கிறார். அதில் ஈழத் தமிழர்கள் பற்றிய கவிதையைக் குறித்துக் கருத்துரைத்தபோது ''இந்தக் கவிதைத் திரட்டில் வரும் ஈழத் தமிழர் இன்னற்பாடுகள் பற்றிய கவிதைகள் இந்த வரையறைகள் யாவற்றையும் கடந்து, தமிழ் ஆத்மாவின் ஓலமாக மானுடத்தின் கையறு நிலைக் கதறல்களாக வெளி வந்துள்ளன'' என்று கருத்துரைக்கிறார். இக்கூற்று கவிஞர் குலோத்துங்கன் கவிதைகளுக்கு மிகவும் பொருந்தி வருகிறது. குறிப்பாக 'மனிதம் எரிகிறது' என்கிற கவிதையில்

**கனவெல்லாம் ஈழத்தின் அவலக் காட்சி;**
**கண் விழித்தால் உயிர்பற்றி எரிவதே போல்**
**மனமெல்லாம் வேகிறது; கயவர் செய்கை**
**மனிதத்தை எரிக்கிறது; வையம் காணா**

**ஈனத்தின் ஈனத்தின் ஈனம்; ஆட்சி**
**ஏற்றவர்தம் கொலைவெறியின் கோரக் கூத்து,**
**சாணத்தில் நெளிகின்ற புழுவும் கூடத்**
**தாங்காது துடித்தெழும்பும் கொடுமைச் செய்கை**

**கயமையின்கால் மிதியின் கீழ் மனித சாதி**
**கதறுவதும் புதிதல்ல எனினும் ஆள்வோர்,**
**புயவலியே தம்குடியை ஊர் ஊராகப்**
**பொசுக்குவது சரிதமிலாப் புன்மை புன்மை** (கு.க., ப. 621)

என்று கருத்துரைக்கிறார். இது போன்ற நிலையில் மக்கள் வெந்து தணியும் போது உலக நாடுகள் எதுவும் செய்யாமல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தன என்பதை வேதனையோடு கவிதையில் பதிவு செய்துள்ளார்.

**தீயணைக்கும் படைபோல விரைந்து சென்று**
**சிறுமையிதைத் தடுக்காமல் வையம் முற்றும்**
**வாயடைத்து நிற்கிறதே! மனிதமே நின்**
**மனச்சாட்சி என்பதெலாம் மாயை தானோ!** (கு.க., ப.621)

என்று மனிநேயத்தையும், உலக நாடுகளின் மனச் சாட்சியையும் மாயை என்று கூறுகிறார். இதே வேதனையைத் 'தீயே எரிவது தெரிகிறது' என்னும் கவிதையிலும் உருக்கமாகப் பதிவு செய்கிறார்.

**ஈழம் பற்றி எரிகிறது-தமிழ்**
**இனமே அங்கு அழிகிறது**
**ஆழம் மிகுந்த கடல் நீர்- ஈழவர்**
**அழுகையின் வெம்மையில் கொதிக்கிறது.**

**கொடுமையிற் கொடுமை வளர்கிறது-தமிழ்க்**
**குலமே கொலையில் மடிகிறது**
**சுடுபவர் இல்லை; அழுகும் பிணம்-அதைச்**
**சொல்வதும் நெஞ்சைத் துளைக்கிறது** (கு.க., ப.622)

ஈழம் எரிந்தபோது இக்கவிதையை மக்களின் நெஞ்சை உலுக்கும் வகையில் படைத்தளித்துள்ளார். ஈழத் தமிழர்களின் அழிவை இதனைவிட வேறு யாரும் நெஞ்சைத் துளைக்கும் வகையில் பதிவு செய்திருக்க முடியாது. தமிழ் இனத்தின் மீதான தாக்குதலை யாரும் தடுத்து நிறுத்த முன்வரவில்லை என்பதை இது போன்ற கவிதைகள் வரலாறாக இருந்து விளக்குகின்றன.

மேலும் 1985இல் கவிஞர் ஈழத் தமிழினத்தின் துயரைக் கண்டு அவர்களின் துயருக்கு எல்லை இல்லையோ எனக் கவிதையை இயற்றியுள்ளார்.

**காலைச் செய்தியைப் பார்க்கவும் கூசினோம்**
**கண்ணின் முன்னுள வானொலி தொட்டு யாம்**
**மாலைச் செய்தியைக் கேட்கிலம்; ஈழவர்**
**மண்ணின் சோகம் மனங்கொள அஞ்சினோம்**

என்கிறார். ஏன்? அஞ்சினோம் என்பதற்கான காரணத்தையும் கவிஞர்

தம் கவிதையின் தொடர்ச்சியில் மிகவும் தெளிவாக அன்றைய ஈழத்தமிழர்களின் கொடுமையை எடுத்துக் கூறியுள்ளார்.

**எம்மினத்தவர் நாள்தோறும் நாள்தோறும்**
**ஈனர் யாவரின் ஈனர்தம் ஆட்சியில்**
**தம்முயிர்ப் பிணம் தாங்கும் சவக்குழி**
**தாம் சமைத்தபின் சாய்வதும் மாய்வதும்**
**மானிடத்தின் அரும்பெனும் பாலகர்**
**வாழை யீன்றுள கன்றெனும் மாணவர்**
**கானிடைத் திரிநாயினும் கீழர்தம்**
**கையில் நாள்தோறும் நாள்தோறும் மாய்வதும்**
**மாதர் கற்பினை மண்ணிடைச் சாய்ப்பவர்**
**மானம் நாணம் துறந்த புன் கோழையர்**
**காத கர்பிறர், கண்ணுற வன்மையிற்**
**காமம் மூழ்கிடும் கற்புத் கொலைஞர் பால்**
**செந்தமிழ்க் குலமாதர்கள் நாள்தோறும்**
**திருவி ழப்பதும் எங்ஙனம் தாங்குவோம்;**
**வெந்தழல் தனில் அங்கமும் ஆவியும்**
**வேவ தென்றிடும் வேதனை மிஞ்சயாம்**
**பொங்கி நெஞ்சம் புழுங்கி ழிந்தனம்;**
**புன்மை புன்மை இப்புன்மையை வையகம்**
**எங்ஙனம் பெறுகின்றதோ?** (கு.க., ப. 624-635)

என்று கண்ணீர் மல்க ஈழவர்களின் துயரங்களை உள்ளது உள்ளவாறாக கவிஞர் அப்படியே பதிவு செய்துள்ளார்.

## அகதிகளான தமிழர்களின் நிலை

இது போன்ற துன்பங்கள், துயரங்கள் ஒரு புறம் இருக்க, ஈழத்தின் மண்ணை விட்டு நீங்கி அங்கு நடைபெறுகின்ற கொடுமைகளுக்குப் பயந்து தமிழர்கள் தங்கள் சொந்த நாட்டை விட்டு வேறு நாடுகளுக்குப் புலம்பெயர்கின்றனர். அவர்களின் துயர நிலையைக் கவிஞர் குலோத்துங்கன் கவிதையில் பதிவு செய்துள்ளார்.

**அகதிகள் என்றொரு புதுஇனம் மண்ணில்**
**அவதரித்ததடா-சிறு**
**சகதியின் புழுவினும் மானிடம் தாழ்ந்ததன்**
**சாட்சிக் கூட்டமடா!**

கறுப்பு, வெள்ள, பின் தோல் நிறம் யாவையும்
கலந்த கூட்டமடா-இது
வெறுப்பை நாள்தோறும் விதைக்கும் தீயர்கள்
விளைத்த கொடுமையடா!

கானிடை நடமாடும் விலங்கொன் றகதியாய்
கண்ணீர் விட்டதிலை-விரி
வானிடை உலவிடும் புள்ளினம் அகதியாய்
மண்ணிடை அலையவிலை! (கு.க., ப.575)

அகதிகளின் கண்ணீர் வேதனையைக் கவிஞர் மிக வருத்தத்தோடு கவிதையாக்கியுள்ளார். மேலும் அகதிகளின் அச்சத்தைக் கவிஞர் கூறும் போது,

மறவர்கள் ஏவிய நாயிடம் தப்பிய
மானென ஓடுகிறார்-தினம்
இரவிலும் பகலிலும் ஊன்உயிர் ஒடுங்க
இறந்து பின் பிழைக்கின்றார் (கு.க., ப.575)

என்று அவர்களின் அச்சம் கலந்த வாழ்வைக் கவிஞர் கவிதையில் வடித்துள்ளார். பொதுவாகவே அகதிகளுக்கான வாழ்வியல் பிரச்சினை என்பது பலவாறாக உள்ளது. இலங்கையில் போர் நடந்து கொண்டிருந்தபோது அங்குள்ள மக்கள் பலர் வேறுநாடுகளுக்குச் சென்றனர். அங்கு அவர்கள் சந்திக்கும் பிரச்சினைகளைப் ''புகலிடத்தில் நாம் வாழுகின்ற நாடுகளின் மொழிகளோடு பரிச்சயம் ஏற்படுத்திக் கொள்ள முயலாமை. வாழ்கின்ற நாடுகளின் மக்களின் வாழ்க்கை முறைகளை அறிந்து கொள்ளவோ அன்றி அவர்களுடன் நட்புறவு கொள்ளவோ முயலாமை. உலகில் நமது மொழி தான் உயர்ந்தது. நமது கலாச்சாரம் தான் சிறந்தது,'' என்று அகதிகள் நினைத்துக் கொண்டு இருப்பதாக உமாகாந்தன் பதிவு செய்கிறார். இது போன்று பல சிக்கல்கள் அகதி மக்களுக்கு உண்டு. அந்தச் சோகத்தைத்தான் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதைகளில் பதிவு செய்துள்ளார்.

மேலும் அகதிகளின் நிலையைக் குறிப்பிடும் போது வேதனையைக் கவிதை முழுவதும் படைத்துள்ளார்.

வாழ்ந்த கூரையை நீங் கினம்; விரி
வானம் மண்ணிடை வாழ்ந்தனம்
ஆழ்ந்த நெஞ்சிடை ஆழ்ந்த எம்நில
ஆசையால் துயர் ஆற்றினம்.

**பெற்ற மண்ணையும் நீங்கினம்; தமிழ்**
**பேசும் எல்லைகள் தாண்டினம்**
**சுற்ற மென்பவை அற்று வெம்புயல்**
**தோணி போல் அலை கின்றனம்**

**ஏதும் ஊர் என எவரும் கேள் என**
**எங்கள் முந்தையர் கூறினர்**
**ஏதும் உரியை; எவரும் கேளிலை**
**ஏங்கி ஈழவர் மாய்கிறோம்**

**அயலகத்தினில் அகதியாக யாம்**
**அழிகிறோம் ; மடிகிறோம்**
**துயர வெம்மையின் உச்சி இன்றுயாம்**
**சொந்த மண்ணிலும் அகதிகள்** (கு.க., ப.628)

என்று அகதிகள் பேசுவதுபோன்று கவிதையை இயற்றியுள்ளார். தமிழர் தமிழினம் குறித்துக் குலோத்துங்கன் தம் கவிதைகளில் குறிப்பிட்டுள்ள கருத்துக்கள் எல்லாம் உண்மையான அக்கறையின் வெளிப்பாடாகும். அவற்றைத்தான் இப்பகுதி எடுத்தியம்பியுள்ளது.

குறிப்பாகக் கவிஞர் குலோத்துங்களின் ஈழத் தமிழினம் பற்றிய கவிதைகளில் காணப்படும் சிறப்புகள் கவனத்தில் கொள்ளத் தக்கன என்று கு.வெ. பாலசுப்பிரமணியம் கூறுவன:

1. கவிதை எழுத வேண்டும் என்று நினைத்து அவர் ஈழத்து அவலத்தைப் பாடுபொருளாக்கிக் கொள்ளவில்லை. நிகழ்ச்சிகளின் துயரம் அவருடைய உள்ளுணர்வைப் பீறிட்டு இப்பொருளைப் பாடச் செய்திருக்கிறது.

2. என் இனம், தமிழரினம் என்று அவர் குறித்தாலும் ஆணவக் கொடுங்கோன்மையின் நச்சுப்பிடியுள் சிக்கி உயிரிழக்கும் மனிதர்களை விடுவிக்கும் உலகம் தழுவிய மனிதர் குரலாகவே அவர் கவிதை வெளிப்படுகிறது.

3. அரசியல், சமூகம், வட்டாரம் என்ற எல்லைகளைத் தாண்டிய ஒரு பிரபஞ்சப் பெருந்துயராக ஈழத்தமிழர் துயரம் காட்டப் பெற்றிருப்பது இக்கவிதைகளின் சிறப்பாகும்.

என்கிறார் கு.வெ.பா. மேலும் ஒட்டுமொத்தமாகத் தமிழர், தமிழ்மொழி குறித்து ஆதங்கத்தைத் தம் கவிதையில் குலோத்துங்கன் வெளிப்படுத்தியுள்ளார்.

# 4. மானுடச் சிந்தனை

கவிஞர் குலோத்துங்கன் கவிதைகளில் பெரும்பான்மையான கருத்துக்களை மனிதச் சிந்தனையை மையமிட்டதாகப் படைத்துள்ளார். மனிதன் வாழும் முறையில் வாழ்வியலில் செய்ய வேண்டிய செயல்கள் போன்றவற்றைக் கூறுகிறார். பொதுவாக மனிதனின் சிந்தனைகளை எல்லாப்படைப்பாளர்களும் படைத்துள்ளனர். ஆனால் சிலரது படைப்புகளில் மனிதனின் வாழ்க்கை மேம்பாடு குறித்த செய்திகள் மிகுதியாகக் காணமுடிகின்றன. அவற்றில் குலோத்துங்கன் கவிதைகளில் மனிதச் சிந்தனை என்பது அவனின் மேம்பாட்டிற்கான வழியாக உள்ளது. மேலும் மனிதனின் அறிவினைப் பெருக்கும் வகையில் குலோத்துங்கன் கவிதைகள் அமைந்துள்ளன. **''பாரதியார் தேசியக் கவிஞர் என்றால், பாரதிதாசன் புரட்சிக் கவிஞர் என்றால், கவிமணி குழந்தைக் கவிஞர் என்றால், நாமக்கல் கவிஞர் காந்தியக் கவிஞர் என்றால், சுரதா உவமைக் கவிஞர் என்றால், காசி ஆனந்தன் உணர்ச்சிக் கவிஞர் என்றால், குலோத்துங்கன் ஆய்வறிவுக் கவிஞர் ஆவார்''** என்று பேராசிரியர் இரா.மோகன் குறிப்பிடுகிறார். குறிப்பாகக் கவிஞர் குலோத்துங்கன் மானிடத்தின் எழுச்சியையும், விழிப்புணர்வையும் இக்கவிதையில் முதன்மையாகக் கொண்டு கவிதை படைத்துள்ளார். மனிதன் வாழ்வதற்கான வழிமுறைகளையும், அவனின் வாழ்வியல் உயர்வுக்கான காரணங்களையும் கவிஞர் பல்வேறு கவிதைகளில் கூறியுள்ளார்.

## மனிதன்

மனிதன் யார்? என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் மிக நேர்த்தியாகத் தம் கவிதையில் பதிவு செய்துள்ளார். மனிதன் என்பவன் எட்டடி உயரமுள்ள வடிவினன் என்று கூறிக் கவிதையைத் தொடர்ந்து நகர்த்திச் செல்கிறார்.

**மானிடர் எண்சாண் மெய்யின்**
**வடிவினர்; மானிடசக்தி**

**ஊனுடன் நிற்ப தல்ல;**
**ஊன் கடந்து உடலும் மிஞ்சி**
**அண்டமும் பரவி நிற்கும்**
**ஆழ்மன விசுவம் தன்னுள்**
**கொண்டது மனிதம்; வையக்**
**கோவிலின் தலைவன் மாந்தன்** (கு.க., ப.139-140)

என்கின்றார். இந்த உலகத்தின் தலைவன் மனிதன் ஆவான் என்பது கவிஞரின் கூற்றாக அமைகிறது.

மேலும், மனிதம் என்பது முயன்று வாழ்க்கையில் உயர்வதாகும் என்பதை ஒரே வரியில் ஔவையின் ஆத்திசூடி போல, 'நிமிர்ந்து நின்று முயல்வது மனிதம்' (200) என்கிறார். மனிதன் முயற்சி செய்ய வேண்டும் என்பதையும் அவன் தான் மனிதன் என்பதையும் நாசுக்காகக் கவிஞர் கூறியுள்ளார்.

இறையன்பு தம் படைப்பில் 'முயற்சி செய்தால் எதுவும் முடியும் அயற்சி அடைந்தால் அனைத்தும் மடியும்' என்று **மென்காற்றில் விளைசுகமே** என்ற நூலில் குறிப்பிடுகிறார். அதுபோல மற்றொரு நூலில் 'மனிதன் தொடர்ந்து இயங்கிக் கொண்டே இருக்க வேண்டும் அது அவன் ஆயுளையும் ஆற்றலையும் நீடிக்கச் செய்யும்' என்கிறார். கவிஞர் குலோத்துங்கனும் இதே சிந்தனையைக் கவிதையில் கவிநயத்தோடு கூறியுள்ளார். அதாவது மனிதன் தெய்வமாகவும் சிந்தனையும் திறமையும் நலமாக இருக்க வேண்டும் என்கிறார்.

**கடவுளும் தேவரும் யாமெனும் சொல்லில்**
**கற்பனை, மடமை, மின் கர்வம் ஒன்றில்லை;**
**திடமுடன், குவிந்த சிந்தையும், செயலின்**
**திறமும் சேர்ந்தார் தெய்வமு மாவோம்** (கு.க., ப.205)

என்கின்றார். குறிப்பாகக் கவிஞர் குலோத்துங்கனின் பார்வையில் மனிதன் என்பது முயற்சியின் விளைவால் உருவாகிறவன் என்கின்ற தத்துவத்தைக் காணமுடிகிறது. அந்த வகையில் மதிவளம்தான் மனிதனின் செல்வம் என்னும் கருத்தியலைக் கொண்டவராகக் கவிஞரை அறிந்து கொள்ள முடிகிறது.

### முயற்சி

மனிதன் வாழ்வில் முன்னேற்றம் காணுவதற்கு அடிப்படை முயற்சி ஆகும். 'ஒட்டுமொத்தமான மனித இனமாம் சரி

தனிமனிதனாயினும் சரி முன்னேற்றம் என்பது முயற்சியினால் மட்டுமே கிடைக்கக் கூடியது' என்கிறார் பேராசிரியர் திருமலை. இக்கூற்றுக்கேற்ற கருத்துகளைக் குலோத்துங்கன் கவிதைகளில் காணமுடிகின்றது.

'பித்தனும் வேண்டும்' கவிதையில் கவிஞர் முயற்சியைப் பற்றிக் கூறும் போது

**அடிவாரத்தினில் ஆயிரம் ஆண்டின்**
**அனுபவம் வேண்டேன்;**
**அரைநொடி யேனும்**
**முடியே அடைவேன்; முதலாய் நிற்பேன்;**
**மூச்சுள வரையும்**
**முன்செ முயல்வேன்** (கு.க., ப.83)

என்று கவிதையைப் படைத்துள்ளார். முயற்சியுடையார் இகழ்ச்சியடையார் என்னும் கருத்தை முன் நிறுத்தியே கவிஞர் 'மூச்சுள்ளவரையும் முன் செல முயல்வேன்' என்னும் வரியைச் சீர்மை செய்து மனிதர்களுக்கு வழங்குகிறார்.

மனித இனத்தை முன்னேற்றப் பாதையில் இவரது கவிதைகள் அழைத்துச் செல்கின்றன. மேலும் மனத்திற்குக் கட்டளை இடுவது போலக் கவிதையில்,

**செல்வாய்! மேலும்**
**செல்வாய்! எதிர்ந்தன**
**வெல்வாய்! ஓயுதல்**
**வேண்டா! மனமே!** (கு.க., ப.123)

என்று கூறுகிறார். மேலும் முயற்சியை மக்களிடத்தில் நம்பிக்கையாக விதைக்கிறார். அவரது கவிதைகளைப் படித்தபின்பு சோம்பல் வெகுதூரம் சென்று விடும்.

**எங்கள் கையில்**
**விளக்கைக் கொடுங்கள்**
**எங்கும் நிறைந்துள்ளது**
**இருட்டென்று கூறாதீர்**
**இருள் தாண்டும் வரை**
**நாங்கள் தொடர்ந்து நடப்போம்** (கு.க., ப.137)

என்று மனிதன் முன் செல்கின்ற வித்தையைக் கூறுகிறார். ‘முயற்சி பற்றிய குலோத்துங்கனின் கருத்துக்களை அவரது கவிதைகளின் வழிநின்று தொகுத்துக் காணலாம். பொதுவாகத் திறனாய்வு பற்றிக் கூறும்போது முரண்சுவை தோன்றுமாறு ஒரு கருத்து கூறப்படுவதுண்டு; ஒரு படைப்பாளி தன் படைப்புகளில் அரிய சிந்தனைகளை மன்றத்துப் பொதிந்து வைக்கிறான். ஒரு திறனாய்வாளரின் பணி அவ்வாறு மறைந்து வைக்கப்பட்ட அரிய சிந்தனைக் கருவூலங்களை முயன்று வெளிக்கொணர்வது தான். மறைத்து வைப்பதும் வெளிக்கொணர்வதுமான இலக்கியம்தான் இலக்கியப் படைப்பு இலக்கியத் திறனாய்வின் அடிப்படைகள்’ என்று திருமலை கூறுகிறார். இது பொருத்தமானதாகவே உள்ளது.

**இயலும் என்பவர்க் கெதுவும் அரிதல**
**எழுந்து நிற்பவர்க்(கு) இமயம் தடையல**
**முயலும் மானிடன் முடிவு காணுவன்**
**முன்னர் தோற்பினும் பின்னர் வெல்லுவன்** (கு.க., ப.136)

என்று முயற்சியைக் கூறும் கவிஞர் குலோத்துங்கன் ‘மனம் துணிந்ததை வாழ்வு கண்டிடும்’ என்கிறார். ‘மனிதன் வாழ்வில் முயற்சி செய்தால் எல்லாவற்றையும் வென்றிடலாம்’ என்கிறார்.

## முயற்சி தோற்காது

முயற்சி செய்கிறவர்களுக்கு வெற்றிதான் கிடைக்கும். மாறாகத் தோல்வி என்பது ஏற்படாது என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் குறிப்பிடுகிறார்.

**புதுக்கலை**
**படைக்க மானிடனே -உனக்கொரு**
**மூலம் கிடைத்திலதோ-மனிதன்**
**முயற்சி தோற்பதுண்டோ?** (கு.க., ப. 149)

என்று வினா எழுப்புகிறார். இதே கருத்தைத்தான் மற்றொரு கவிதையிலும் கவிஞர்,

**வளர்ச்சிக் கொள்கை**
**சூழ்வதும், சூழ்ந்த பாதை**
**தொடர்வதும் துணிந்த மக்கள்**
**தாழ்வதொன்றில்லை; இந்தத்**
**தத்துவம் பொய்ப்ப தில்லை** (கு.க., ப. 201)

என்று குறிப்பிடுகிறார். அதாவது எச்செயலையும் துணிந்து செய்ய வேண்டும். அதனை விடுத்து யோசித்துக் கொண்டேயிருப்பது வெற்றிக்கு வழிவகை செய்யாது, என்கின்ற தத்துவத்தைக் கவிதையில் எடுத்துரைக்கிறார்.

மேலும் முயற்சி இருந்தால் எதனையும் வெற்றி கொள்ளலாம். தோல்வி என்பது இல்லை என்கிறார். இதற்குக் கவிஞர் குலோத்துங்கன் படைத்துள்ள மிகத் தெளிவான கருத்துரை கூறுகிறது.

'முயற்சியுண்டெனின் முழுமை காணுவம்', என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில்

**பயிற்சி இன்றெனின் பண்படல் இல்லை; நன்**
**முயற்சி இன்றெனின் முழுமை காண்கிலம்**
**பூரணம் எனும்நிலை பூமிக் கிலையெனக்**
**காரணம் காரியம் காட்டுவார்க் குரைப்பேன்**
**நெடுகரம் மீறினும், நெஞ்சின் கனவுகள்**
**தொடுவதற் கெட்டாத் தூரமொன் றில்லை**
**கனவென ஒருபொருள் கருப்பெறு மாயின்**
**நனவென அதுபெறும் நாள்தொலை வில்லை**
**பயிற்சி, கல்வி எம் படை எனக் கொண்டோம்**
**முழுமை யுண்டெனின் முழுமை காணுவம்** (கு.க., ப. 235)

என்று முயற்சியின் பயனைக் குறிப்பிடுகிறார். முயற்சியைப் பற்றிக் கவிஞர் குலோத்துங்கன் வேறுபட்ட கோணத்தைக் கவிதையில் கூறுகிறார். இக்கவிதையைப் பற்றிப் பேராசிரியர் திருமலை கருத்துரைக்கும் போது இது ஒரு முத்திரைக் கவிதை என்கிறார். மேலும் 'அறிவியல் ஒரு போதும் அனுமானப் பரிமாணத்தில் செல்வதில்லை; அனுமானங்களைத் தக்க முறைகளில் தக்க கருவிகளின்வழி சோதித்தறிவதே அதன் பணி. எனவே சாட்சிப் பிரமாணம் அறிவியலின் அடிப்படை. இக்கவிதை வரிகளில் ''பயிற்சி, கல்வி எம்படை எனக் கொண்டோம்'' என்று கருவிகளைக் கவிஞர் முதன்மைப்படுத்தியுள்ளமையைக் காணலாம்.

இக்கவிதையில் மிக உள்ளடங்கிய முறையில், அதே சமயம் மிக உறுதியான குரலில், மனித முயற்சிக்குத் தடையாக இருக்கும் அனைத்து மூடநம்பிக்கைகளையும் தத்துவச் சாத்தியங்களையும் மறுத்துரைத்து முன்னேறிச் செல்லும் கவிஞரின் ஆளுமையை

உணர முடிகின்றது. ஒரு முதல் வாசிப்பில் இக் கவிஞரின் ஆளுமையை உணரவியலாது; வாசிப்புக்கும் பின்னர் நிகழும் அசை போடுதலில்தான் கவிதையின் முழுமையான சிறப்பை உணர முடியும். இத்தகைய உறுதிமிக்க நிலைப்பாடுடைய கவிதையில் எந்த இடத்திலும் மிகுந்த சொற்களோ, முழக்கங்களோ இல்லை என்பது தான் இக்கவிதையின் சிறப்பு' என்கிறார்.

## முயல்வோம் செயல் முடிப்போம்

ஒரு செயலை முடியாது என்று கூறுவதை விட முயற்சி செய்து முடிக்க வேண்டும். முடியாது என்பது முட்டாள்களின் செயல் என்கிற கருத்தமைப்பில் கவிஞர் கவிதையைப் படைத்துள்ளார்.

**நாளை, மறுநாள் இந்**
**நலி வனைத்தும் தீருகின்ற**
**வேளை வருமென்று**
**வேதாந்தம் பேசுகிறீர்**
**தானாக ஏதும் இந்தத்**
**தரணிவந்து சேர்வதிலை**
**ஊனாலும், நெஞ்சின்**
**உரத்தாலும், கொள்கைனும்**
**திண்மையினால் வேரோடு**
**சிறுமையெலாம் தீய்ப்பதெனும்**
**உண்மையினால் அல்லாது**
**உயர்வெதும் காண்பதில்லை**
**கையில் கொடியொன்று தாங்கியொரு**
**கூட்டமேன், கூக்குரலேன்**
**முடிவொன்று காண்போம்**
**முயல்வோம்; பணிமுடிப்போம்** (கு.க., ப. 239)

என்று முயற்சியினால் நாம் பணியை முடிக்க வேண்டும் என்பதைக் கவிதையில் தெளிவுபடுத்தியுள்ளார். இக்கவிதையில் திடமான மனம் வேண்டும் என்கிற சிந்தனையை முன்வைக்கிறார். மாறாக வீணாகப் பேசுவதால் ஒரு பயனும் ஆவதில்லை என்பதைக் கவிதையில் கவிஞர் குலோத்துங்கன் பதிவு செய்து வைத்துள்ளார்.

இந்த வகையில் முயற்சி குறித்துக் கவிஞர் வள்ளுவரைப் பின்பற்றி,

**தெய்வத்தால் ஆகதெனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும்**

என்னும் குறளின் கருத்திற்கிணங்க தம் கவிதைகளைப் படைத்துள்ளார். இவையெல்லாம் மானிடர்களுக்குக் கவிஞர் தரும் கருத்துக்கள் ஆகும்.

## உழைப்பின் பயன்

உழைப்பின் பயனைக் குறித்துக் கவிஞர் தமது கவிதையில் வித்தியாசமான முறையில் கருத்துக்களை வெளிப்படுத்துகிறார். இயற்கையைப் பார்த்து மிகப் பெரிய பொருத்தமான கேள்வியைக் கேட்கிறார். கேள்வியிலேயே மனித இனத்திற்கான கருத்துக்களையும் வெளியிடுகிறார்.

**இயற்கை அன்னையே!**
**தன்னையும் வருத்தி, தாழாது உழைத்து**
**உன்னையும் வருத்தினால் தானே உதவுகிறாய்**
**இது உன் குணமா அல்லது கொள்கையா?**

**பாய் போல விரிந்தும், படர்ந்தும் இருக்கும்**
**தாய் நின்னுடைத் தங்க மேனியை**
**மேழி கொண்டு கீறினால் தானே**
**விளை நில மாகிறாய்?**

**நடுங்கும் வரையும் நனைந்தால் தானே**
**நன்செய் ஆகிறாய்?**
**ஊற்று நிரை ஒளித்துவைத் திருக்கிறாய்**
**தோற்றுதல் என்னவோ தோண்டினால் தானே?**

**ஆற்றல் சேர் நிலக்கரி, அணி செய் தங்கம்**
**இவற்றை**
**எட்டுதற் இயலா இடத்தில் அல்லவா**
**இருப்பு வைத்து இருக்கிறாய்? உனை**

**வெட்டு பவர்க்கே வேண்டுவ தருகிறாய்**
**அணுவினால் உலகை ஆக்கியாய்; அஃதெம்**
**கையிலா கிடைக்கிறது? கண்ணுக்கா தெரிகிறது?**
**அளப்பதற்கிலா ஆற்றலை அணுவுள் வைத்தாய்**

**பிளப்பவர் தாமே பெறலாம் என்கிறாய்?**
**அன்னையே**
**இது உன் குணமா? அல்லது கொள்கையா**

இயற்கையைப் பார்த்து இவ்வளவு வளமும் உன்னிடம் இருக்கிறது; அதனை எல்லாம் உழைப்பவர்க்குத்தான் கொடுக்கிறாய் என்று கூறுவதாகக் கவிதையைப் படைக்கிறார். இயற்கையான பூமிக்குள் வளங்கள் இருக்கின்றன. ஆனால், அவற்றை உழைப்பினால் மட்டுமே பெறமுடியும் என்பதைக் கவிஞர் மறைமுகமாகக் கவிதையில் குறிப்பிடுகிறார்.

## மனிதச் செயல்பாடு

மனிதனின் செயல்பாடுகள் குறித்துப் பல நூல்கள் கருத்துரைக்கின்றன. ஆனால் மனிதன் என்ன செய்ய வேண்டும். இந்த உலகம் மாற்றம் காண்பதற்கு மனிதனின் செயல்பாடுகள் எவ்வாறாக இருக்க வேண்டும் என்பதைக் கவிஞர் கூறுகிறார்.

**ஏற்றபணி எதுவெனினும்**
**முழுமையாக**
**ஈடுபட்டுச் செயலாற்றும்**
**இயல்பு கொண்டோம்;**

**தோற்றறியோம் துணிவுள்ளோம்**
**பிறரை அண்டித்**
**துவண்டதில்லை; பயன்நாடித்**
**துதித்த தில்லை** (கு.க., ப. 209)

என்கிறார். மனிதன் தான் எடுத்துக்கொண்ட வேலையில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். இது மனிதச் செயல்பாடுகளில் முக்கியமானது என்பதைக் கவிஞர் கூறுகிறார். பொதுவாகக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதைகளில் வெளிப்படையாக, நேரடியாகக் கருத்துக்களைச் சொல்கிறார். 'தமிழகத்து, தமிழ்க் கவிதை, நேரடியாகக் கருத்துக்களைச் சொல்வதினால் அதனது கவித்துவம் மோசம் போய்விடப் போவதில்லை என்று பரவலாக உணர்கிறபோது, அது அடுத்த கட்டப் பாய்ச்சலுக்குத் தயாராகி விடுகிறது. தன்மேல் கட்டப்பட்டிருக்கும் மாயைகளின் சுமை குறைகிற போது அது வாழ்க்கையின் அன்றாடச் செயல்பாடுகளில் ஒன்றாக மாறிவிடுகிறது. எனவே, வாழ்க்கையைப் போல் கவிதையும் உயிர்த்துடிப்புள்ளதாக மாறிவிடுகிறது' என்கிறார் இந்திரன். இந்த விமர்சனக் கருத்து குலோத்துங்கன் கவிதைகளுக்கும் பொருந்தும்.

மனிதச் செயல்களைப் பற்றிக் குறிப்பிடும் குலோத்துங்கன் ‘தூயதெம் எண்ணம்’ கவிதையைல்

**ஞாயமும் உண்மையும்**
**நாடி நடப்போம்**
**யாவரும் இன்புறும்**
**ஞாலம் சமைப்போம்** (கு.க., ப. 170)

என்று கூறுகிறார். இது மனிதன் உண்மையை நாடிச் சென்றால் புது உலகத்தை உருவாக்க முடியும் என்கிற நம்பிக்கையைக் காட்டுகிறது. மேலும்,

**வளர்வதும் மானிடம்**
**வளர்ச்சிப் பாதையில்**
**அளவையும், துணிவும்**
**ஆய்வும், தவமும்**
**துணையெனக் கொண்டு**
**சூழ்ந்தென தனக்கு**
**இணையவும், தன்பணி**
**ஏற்கவும் படைத்து**
**வென்றது மானிடம்** (கு.க., ப. 122)

மனிதச் செயல்பாடுகளால் இறுதியில் மானுடம் எக்காரியத்தையும் வெற்றி கொள்ளும் என்பதை இக்கவிதை முன்வைக்கிறது.

## மனித அறிவு

கவிஞர் மனித அறிவின் மகத்துவத்தைக் கவிதையாக்கி யுள்ளார். அதாவது உலகத்தில் இருக்கின்ற எல்லாப் பொருள் களையும் மனிதன் தன்வசப்படுத்தி விட்டான். எனவேதான் கவிஞர்

**அலைசூழ் கடல்வானம்**
**யாவும்-எங்கள்**
**அறிவுக்கு வணக்கஞ்செய்**
**பணியாட்கள் அன்றோ?** (கு.க., ப. 106)

என்கின்றார். வள்ளுவர் தம் குறளில் ‘அறிவுடைமை’ என்கின்ற அதிகாரத்தில் 10 குறள்களை அறிவு சார்ந்து இயற்றியுள்ளார். அதில் அறிவினைப் பயன்படுத்தும் முறையைக் குறள் கூறும்போது,

**சென்ற இடத்தால் செலவிடா தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு** (குறள். 422)

என்கிறார். அதவாது, 'மனம் போன வழியில் போகவிடாமல் நன்மையானவற்றில் அதைச் செலுத்துவதே அறிவு' என்று உரை தந்துள்ளார் பரிமேலழகர்.

இத்தன்மையுள்ள அறிவினை வள்ளுவர்,

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு** (குறள். 423)

**எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு** (குறள். 355)

என்று இக்குறள்களின் வழி வெளிப்படுத்தியுள்ளார். இத்தகைய சிறப்பு வாய்ந்தது அறிவு என்பதால்தான் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் 'எங்கள் அறிவுக்கு வணக்கம் செய் பணியாட்கள் அன்றோ?' எனக் கேட்கிறார்.

மேலும் தம் கவிதையில் 'மானுடம் பாடுவேன்' என்கிறார். எங்கும் மனித அறிவினை முதன்மைப்படுத்திக் கவிதையைப் புனைந்துள்ளார்.

**மானுடம் பாடுவேன் யான்**
**மண்ணொடு விண்ணும் தாண்டிச்**
**சூனியம் கடந்தும் அண்டத்**
**தொலைவுகள் துருவித் தேடும்**

**மதியினைப் போற்றுவேன்யான்;**
**வகுத்துள மரணமென்னும்**
**விதியினை வென்று மீளும்**
**வேள்வியும் ஏற்கும் நெஞ்சின்**
**திண்மையைப் பாடுவேன் யான்;**
**திரிபுகள் கடந்த சிந்தை**
**ஒண்மையைப் புகழுவேன் யான்** (கு.க., ப.272)

என்று அறிவினைப் பாடுவேன் எனப் புனைந்துள்ளார். பொதுவாகக் கவிதையில் உணர்ச்சியை மையமாகக் கொண்டு கருத்தை வெளிப்படுத்துபவர் கவிஞர்கள். **''கவிதையென்பது உள்ள உணர்ச்சிகளையும், கருத்துக்களையும் மற்றவருக்கும் எய்துவிக்கும் முழுவன்மை பெற்ற கருவியாகும் எனக் கூறலாம். எண்ணத்தை அல்லது கருத்தை மற்றவருக்கு அறிவிப்பது மொழி. ஆனால், கவிதையோ வெறும் எண்ணத்தையும் கருத்தையும் அறிவிக்கக்**

கூடியது மட்டுமல்ல. அவற்றுடன் உணர்ச்சியையும் கலந்து மற்றவர் உள்ளத்தில் உரம் பெறச் செய்வதாகும். எண்ணத்தை அறிவிக்க மொழி கருவியானால் அச்செயலையே சிறக்கச் செய்ய அமைந்த கருவியே கவிதையாகும்'' என்கின்றார் ந. இராமநாதன். அந்த வகையில் கவிதையில் மானுடச் சிந்தனையைக் கவிஞர் குலோத்துங்கன் மொழியின் வாயிலாகக் கூறியுள்ளார்.

## பாராட்டு

மனித இனம் பாராட்டுதலை மையமாகக் கொண்டுள்ளது. செய்கின்ற செயலை அங்கீகரிப்பது தான் பாராட்டு. ஒரு பணியைச் சிறப்பாகவும், தெளிவாகவும் செய்வதற்குப் பாராட்டு முக்கியமானது எனவே கவிஞர் குலோத்துங்கன் பாராட்டை மிஞ்சிய பதவி இல்லை என்கிறார். பாராட்டைப்பற்றி மிக அருமையானதொரு கவிதையைப் படைத்துள்ளார். முழுக்கவிதையும் பல்வேறான சிறப்புக்களைக் கொண்டு அமைந்துள்ளது.

பாராட்டை மிஞ்சுமொரு
பரிசுமில்லை
பதவி, பணம் எதுவும் அதற்(கு)
இணையு மில்லை
போராட்டம் மிக்கதடா
உலகம் ஊறும்
புத்துணர்வின் கேணியடா
'போற்றும்' சொற்கள்

உத்திகளும் கொள்கைகளும்
உதயம் கொள்ளும்
ஊள்ளத்தின் ஊக்கத்திற்(கு)
ஊட்டம் சேர்க்கும்
சத்துணவு போன்றதடா
மனம் திறந்து
சான்றோர்கள் பாராட்டும்
தகுதிச் சொற்கள்
தக்காரை நெஞ்சாரப்
போற்றும் நாடு
தகுதியினை வளர்க்கின்ற
கழனி

(கு.க., ப.141)

கவிஞருடைய புகழ்ச்சியும், பாராட்டும் நாட்டை வளர்க்கும் என்கிறார்.

## உலகாய்தச் சிந்தனை

கவிஞர் மானுட வாழ்க்கை நெறியைப் பலவாறு தமது கவிதைகளில் கூறியுள்ளார். அவர் மனிதனுக்குச் சில உண்மைகளையும் கூறுகிறார். பொதுவாக உண்மையைச் சொல்பவர்கள் உலகாய்தவர்கள் மட்டும்தாம். இவர்கள், மறுபிறப்புக் கோட்பாட்டிற்கு எதிரானவர்கள். மேலும்,

**'சுவர்க்கமில்லை; மோட்சமில்லை; பரலோகத்தை அடையக்கூடிய ஆத்மா இல்லை; வர்ணாசிரம வாதிகளின் கர்மங்கள் பலத்தைக் கொடுக்க மாட்டா.'**

**அக்னிகோத்திரம், மூன்று வேதம், சன்னியாசம், பஸ்மதாரணம் என்னும் புத்தி, புருஷத் தன்மையற்றவர்கட்கு ஜீவனோபாயமாய்ப் பிரம்மாவினால் சிருஷ்டிக்கப்பட்டன.**

**ஜோதிடமோ யாகத்திற் கொல்லப்பட்ட பசு சுவர்க்கத்தை அடைமேயாயின் யாகம் செய்கிறவன் தன்னுடைய பிதாவை அதில் ஏன் கொல்லாதிருக்கிறான்.**

**இறந்தவனை உத்தேசித்துச் செய்கின்ற சிரார்தம் அவனுக்குத் திருப்தியை உண்டு பண்ணுமாயின் இவ்வுலகத்திலேயும் பிரயாணிகட்குப் பிரயாண சமயத்திற் கட்டுச்சோறு கொடுப்பது வியர்த்தம் (இறந்தவனை எண்ணி அவனது மக்கள் படைக்கும் உணவு, அவனைச் சென்றடையுமாயின், பிரயாணம் செய்கின்றவனை எண்ணி அவன் பொருட்டு வீட்டிலிருந்தே உணவை உண்டால் பிரயாணம் செய்பவனுக்கு அவ்வுணவு எப்படிப் பயன்படாமல் போகும்? எனவே, பயணம் செய்பவன் வழியில் சாப்பிட எடுத்துச் செல்லும் கட்டுச்சோறு பயனற்றதாம்).**

**பூலோகத்திற் கொடுக்கும் பிண்டத்தினால் சுவர்க்கத்தி லிருப்பவர் திருப்தி அடையவார்களேயாயின் மாளிகையின் மீதிருக்கின்றவனை உத்தேசித்துக் கீழ் வீட்டில் இருப்பவன் ஏன் அன்னம் கொடுப்பதில்லை?** என்று வடிவேலுச் செட்டியாரின் சர்வதர்சன சங்கிரகம், நூலின் கருத்தை எடுத்தாண்ட நெடுஞ்செழியன்,

''உலகாய்தர்கள் மறுமைக்குப் பின் ஓர் உலகம் உண்டு என்பதை மறுப்பவர்கள், 'உடல் சாம்பலாகிப் போன பின்னர் அது எங்ஙனம் திரும்பி வருதல் கூடும்' என்று நடைமுறை உண்மையின் மூலம் மக்களைச் சிந்திக்க வைத்தவர்கள்.''

என்கின்றார்.

இவர்களுடைய கோட்பாட்டின் அடிப்படையில் மனிதன் பிறந்த பின்பும் இறந்த பின்பும் எதுவுமேயில்லை என்று கூறுவதாகக் கொள்ளலாம்; இத்தத்துத்தைக் கவிஞர் குலோத்துங்கன் இரண்டே வரிகளில் தம் கவிதையில் கூறியுள்ளார்.

**பிறப்பின் முன்னரும், பிறந்து வாழுநம்**
**இறந்தபின் பின்னரும், எதுவும் காண்கிலம்** (கு.க., ப.41)

என்கின்றார். உலகாய்தர்கள் மிகப்பெரிய கோட்பாடாகக் கூறிய கருத்தினைக் கவிஞர் சுருக்கமாக உலகியல் தன்மையில் கூறியுள்ளார். இவ் இரண்டு வரிகளும் உலகாய்தர்களின் அத்துணைச் சிந்தனைகளோடும் ஒத்துப்போகின்றன. அந்த வகையில் மனித வாழ்க்கை நெறியைப் பெரிய அளவில் கூறிக் குழப்பாமல் மிகச் சுருக்கமாகத் தந்துள்ளார். எனவே இவரை மானுட வாழ்வியல் நெறியின் ஞானி என்று கூறலாம்.

## போலி மாந்தர்

மனிதர்களில் பலதரப்பட்டவர்கள் இருக்கிறார்கள். பொய், போலித்தனம் போன்றவற்றைக் கொள்கையாகக் கொண்டவர்களைக் கவிஞர் தம் கவிதைகளில் சாடுகிறார். குறிப்பாகத் தமிழ்க் கவிஞர்கள் போலித்தனமான மனிதர்களைத் தம் கவிதைகளில் மிக நேர்த்தியாகப் பதிவு செய்துள்ளனர். கவிஞர் வாலி ஒரு கவிதையில் போலித்தனமாகப் பேசுபவர்களை நகைச்சுவையாகக் கவிதையாக்கியுள்ளார்.

**வாக்காளப் பெருமக்களே!**
**நான் உங்கள் வேட்பாளன்**
**நீங்கள் என்னைத் தேர்ந்தெடுத்தால்**
**ஜாதிகளை ஒழிப்பேன்;**

**வீதிகளில் உள்ள**
**ஜாதிகளின் பெயர்களை அழிப்பேன்**

ஜாதி என்ற வார்த்தை உள்ள பக்கத்தை
அகராதியில் இருந்தே கிழிப்பேன்;

நீ அந்த ஜாதி
நான் இந்த ஜாதி
என்று பேசுவோரால் தான்
தேசம் கெட்டுவிட்டது! எனவே

ஜாதியில்லாத
சமூகத்தை அமைக்க
எனக்கே ஓட்டுப் போடுங்கள்
நினைவில் இருக்கட்டும்

நான்
உங்கள் ஜாதிக்காரன் (பொய்க்கால் குதிரைகள், ப.6)

என்கிறார். வாலி இக்கவிதையின் முழுக்கருத்தும் உண்மைபோலத் தெரிகிறது. ஆனால், இறுதி வரியில் 'போலியான ஒருவன் பேசும் பேச்சாகத் தெரிகிறது'. இதனைத்தான் மிகவும் சுருக்கமாகவும் தெளிவாகவும் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதைகளில் பதிவு செய்துள்ளார்.

பாவமென்று பேசுபவர், வினையின் வந்து
பலனென்று கூறுபவர், பணிந்து நின்று
தேவனென்று போற்றுபவர், திரையின் பின்னர்
சிறுமைக்குத் துணைபோகும் செயலும் பார்த்தோம்!
. . . . . . .
வையந்தன்னில்
கோல் பிடித்துக் குடியாட்சிக் கொலுவில் நின்றோர்
கொடுமையிலா நல்லாட்சி எங்கு செய்தார்?
ஆல்விடுத்த விழுதனைய மக்கள் தாங்கும்
ஆட்சிமுறை ஏட்டிலன்றி நாட்டில் இல்லை (கு.க., ப.503)

என்று போலியாகப் பேசுபவர்களையும், ஆட்சி செய்பவர்களையும், ஏட்டில் உள்ளதை மட்டும் பார்ப்பதையும் வேதனையோடு போலி எனக் கூறுகிறார்.

## போலித் தமிழ் உணர்வினர்

மொழி உணர்வில் எல்லா மக்களையும் ஓரணியில் சேர்ப்பது எளிமை. கடந்த கால வரலாறு அதனை மெய்ப்பிக்கிறது. ஆனால்

மொழி, இனம் என்று பேசுபவர்கள், போலி இன, மொழி உணர்வு கொண்டவர்கள் என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் 'அணியெனப் பூண்டவை' என்னும் தலைப்பில் கவிதை அமைத்துள்ளார்.

**பிணியினும் மருந்து**
**பீடை ஆனது**
**அணியெனப் பூண்டவை**
**அட்டை ஆயின**

**தனியெனத் தமிழெனத்**
**தருக்கி னோரெலாம்**
**தனியராய்த் தமிழரைத்**
**தவிக்க விட்டனர்!** (கு.க., ப.528)

என்று கவிஞர் போலியைக் கட்டவிழித்துக் காட்டி, மிகவும் அற்புதமாக ஒரு கருத்தை முன்வைக்கிறார்.

**நம்நிலம் நம்மினம்**
**நம்மொழி என்றவர்**
**தம் வயி றோம்பும்**
**தலைவர் ஆயினர்** (கு.க., ப.528)

என்கின்றார். இது உண்மை, மொழி, இனம் என்று கூறியவர்கள்த எல்லாம் இன்று தம் வயிறு வளர்க்கும் தலைவர் தலைவர் ஆகிவிட்டனர்.

கவிஞர் குலோத்துங்கன் இக்கவிதையில் தமிழ்மொழியைப் போலியாக வளர்ப்பவர்களைக் கடுமையாகச் சாடுகிறார். மேலும் போலியானவர்களை அடையாளப்படுத்துகிறார்.

**விதையெனத் தந்ததை**
**விருந்தென உண்டனர்;**

**தாய்மொழி என்பதை**
**மேய்ச்சல் காடென**
**விளைச்சல் வயலென**
**வாய்த்ததாய், வேண்டும்**
**வரமெலாம் தருவதாய்ப்**
**பயன்படு பொருளாய்ப்**
**பார்த்தனர்** (கு.க., ப.529)

இக்கவிதையில் போலியாகத் தமிழ்மொழியை வளர்ப்பவர்களைக் கண் முன் காட்சிப்படுத்தி விட்டார். தமிழை வளர்ப்பதற்குப் பதிலாகச் சிலர் உற்பத்தி செய்யும் நிலமாக அதில் விளைந்து மகசூல் தரும் இலாபப் பொருளாகத் தமிழைப் பார்க்கின்றனர் என்கிறார். இன்று இது முற்றிலும் உண்மை; மறுப்பதற்கில்லை.

இன்றைய வளர்ச்சியைப் பேசுபவர்கள் எதையும் செய்வது இல்லை. எல்லாமே பொய், பித்தலாட்டம் என்பதைக் கவிஞர் குலோத்துங்கன் தம் கவிதையில் வேதனையோடு பதிவு செய்துள்ளார்.

சமத்துவம் என்பீர்; மக்கள்
தன்மையாம் உயர்பீடத்தில்
அமர்த்துவம் என்பீர்; ஆழ்ந்து
ஆய்ந்துபின் பொருண்மை காணும்

பகுத்தறி வென்பீர்; யாவும்
பகுத்துணும் சமத்து வத்தை
வகுத்தனம் என்பீர்; பண்டை
மரபெலாம் விஞ்சி நின்று

புதுமைகள் படைத்தோ மென்பீர்
புரட்சியின் விழுனம் வேரும்
எதுவெனக் கண்டோ மென்பீர்;
எழுதினால் பேசினால்யாம்

எரிமலை என்பீர்; தீமை
எதிர்த்திட அவதரித்த
அரியென்பீர்; சிவனே யென்பீர்;
அடிமுதல் முடியும் காணப்

படித்தனம்; உமது போக்கைப்
பார்த்தனம்; பழமை தன்னை
வடித்ததிற் புதிய கோடு
வரைந்துளீர் என்பதல்லால்

வழிவழி நடந்த பாதை
மறந்திடக் காணேன்; முன்னர்
இழிவெனச் சொன்ன வற்றை
எதிர்ப்பதில் வலிமை காணேன் (கு.க., ப.532-32)

என்று போலியான மனிதர்களின் கூற்றினை இக்கவிதையில் கவிஞர் விளக்கியுள்ளார்.

மேலும் கொள்கையற்றவர்களைப் பற்றியும் கவிஞர் கவிதையில் புனைந்துள்ளார். இன்றைய நிலையில் ஒரு கொள்கையுடையவர் யாரையும் பார்க்க முடியாது. காரணம்,

**சாலையின் தலத்திரில்லை**
**சமயத்திற்கேற்றவாறு**
**காலையின் ஒன்று**
**கடும்பகல் கொள்கை ஒன்று;**
**மாலையில் கொள்கை ஒன்றாய்**
**மாறுவோர்** (கு.க., ப.534)

என்று கொள்கை பேசுபவர்கள் உண்மையில்லாத பொய்யான போலியான வேசம் போடுபவர்கள், அவர்களைப் பொறுத்தவரையில் கொள்கை காலையில் ஒன்றாகவும், மாலையில் ஒன்றாகவும் இருக்கிறது என்று கவிஞர் குலோத்துங்கன் கூறுகிறார்.

இவ்வாறாகக் கவிஞர் இச்சமுதாய மானிட வாழ்க்கையில் போலித்தனமான மனிதர்கள் இருக்கிறார்கள் என்பதை மிகத் தெளிவாகத் தம் கவிதையின் மூலமாக அடையாளம் காட்டுகின்றார். வாழ்க்கையில் எல்லாத் தன்மைகளிலும் மனிதன் இருக்கின்றான் என்பதைக் கவிஞரின் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

## நடப்பியல் குறித்த பார்வை

கவிஞரின் பார்வையில் மனிதன் எப்படி இன்று உள்ளான் என்பதை நடப்பியல் சார்ந்து கவிதையில் வெளிப்படுத்துகிறார். இலக்கியத்தில் இந்த நூற்றாண்டில் மிக அதிகமாகப் பேசப்படும் செய்தி நடப்பியல் ஆகும். ஆங்கிலத்தில் Realism எனப்படும் இச்சொல் தமிழில் நடப்பியல், எதார்த்த வாதம் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது. வாழ்க்கை எதார்த்தத்தை உள்ளது உள்ளபடியே சித்திரிப்பது தான் நடப்பியல் என்பர். படைப்பிலக்கியத்தில் மனித வாழ்வின் நிகழ்ச்சிகளை நடந்தவாறே சித்திரிக்கும் போக்கே நடப்பியலாகும்.

பொதுவாக இந்தத் தன்மை எல்லாக் கவிஞர்களிடமும் இருக்கும். ஆனால் குலோத்துங்கன் கவிதையில் நடப்பியல் சிந்தனை என்பது உள்ளது உள்ளவாறு அமைந்துள்ளது. பொதுவாக உழைத்து

வாழ்வில் முன்னேறியவர்களைப் பார்த்துச் சமுதாயம் பாராட்டுவது இல்லை. பொறாமைப்படுவது தான் அதிகம் அதனைக் கவிஞர் உண்மையாகவே பதிவு செய்கிறார்.

**வெயர்வு சிந்தி வெற்றிப் பாதையில்**
**முயன்று சென்று நீ முடியும் சூடினால்**
**உலகம் உனக்கு வைத்திருக்கும் பரிசுகள்**
**ஒன்றல்ல; இரண்டல்ல; மூன்று;**

**உதட்டளவில் பாராட்டு; உள்ளத்தில் பொறாமை**
**ஒருசிலர் பகைமை; அதனால் என்ன?**
**சாதனைப் பாதையில் தளராது நட;** (கு.க., ப. 144)

என்கின்றார். யாரும் உண்மையாகவே பாராட்ட மாட்டார்கள் என்பது எதார்த்தம். அதனைக் கவிஞர் கவிதையில் தெளிவாகக் கூறியுள்ளார். இது போன்ற வரிகள் கவிஞனின் கவியுள்ளத்தைக் காட்டுகின்றன.

மேலும் மற்றொரு கவிதையில் தண்ணீர்ப் பிரச்சினையையும் ஆறுகளை அணைகட்டித் தடுப்பதையும், அறம் மறுப்பதையும் கவிதையில் புனைந்துள்ளார். இன்றைய நிலையில் ஆற்றை மறைத்து அணை கட்டித் தண்ணீர் தர மறுக்கின்ற, கர்நாடக, கேரள மாநிலங்களின் செயலை இக்கவிதையில் காணமுடிகின்றது.

**அறிவியலில், மானிடர்தம் ஆய்வுணர்வில்**
**சிந்தனையில் அவை விளைத்த**

**பொறியியலில், சமுதாயப் புரட்சிகளில்**
**மலர்ந்தபுது வைய வாழ்வின்**

**குறியுளதோ சிற்றூரின் குடிகளிடை?**
**குடியாட்சிக் கொள்கை கண்ட**

**நெறியிதுவோ? சமுதாயம் நிறைவினிலே**
**மலரும் வழி நினைத்தே னில்லை**

**ஆறுதரும் செல்வத்தை அணையிட்டுத்**
**தேக்குகிறார்; அருவி கொண்ட**

**வீறுதனைப் பயன்படுத்தி மின்விசையாய்**
**மாற்றுகிறார்; விரைவில் யாவும்**

**மாறுவது காண்கின்றேன்; வளநாடு**
**பணிபுரிய வாராய் என்று**

**கூறுவதும் கேட்கின்றேன்; குடிசெய்ய**
**வாழுமறம் கொண்டேனில்லை** (கு.க., ப.154-155)

இக்கவிதை அறிவியல் வளர்ச்சியில் வாழ்வியல் அறம் மறந்த நிலையைக் காட்டுகிறது. அறிவியல் கண்டு பிடிப்பு இன்று ஆபத்தை விளைவிக்கிறது என்கின்ற நடப்பியல் கருத்தை முன்வைக்கிறது இக்கவிதை.

மேலும் நடப்பியலைப் பன்முகப்பட்ட சமூகச் சிக்கல் களோடும், வர்க்கச் சிந்தனையோடும், அரசியல், தொழிலாளர் சிக்கல்களோடும், நடைமுறை வாழ்வியல் சிக்கல்களோடும் கவிஞர் கவிதையாக்கியுள்ளார்.

**ஓடிய கால்கள் அலுத்தன-தேடும்**
**உலகினைக் காணேனே: நனி**
**நாடிய கண்கள் இருண்டன-அப்பொருள்**
**யாண்டும் தெரிந்திலதே; மிகத்**

**தேடிய சிந்தை மகிழ்ந்திட-அங்கு**
**தெளிவேதும் காணோமே; அட**
**வாடிய என்னடி சென்றிடும்-பாதை**
**வளர்வதும் தீரா தோ?**

என்று ஏக்கத்தை முன் வைக்கும் கவிஞர் கவிதையை,

**ஆளும் பெருந்திறன் ஆசையின்-தாகம்**
**அடங்குதல் எவ்வணமோ?**

**உளம்**
**மூளும் அறிவுப் பசிநெருப்பாற நான்**
**மூழ்குவ தெக்கடலோ?** (கு.க., ப.79)

என்று முத்தாய்ப்பான வரிகளைக் கொண்டு முடிக்கின்றார். இன்றைய நடப்பியலை இதனை விட யாரும் இவ்வளவு தெளிவாகக் கூறிவிட முடியாது.

## வாழ்வியல்

மனிதனின் வாழ்க்கையைப் பற்றிக் கவிஞர் தம் கவிதைகளில் பல இடங்களில் கூறியுள்ளார். இன்று இயந்திரமான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கின்ற சூழ்நிலையை மிகவும் தத்துவார்த்த முறையில் கவிஞர் முன்வைக்கிறார்.

**நேரமன் றறியோம்; சற்றும்**
**நின்றிடோம்; பயனமொன்றே**
**சாரம் என் றுறுதி கொண்ட**
**தன்மை போல் ஓடுகின்றோம்** (கு.க., ப.81)

இக்கவிதையை உண்மையாகத் தெரிந்து கொள்ளச் சென்னையில் ஒருநாள் வாழ்ந்தாக வேண்டும். 'காலை நேரத்தில் ஆட்டோவில் செல்லுபவர், பேருந்தில் செல்பவர், இரயிலில் செல்பவர் எல்லோரும் தாம் இறங்க வேண்டிய இடம் வந்ததும் இறங்கி வேகமாக ஓடுவதைப் பார்க்கலாம். சென்னை வாழ்க்கையில் நடப்பவர்களைப் பார்ப்பதை விட ஓடுபவர்களைத்தான் அதிகமாகப் பார்க்க முடியும். அதனை மிக நேர்த்தியாகக் கவிஞர் குலோத்துங்கன் நான்கு வரிகளில் எழுதியுள்ளார்.

மேலும் வாழ்க்கையின் அமிசத்தைக் கவிதையாக்கும் போது மக்களின் மனங்களை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறார்.

**சோதனைத் தீயினில் வெந்து நிமிர்ந்தவர்**
**தோல்வியை ஏற்பதில்லை-அட**
**சாதனைப் பாதையில் முன்னடி வைத்தவர்**
**தாகம் தணிந்ததிலை** (கு.க., ப.74)

இக்கவிதை வாழ்வியலை அப்படியே உணர்த்துகிறது. எப்போதுமே துன்பப்பட்டு உழைத்து முன்னுக்கு வந்தவன் தோல்வியைத் தழுவ மாட்டான். அத்தோல்வியை ஏற்றுக் கொள்ளவும் மாட்டான். அதான் வாழ்க்கை. அதே போலச் சாதனை படைத்தவர்கள் சாதனையின் மீதுள்ள தாகத்தை விடுவதில்லை. மேலும் மேலும் சாதனை படைக்கவே எண்ணுகின்றனர். இவ்வாறாக வாழ்வியலை நன்கு விளக்குகிறார்.

## இளைஞர்களுக்குக் கவிஞர் கவிதை

இன்றைய நிலையில் கல்வி, விஞ்ஞானம், அரசியல் போன்ற எல்லாத் துறைகளிலும் முதியவர்களுக்குத்தான் பதவிகளையும், பட்டங்களையும், விருதுகளையும் வழங்குகிறார்கள். திறமையானவர்கள் இளைஞர்களாக இருந்தாலும் அவர்களின் வயதைக் காரணம் காட்டித் தவிர்த்து விடுகிற போக்கு உள்ளது. சில பதவிகளுக்குத் தலை நரைத்திருக்க வேண்டும் இல்லை என்றால் அப்பதவி கிடைக்காது. இது உலகியல் உண்மை. ஆனால் கவிஞர் குலோத்துங்கன் இது போன்ற நிலையை எதிர்க்கிறார்.

**முன்பிறந்தோம், மன்பதையில் முதல்யாம் என்னும்**
**மூடர்களே! முதுமையென்ன முயன்றா பெற்றீர்?;**
**பின்பிறந்தார் உயர்வு பெறின் பிழையா? வாழ்வியல்**
**பெரிய நிலை இளமைபெறின் பெருமை யன்றோ?**

(கு.க., ப.211)

என்று நிருவாகத்துறைகள் அத்தனையையும் கேள்வி கேட்கிறார். மேலும்,

**நரைமுடியில் மேதையிலை; நகரும் நாட்கள்**
**ஞானப்பால் வார்ப்பதிலை சரிதை ஏட்டில்**
**அரைநொடியில் பொற்காலம் ஆதல் கூடும்**
**ஆண்டுபல இரவுகள் போல் அகலக் கூடும்** (கு.க., ப.211)

என்று நரைமுடியில் மேதையில்லை என்று ஆணித்தரமாகக் கூறுகிறார். இக்கவிதை இச் சமுதாயத்தை நோக்கிக் கேள்வி கேட்பதாக அமைகிறது. இக்கவிதைதான் இச்சமுதாய அமைப்பிற்கான சாட்டையடிக் கவிதை.

மானுடச் சிந்தயைக் கவிஞர் 'தமிழ் மக்கள் விழிப்புற வேண்டும் என்பதற்காகப் படைத்துள்ளார். இக்கவிதைத் தொகுதி ஒரு புதிய சகாப்தம் ஏற்பட உதவுமாக! தத்துவம் சார்ந்த எண்ணங்களையும், இன்றைய அரசியல், சமுதாய வாழ்க்கையில் எழுந்துள்ள பிரச்சினைகளையும், கருத்தும் உணர்வும் கலந்து நிற்கும் கவிதைகளாகப் படைத்திருக்கிறார். சுருங்கக் கூறினால் இன்றைய பிரச்சினைகள் இத்தொகுப்பில் இலக்கிய வடிவம் பெற்றுள்ளன என்ற சி. சுப்பிரமணியத்தின் கருத்தைக் கொண்டு முடிக்கலாம்.

''வாழ்க குலோத்துங்கன்
வளர்க அவரது கவிதை வளம்!''

# குலோத்துங்கனின் பிறப்பு முதல். . .

கரூர் மாவட்டம் வாங்கலாம்பாளையம் என்ற சிற்றூரில் 14.07.1929இல் பிறந்தவர். இந்தியா, ஜெர்மனி, அமெரிக்கா ஆகிய நாடுகளில் கல்வி பயின்றவர். நீர்வளத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றவர்.

நீர்வளத் துறைப் பேராசிரியர்; தமிழகத் தொழில்நுட்பக் கல்வி இயக்குநர்; UNESCO ஆலோசகர்; மதுரை காமராசர் பல்கலைக்கழகம், அண்ணா பல்கலைக்கழகம், இந்திரா காந்தி தேசியத் திறந்த நிலைப் பல்கலைக்கழகம் ஆகியவற்றின் துணைவேந்தர் போன்ற பொறுப்புகளை வகித்தவர்.

நீர்வளத் துறையில் இவரது பங்களிப்பு Kulandaiswamy Model என்ற பெயரில் அத்துறை இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. உலக அளவில் நீர்வளத் துறை அறிஞர்களால் மதிக்கப்படுபவர்.

பல்கலைக்கழக மானியக் குழுமம் (U.G.C.), அனைத்திந்தியத் தொழில் நுட்பக் கல்விக் கழகம் (AICTE), அனைத்திந்தியத் தொழில் பயிற்சிக் கல்விக் குழு, தமிழகத் திட்டக் குழுமம் போன்ற பல நிறுவனங்களில் உறுப்பினராக இருந்தவர். சர்வ தேசியத் தொலை நிலைக் கல்விக் கழகத்தில் ஆசியாவின் துணைத் தலைவராகவும் (Asian Vice-President; International Association for Distance Education), காமன் வெல்த் நாடுகளின் பல்கலைக்கழகக் கழகத்தில் (Association of Common Wealth Universities, London) தலைவராகவும், இந்தியப் பல்கலைக் கழகங்கள் கழகத்தின் (Association of Indian Universities) தலைவராகவும் இந்திய தொழில் நுட்பக் கல்விச் சங்கத்தின் (Indian Society for Technical Education) தலைவராகவும் பணியாற்றியவர்.

ஆர்வம் காட்டும் மற்ற துறைகள்: தமிழ் வளர்ச்சி, தமிழ் இலக்கியம், தமிழ் எழுத்துச் சீரமைப்பு. 'பொன்னி' இதழ் 1948இல்

பாரதிதாசன் பரம்பரையில் அறிமுகப்படுத்தியது. 'குலோத்துங்கன்' என்ற புனை பெயரில் இவருடைய கவிதைகள் ஏழு தொகுதிகளாக வெளிவந்துள்ளன. இவருடைய உரைநடை நூல்கள் பல்கலைக்கழகங்களில் பாட நூல்களாக இடம்பெற்றன. தமிழ் வரிவடிவச் சீரமைப்பு இவர் மிகுந்த ஈடுபாடுகாட்டும் மேம்பாட்டுப் பணி ஆகும். யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் 1980இல் D.Litt., பட்டம் கொடுத்துச் சிறப்பித்தது. கௌரவ டாக்டர் பட்டம் வழங்கியுள்ள மற்ற பல்கலைக்கழகங்கள்: அழகப்பா பல்கலைக்கழகம், D.Sc., (1997); பாண்டிச்சேரி பல்கலைக்கழகம், D.Litt., (1997); ஜவகர்லால் நேரு தொழில் நுட்பப் பல்கலைக்கழகம், Ph.D., (1999); இந்திராகாந்தி தேசியத் திறந்த நிலைப் பல்கலைக்கழகம் D.Litt., (2000); கர்நாடகா திறந்த நிலைப் பல்கலைக்கழகம், மைசூர், D.Litt., (2002); Dr. B.R. அம்பேத்கர் திறந்த நிலைப் பல்கலைக்கழகம், ஹைதராபாத், D.Litt., (2002).

இவர் பெற்றுள்ள விருதுகள் பல. அவற்றுள் குறிப்பாகச் சில: 'வாழும் வள்ளுவம்' என்ற நூலுக்குச் 'சாகித்ய அகாதெமி' விருது (1988); இந்திராகாந்தி தேசிய ஒருமைப்பாடு விருது (1988); கல்விக்காக U.G.C. விருது (1990); மைய வேளாண்மை வாரியத்தின் வைர விழாச் சிறப்பு விருது (1991); தமிழக அரசின் திருவள்ளுவர் விருது (1999); ராஜா சர்அண்ணாமலை செட்டியார் விருது (2005); டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் விருது (2008); முரசொலி கலைஞர் விருது (2008); தமிழ்நாடு அறக்கட்டளை, U.S.A. சாதனையாளர் விருது (2008); அண்ணா நூற்றாண்டின் பாவேந்தர் பாரதிதாசன் விருது (2009); போன்றவற்றைப் பெற்றிருக்கிறார்.

இந்தியப் பொறியியலாளர் நிறுவனம், இந்தியாவின் சிறந்த பொறியியல் வல்லுநர்களில் ஒருவராக அறிவித்தது (1991). வான்கூவர் (கனடா) காமன்வெல்த் கல்வி நிறுவனம் (சிசிலி) அதன் கௌரவ உறுப்பினராக (Honorary Fellow) ஆக்கிப் பெருமைப் படுத்தியது (1999).

குடியரசுத் தலைவர், கல்வி-அறிவியல் துறையில் இவர் செய்த பணிகளுக்காக 1992இல் 'பத்மஸ்ரீ' விருதையும், அறிவியல்-தொழில் நுட்பத் துறையில் இவர் செய்த சேவை, படைத்த சாதனைகளுக்காக 2002இல் 'பத்ம பூஷண்' விருதையும் வழங்கிக் கௌரவித்தார்.

இந்தியாவில் உள்ள தொழில்நுட்பக் கல்வி நிறுவனங்களில் தலையாயதான I.I.T. Kharagpur, அதன் 50ஆவது ஆண்டு நிறைவு விழாவினையொட்டி அந்நிறுவனத்திலிருந்து அதுவரை பட்டம் பெற்ற 35000த்திற்கு மேற்பட்ட பழைய மாணவர்களில் தலைசிறந்த இருவரில் ஒருவராக இவரை 2003இல் தேர்ந்தெடுத்தது.

தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர், தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் (Tamil Virtual Academy) நிறுவனத் தலைவர், மைய அரசு நிறுவியுள்ள செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் Apex Committee துணைத் தலைவர் போன்ற பல பொறுப்புகளை வகித்து வருகிறார்.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை – 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–1) | 135.00 |
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–2) | 140.00 |
| திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும் | 135.00 |
| பாணர் இனவரைவியல் | 110.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை | 70.00 |
| உதயணகுமாரகாவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள் | 50.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–1) | 175.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–2) | 200.00 |
| விடுதலைச் சிந்தனையாளர் வ.உ.சிதம்பரனார் தமிழியல் பண்புகள் | 80.00 |
| சுவடிப்பதிப்பு முன்னோடிகள் | 60.00 |
| திருமுறைகளில் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும் | 75.00 |
| பெரியாரிய நோக்கில் மு.வ. | 55.00 |
| திணை வரலாறு | 70.00 |
| நரம்புக் கருவிகள் | 70.00 |
| மொழிஞாயிறு தேவநேயப்பாவாணரின் பன்முக ஆளுமை | 50.00 |
| சிந்தனைச்சிற்பி ம.சிங்காரவேலரும் தந்தைபெரியாரும் | 105.00 |
| பெ.நா.அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள்–தொகுதி–3 | 235.00 |
| கவிஞர் புதுவைச் சிவத்தின் சீர்திருத்த நாடகங்கள் | 120.00 |
| சித்தர்களின் நெறியில் வேதாத்திரிய யோகம் ஓர் ஒப்பாய்வு | 105.00 |
| சேக்கிழாரும் இசைத்தமிழும் | 50.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| உலகச் செம்மொழிகள் | 90.00 |
| தலித் அறம் | 45.00 |
| தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர்ஆன் தமிழ் வாசிப்பும் | 45.00 |
| ஆய்வியல் சிந்தனை | 45,00 |
| சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல் | 80.00 |
| பெயரியல் | 55.00 |
| மதங்களும் மனிதநேயமும் | 90.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும் | 85.00 |
| சிலப்பதிகார இலக்கியக் கூட்டமைப்பு | 160.00 |
| பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதார சிந்தனைகள் | 65.00 |
| தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| கிறித்தவக் காப்பியங்கள் | 225.00 |
| சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | 50.00 |
| குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |

---

**759 குலோத்துங்கனின் கவிதைவளம் 60.00**